THE MADRAS LEGISLATIVE ASSEMBLY.

---

**Wednesday, the 10th August 1960.**

The House met in the Assembly Chamber, Fort St. George, at half past eight of the clock, Mr. Speaker (THE HON. DR. U. KRISHNA RAU) in the Chair.

I.—QUESTIONS AND ANSWERS.

## STARRED QUESTIONS.

*Palar Basin Rules*

*61 *Q*.—SRI S. M. ANNAMALAI: கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) 1931-ம் வருடத்திய பாலாறு பேசின் விதிகள் (Palar Basin Rules, 1931) கிளை நதிகளுக்கும் பொருந்துமா ?

(ஆ) அப்படியாயின், எந்தெந்த நதிகளுக்கு ?

(இ) இதை ரத்து செய்ய உத்தேசம் உண்டா ?

THE HON. SRI P. KAKKAN: (*a*) & (*b*) The Palar Basin Rules of 1931 will apply to all channels branching off from the Palar river.

(*c*) No, Sir.

SRI S. M. ANNAMALAI: ஸார், வட ஆற்காடு மாவட்டத்தில் சரிவர மழையே கிடையாது. ஆறுகளும் அதிகம் கிடையாது. இருக்கக் கூடிய ஆறுகள் அனைத்தும் பாலாறில்தான் கலக்கின்றன. அத்தனை ஆறுகளுக்கும் பாலாறு பேஸின் விதிகள் இருக்கின்ற காரணத்தினுல் அந்த ஆறுகளின் ஓரத்தில் கிணறுகள் தோண்டக்கூடாது, ரிவர் பம்பிங் ஸ்கீம் கூடாது, பம்ப் செட் கூடாது என்ற நிலையில் மக்கள் அவதிப் படுகிருர்கள். இந்தக் கஷ்டத்தை அகற்ற இதை மறு பரிசீலனை செய்து அந்த விதியை நீக்க அமைச்சர் அவர்கள் நடவடிக்கை எடுப்பார்களா ?

THE HON. SRI P. KAKKAN: தண்ணீர் கஷ்டம் இருக்கின்ற காரணத்தினுல்தான் இந்த விதிகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. கஷ்டம் இல்லாமல் கீழே ஓடக் கூடிய தண்ணீரைத் தரவேண்டு மென்று ஏற்கெனவே ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இதிலே 2,000 அடிக்கு அப்பால் வெட்டிக் கொள்வதற்கு ஆட்சேபணை கிடையாது. எல்லோருடைய நன்மையையும் கருதித்தான் இந்த விதிகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன.

SRI S. M. ANNAMALAI: ஸார், பாலாறு சம்பந்தப்பட்ட வரையில் இந்த விதிகளை நீக்காவிட்டாலும் பாலாற்றின் கிளை நதிகளைப் பொறுத்த மட்டிலாவது இதை நீக்க முயற்சிப் பார்களா ?

[10th August 1960

THE HON. SRI P. KAKKAN: கிளை நதிகளைப் பொறுத்த மட்டிலும்கூட அங்கேயும் 2,000 அடிக்கு அப்பால் கிணறு வெட்டிக் கொள்ளலாம்.

SRI A. A. RASHEED: Will the Government consider the question of at least relaxing the rules if not repealing them, since the rules prove to be irksome and stand in the way of larger irrigation in the Palar Basin?

THE HON. SRI P. KAKKAN: In some cases rules are relaxed after gettingt the report of the Collector and the Chief Engineer concerned.

*Soil Conservation Scheme*

* 62 *Q*.—SRI M. A. B. ARUMUGHASAMY: கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) மண் வளப் பாதுகாப்புத் திட்டத்தின் கீழ் (Soil Conservation Scheme) மதுரை ஜில்லாவில் எந்தெந்த பிளாக்குகளுக்கு எவ்வளவு தொகை ஒதுக்கப்பட்டது ?

(ஆ) விவசாயிகளுக்குக் கொடுக்கப்படும் தொகை இனமாகக் கொடுக்கப்படுகிறதா அல்லது கடனாகக் கொடுக்கப் படுகிறதா ?

(இ) எந்த அடிப்படையில் ?

(ஈ) கடனாகக் கொடுக்கப்பட்டால் எத்தனை வருஷத் தவணையில் திருப்பிச் செலுத்த வேண்டும் ?

THE HON. SRI M. A. MANICKAVELU: (*a*) Soil Conservation works are in progress in the Athur, Batlagundu, Kodaikanal and Bodinaickanur Blocks in Madurai district.

Allotment of funds is not made blockwise. A sum of Rs. 3·56 lakhs has been allotted to Madurai district for 1960–61.

(*b*) The ryots' share is advanced as loan.

(*c*) According to the existing pattern of financial assistance, the Government of India will share $12\frac{1}{2}$ per cent of the cost of soil conservation works, fifty per cent of the afforestation expenses and $12\frac{1}{2}$ per cent of the cost of the workcharged staff, subject to an equal amount being shared by this Government. The State Government will have to bear in addition 90 per cent of the cost of machinery. The remaining 75 per cent of the cost of soil conservation measures,, 75 per cent of the cost of the work-charged staff, the entire expenditure on the non-work charged staff *plus* contingencies and 10 per cent of the cost of the machinery are obtained from the Government of India by the State Government by way of loans. This amount of loan is recovered from the ryots.

(*d*) In equated annual instalments not exceeding twenty.

10th August 1960]

SRI M. A. B. ARUMUGHASAMY: ஸார், தற்சமயம் கோடைக்கானல் தாலூக்காவில் மலைப் பிரதேசத்திலுள்ள தோட்டங்களில் கட்டப்படும் கற்சுவர்களுக்கு சர்க்கார் கொடுத்துவரும் ஸப்ஸிடியை உயர்த்திக் கொடுக்கும் உத்தேசம் உண்டா? உயர்த்திக் கொடுத்தால் இந்தத் திட்டம் நல்ல முறையில் செயல்படும் என்று சர்க்கார் உணருகிறார்களா?

THE HON. SRI M. A. MANICKAVELU: ஒன்றுமே வசூல் செய்யாமல் செய்தால்கூட நன்றாகத்தான் இருக்கும். இதிலே மாநில அரசாங்கம் பாதி கொடுக்க வேண்டியிருக்கிறது. மத்திய அரசாங்கம் கொஞ்சம் கொடுக்கிறது. இது இந்த மாதிரித்தான் இருக்க வேண்டும். இந்த விதிப் பிரகாரம்தான் வேலையும் நடந்து வருகிறது.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR: Is there any proposal before the Government to take up soil conservation work even in the non-block areas?

THE HON. SRI M. A. MANICKAVELU: I take it that it is not confined to block areas only but to other areas also.

SRI N. R. THIAGARAJAN: ஸார், மதுரை ஜில்லாவிற்குரிய இரண்டாவது ஐந்தாண்டுத்திட்டப் புத்தகத்தில் கோடைக் கானல் மலைப்பகுதியில் 1,250 ஏக்கர் அளவுக்கு இந்த திட்டத்தை நிறைவேற்றுவது என்று பரிசீலனையில் இருக்கிறது என்று சொல்லி அதற்காக 6.92 லட்சம் ரூபாய் ஒதுக்கி வைத்திருப்ப தாகச் சொல்லப்பட்டிருக்கிறது. பெரியகுளம் தாலூக்காவில் போடிக்கு அருகில் இந்தத் திட்டம் எடுத்துக் கொள்வதற்கு ஸாங்ஷன் செய்யப்பட்டுள்ளதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. திருமங்கலம், பழனி தாலுக்காக்களிலும் இந்த வேலை நடை பெறும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இருந்தும் இது வரையில் ஒரு வேலையும் நடைபெறவில்லையே. இந்த வேலை இனிமேலாவது நடைபெறுவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வார்களா?

THE HON. SRI M. A. MANICKAVELU: இதிலே ஆரம் பத்திலே கொஞ்சம் காலதாமதம் இருந்தது. பிற்பாடு வேலை துரிதமாக ஆவதற்கு ஏற்பாடாகியிருக்கிறது.

SRI V. SUBBIAH: எந்த முறையில் மண்வளப் பாதுகாப்புத் திட்டம் நிறைவேற்றப்படுகிறது?

THE HON. SRI M. A. MANICKAVELU: காற்று அடித்து மண் மேடிட்ட நிலத்திற்கு செடி வைத்து தடுக்கப்படுகிறது. ஸாயில் எரோஷனுக்கு காண்டூர் பண்டிங் முறையில் தடுக்க ஏற்பாடு ஆகியிருக்கிறது. இன்னும் பள்ளம் குழி இருந்தால் அவைகள் சமமாக்கப்படுகிறது.

SRI M. A. B. ARUMUGHASAMY: தற்சமயம் மலைப் பிரதேசங் களில் ஏக்கருக்கு இவ்வளவு என்று கொடுக்கப்படும் தொகை போதவில்லை என்று சம்பந்தப்பட்ட என்ஜினீயர்கள் சர்க்காருக்கு சிபாரிசு செய்திருக்கிறார்களா? அப்படியானால் அதன் மீது சர்க்காருடைய முடிவு என்ன?

[10th August 1960

THE HON. SRI M. A. MANICKAVELU: அந்தத் தகவல் எனக்குத் தெரியவில்லே. இதைப் பற்றி கனம் அங்கத்தினர் குறிப்பாக ஒரு கேள்வி போட்டால் விசாரித்து பதில் சொல்லலாம்.

*Power-boring and hand-boring set*

* 63 *Q.*—SRI K. GOPALA KOUNDER: கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) 1960-ம் ஆண்டு ஜனவரி மீ 1-ம் தேதி முதல் இன்று வரையில் அரசாங்கத்தால் வாங்கப்பட்ட

( i ) பவர் போரிங் செட்டுகள்,

( ii ) கை போரிங் செட்டுகள், எத்தனை ?

(ஆ) இவைகள் எந்தெந்த ஜில்லாவிற்கு எத்தனை கொடுக்கப்பட்டன ?

THE HON. SRI M. A. MANICKAVELU: (*a*) (i) No power-boring sets were purchased from 1st January 1960, till date.

(ii) Eleven hand-boring sets were manufactured at the Government Industrial Engineering Workshop, Madras.

(*b*) The eleven hand-boring sets were distributed as follows :—

(1) Chingleput district—7.

(2) Tiruchirappalli district—3.

(3) Salem district—1.

SRI K. GOPALA KOUNDER: ஸார், மலேப் பிரதேசம் அதிகமாக இருக்கிற தென்னுற்காடு ஜில்லாவுக்கு எத்தனை பவர் போரிங் செட் கொடுக்கப்பட்டிருக்கிறது ? கல் உடைக்கும் இயந்திரங்கள் எத்தனை கொடுக்கப்பட்டிருக்கின்றன ?

THE HON. SRI M. A. MANICKAVELU: இன்னும் 25 ஹாண்ட் போரிங் செட்டுகளுக்கு ஏற்பாடாகிக் கொண்டிருக்கிறது. அவை தயாரானதும் அந்தந்த ஜில்லாக்களுக்கு விநியோகிக்கப்படும்.

SRI K. GOPALA KOUNDER: மலேப் பிரதேசம் அதிகமாக வுள்ள செஞ்சி தாலுகாவுக்கு ஒரு பவர் போரிங் செட்டும், ஒரு கல் உடைக்கும் இயந்திரமும் கொடுக்க அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா?

THE HON. SRI M. A. MANICKAVELU: எந்தெந்தப் பகுதியில் இவை மிக அவசியமோ அதைக் கவனித்து டிப்பார்ட்மெண்டார் வழங்குவார்கள்.

10th August 1960]

Sri V. K. RAMASWAMY MUDALIYAR: There is shortage of power-boring sets in this State. As such may I know whether there is any proposal before the Government to produce more power-boring sets to meet the needs of agriculturists?

The Hon. Sri M. A. MANICKAVELU: There is difficulty in getting more power--boring sets. That is why Government are now manufacturing these hand-boring sets. They are much cheaper and one can get them in reasonably short time.

Sri S. LAZAR: இந்த போரிங் செட்டுகள் குடிதண்ணீர்க் கிணறுகளுக்கும் விவசாயத்திற்கும் பயன்படுகிறது. இவை இப்போதிருக்கும் அளவு போதவில்லை என்ற உண்மையை அரசாங்கம் உணர்ந்திருக்கிறதா? அதிகப்படியான ஹாண்ட் போரிங் செட்கள் வாங்கி விநியோகிக்க அரசாங்கம் நடவடிக்கை எடுக்குமா?

The Hon. Sri M. A. MANICKAVELU: ஏற்கெனவே அதிகமான அளவுக்கு ஹாண்ட் போரிங் செட்களுக்கு ஏற்பாடாகியிருக்கிறது. பவர் போரிங் செட்கள் வாங்க "பாரின் எக்ஸ்சேஞ்ச்" அதிகமாக வேண்டும். போதுமான "பாரின் எக்ஸ்சேஞ்சை"ப் பெறுவதற்காக நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிறோம்.

Sri C. NATARAJAN: கள்ளக்குறிச்சி வட்டார அபிவிருத்தி கவுன்சில் அந்தப் பகுதிக்கு கல் உடைக்கும் இயந்திரம் தனியாகக் கொடுக்க வேண்டுமென்று சிபாரிசு செய்திருக்கிறதா? அதன் மீது சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்துக் கொண்டார்கள்?

The Hon. Sri M. A. MANICKAVELU: இந்த மாதிரி இயந்திரங்களைச் செய்ய உள் நாட்டில் முடியவில்லை. வெளி நாட்டிலிருந்து வாங்க "பாரின் எக்ஸ்சேஞ்ச்" தேவையாக இருப்பதால் அதற்காக ஏற்பாடு செய்து கொடுக்கிறோம்.

Sri M. D. THIAGARAJA PILLAI: தலைவர் அவர்களே, ஹான்ட் போரிங் செட்களுக்கு குழாய்கள் கிடைக்காததனால் கால தாமதம் ஏற்படுகிறது. குழாய்கள் வாங்கி சப்ளை செய்ய நடவடிக்கை எடுக்கப்படுமா?

The Hon. Sri M. A. MANICKAVELU: இந்த மாதிரியான கஷ்டங்கள் நடைமுறையில்தான் தெரிய வருகின்றன. அதைத் தெரிந்த பிறகு டிப்பார்ட்மெண்டார் எப்படி நிவர்த்திப்பது என்று நடவடிக்கை எடுத்துக் கொள்ளுவார்கள்.

*Repatriates from Ceylon*

*64 *Q.*—Sri V. K. KOTHANDARAMAN: கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நெல்லை ஜில்லா இலங்கையிலிருந்து கடல் கடந்து தாயகம் திரும்பியோர் சங்கத்தின் சார்பில் 1959-ம் ஸு செப்டம்பர் மீ 22உ, 1960-ம்ஸு மார்ச்மீ 18-ம் தேதியில்

[10th August 1960

அவர்களின் குறைகளைப் பற்றி கனம் முதல் அமைச்சர், கைத் தொழில் அமைச்சர் அவர்களுக்கும் கனம் உள்விவகார அமைச்சர் அவர்களுக்கும் முறையே மகஜர் கொடுக்கப் பட்டதா ?

(ஆ) அதன் பேரில் எடுத்துக்கொண்ட நடவடிக்கை என்ன?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) Two representations were received on behalf of the Tirunelveli district Ceylon Repatriates' Association, dated 20th September 1959 and 18th March 1960. These representations were addressed to the Chief Minister.

(b) Some measures for the relief and rehabilitation of Ceylon repatriates were suggested in these representations. The Government were already seized of the question of relief to Ceylon repatriates and they had initiated several measures for their rehabilitation. The Association was apprised of the position.

SRI K. RAMACHANDRAN : It is not the case with regard to Tirunelveli District only, it is so in almost all Southern districts. Will the Government consider it desirable to issue directives giving preference to at least qualified Ceylon repatriates in the matter of giving employment? I know a case where a qualified Ceylon repatriate has been without employment for over two years. He has been in search of employment for these two years. Will the Government give concessions to such kind of qualified Ceylon repatriates at least in the matter of employment?

THE HON. SRI C. SUBRAMANIAM : Yes, Sir, very many concessions are being given to Ceylon repatriates. We are also giving assistance to them for the purpose of starting small industries so that they can get themselves established. As a matter of fact reliefs granted to Ceylon repatriates were listed and placed before the table of the House in answer to starred question No. 436.

*Paddy and rice*

* 65 *Q.*—SRI P. G. MANICKAM: கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க் கண்ட கேள்விக்குப் பதிலளிப் பாரா—

தஞ்சாவூரிலும், மற்ற ஜில்லாக்களிலும் 1959–60-ம் வருஷத்தில் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்வதற்காக வியாபாரிகளால் கொள்முதல் செய்யப்பட்ட நெல், அரிசி ஆகியவைகளின் விலை மதிப்பு எவ்வளவு ?

THE HON. SRI M. A. MANICKAVELU : No paddy or rice was procured by the merchants in Thanjavur and other districts during 1959–60 for export to places outside the country, as the export of paddy and rice outside the country is prohibited.

10th August 1960]

SRI K. B. S. MANI: இந்த நெல் அரிசி, மற்றைய ஜில்லாக்களுக்கு அனுப்பப்படவில்லையென்று சொன்னால் இன்றைய தினம் 48 பட்டணம் படி கொண்ட ஒரு மூட்டை $47\frac{1}{2}$ ரூபாய்க்கு விற்கப்படுவதன் காரணம் என்ன ? இது பற்றி அரசாங்கம் பரிசீலனை செய்யுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU: வெளிநாடுகளுக்கு அனுப்புவதற்குத்தான் தடை. தென் ஸோனில் ஒரு மாநிலத்தி லிருந்து மற்றொரு மாநிலத்திற்குப் போகலாம். அந்த அளவிலே கொஞ்சம் நெல், அரிசி கேரளாவுக்குப் போயிருக்கிறது.

SRI A. VEDARATHNAM: கேரளாவுக்கு அனுப்பினாலும் வெளியே அனுப்புவதுதான். கேரளத்திற்கு எவ்வளவு அரிசி அனுப்பப்பட்டிருக்கிறது ?

THE HON. SRI M. A. MANICKAVELU: கேரளத்திற்கு அனுப்பம்ப்பட்டிருக்கிற அரிசியின் அளவு 268,657 டன். ரயில் மூலமாக இரண்டு லட்சத்துச் சொச்சமும் ரோடு மூலமாக 67,614 டன்னும் அனுப்பப்பட்டிருக்கிறது.

*Madras State Police Officers' Conference*

* 66 *Q.*—SRI P. G. MANICKAM:
SRI V. K. KOTHANDARAMAN:
SRI S. M. ANNAMALAI:
} கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க் கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

உதக மண்டலத்திலே 1960-ம் வருஷம் மே மாதத்தில் நடை பெற்ற சென்னை ராஜ்ய போலீஸ் அதிகாரிகள் 4-வது மகாநாட்டிலே கலந்தாலோசிக்கப்பட்ட நடவடிக்கைகளின் விவரங்கள் யாவை ?

THE HON. SRI C. SUBRAMANIAM: It will not be in public interest to disclose the details of the proceedings of that Conference.

*President, National Project Workers' Union, Kundah*

* 67 *Q.*—SRI N. K. PALANISAMI: Will the Hon. the Minister for Finance be pleased to state whether the President; National Project Workers' Union, Kundah, was arrested on 22nd April 1960 under the Preventive Detention Act?

THE HON. SRI C. SUBRAMANIAM: No, Sir.

SRI N. K. PALANISAMI: இந்த குந்தா எலெக்ட்ரிசிடி ஓர்க்கர்ஸ் காரியதரிசியை 151-வது செக்ஷன் பிரகாரம் " வாரண்ட் " இல்லாமல் அடைத்து வைக்க வேண்டிய காரணம் என்ன ?

[10th August 1960

THE HON. SRI C. SUBRAMANIAM: அவர் செய்த காரியங்களுக்காகவும், செய்ய இருந்த காரியங்களுக்காகவும் 151-வது செக்ஷன் பிரகாரம் அரஸ்ட் செய்திருக்கிறார்கள். தவறுதலாக அரெஸ்ட் செய்திருந்தால் கோர்ட்டுக்குப் போய் நிவாரணம் பெற சட்டத்தில் இடமிருக்கிறது.

## *Crop Competitions*

* 68 *Q.*—SRI T. S. RAMASWAMI: Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) the maximum yield per acre secured by agriculturists in the District Crop Competitions of last year conducted by the Government through Agricultural department or the Community Project department;

(*b*) the maximum yield per acre in each of the seed farms of our State; and

(*c*) the steps taken to increase the yield in the seed farms?

THE HON. SRI M. A. MANICKAVELU: (*a*) & (*b*): A paper[a] is placed on the table of the House.

(*c*) Provision of adequate irrigation facilities and application of appropriate doses of manures and fertilisers in economic quantities and adoption of improved methods and plant protection measures.

SRI K. RAMACHANDRAN: In the statement placed on the table of the House, Tirunelveli has recorded production of 8,300 lb. It seems to me to be high. May I know what are the methods adopted in that district for having such increased production and if so, will such methods be recommended to other districts also?

THE HON. SRI M. A. MANICKAVELU: More or less same methods are adopted in all districts but the extra production might be due to richness of the soil or timely wetting of the crop and other factors.

SRI S. LAZAR: இந்தக் குறிப்பில் இருந்து தெரிந்து கொள்ளக் கூடியது தனியார் விவசாயப் பண்ணைகளில் 8,000 ராத்தலும், சர்க்காருடைய பண்ணைகளில் 2,000 ராத்தலும் என்ற அளவில் இருக்கிறது. சர்க்கார் பண்ணைகளில் ஏறக்குறைய 4-ல் ஒரு பங்குதான். இவ்வளவு வித்தியாசம் இருப்பதற்குக் காரணம் என்ன? பொது மக்கள் அரசாங்கப் பண்ணைகளை மாதிரிப் பண்ணைகளாக வைத்து முன்னேறவேண்டுமென்று சொன்னால் இவைகளைத் திருத்தியமைத்து நல்ல முறையில் சாகுபடி செய்ய முயற்சி எடுத்துக் கொள்ளப்படுமா?

[a] Printed as appendix on pages 368 and 369 infra.

10th August 1960]

THE HON. SRI M. A. MANICKAVELU: The State Seed Farm yields are practically average yields obtained under average conditions in average types of soil under the new set up. The State Seed Farms are run to produce improved strains of seeds thus stressing on 'quality' whereas in crop competition stress is upon the 'quantity' of any crop.

SRI S. M. ANNAMALAI: மேஜை மீது வைக்கப்பட்டுள்ள அறிக்கையில் தஞ்சாவூர் மாவட்டத்திலுள்ள வேப்பங்குளம் பண்ணையில் 120 ராத்தல் நிலக்கடலை ஏக்கரொன்றுக்கு விளைந்ததாகவும், கோயமுத்தூர் மாவட்டத்திலுள்ள செடி முத்தார் பண்ணையில் 491 ராத்தல் நிலக்கடலை ஏக்கரொன்றுக்கு விளைந்ததாகவும், செங்கற்பட்டு மாவட்டத்தில் சிறுகாவேரிப் பாக்கம் பண்ணையில் ஏக்கரொன்றுக்கு 578 ராத்தல் நெல்லும், 484 ராத்தல் நிலக்கடலையும் விளைந்ததாகவும், இராமநாதபுரம் மாவட்டத்தில் புள்ளூர் பண்ணையில் ஏக்கரொன்றுக்கு 277 ராத்தல் நிலக்கடலை விளைந்ததாகவும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. மேற்படி நான்கு பண்ணைகளில் இவ்வளவு குறைவாக விளைவித்த தற்குக் காரணம் என்ன ?

THE HON. SRI M. A. MANICKAVELU: முன்பே சொன்னேன். நல்ல வித்துக்களாக உற்பத்தி பண்ணவேண்டும் என்பதுதான் அரசாங்கத்தின் முக்கியமான கொள்கை. அதிகப்படியாக உற்பத்தி செய்வது என்பது தனி விஷயம். விதை போட்டால் நன்றாக, செழிப்பாக பயிர் வரவேண்டும் என்பதிலே "கான்ஸென்ட்ரேஷன்" செய்யப்படுகிறது.

SRI V. SUBBIAH: விதைப் பண்ணைகளை அரசாங்கமே எடுத்து நடத்துவதைவிட, இப்பொழுது வரக்கூடிய பஞ்சாயத்து யூனியன்களே விதைப் பண்ணைகளை நடத்தும் முறையில் அவர்களிடம் ஒப்படைக்கும் உத்தேசம் இருக்கிறதா ? அப்படியிருந்தால், அரசாங்கத்திற்கு நஷ்டம் இல்லாமலும் விவசாயிகள் அதில் அக்கரை எடுத்துக் கொள்ளவும் முடியும் அல்லவா ?

THE HON. SRI M. A. MANICKAVELU: அரசாங்கம் நடத்தும் பண்ணையிலேயே அந்த ஆராய்ச்சி முடியவில்லை. அதுதான் இன்னும் "எக்ஸ்பெரிமென்டில்" இருக்கிறது. அதைப் பார்த்த பிற்பாடு எது உசிதமோ அதன் பிரகாரம் செய்யலாம்.

SRI T. S. RAMASWAMI: தனி நபர்களே ஏழாயிரம் எட்டாயிரம் ராத்தல் வரை ஏக்கரொன்றில் உற்பத்தி பண்ணும் போது, நல்ல பயிற்சியும் எல்லா வசதிகளும் பெற்றுள்ள அரசாங்கப் பண்ணைகள் எடுத்துக்காட்டாக இருக்கவேண்டியிருக்க, அவைகளில் மகசூல் ஏன் குறைவாக இருக்கிறது ? அதைக் குறித்து அரசாங்கம் நடவடிக்கை எடுக்க உத்தேசித்திருக்கிறதா ?

THE HON. SRI M. A. MANICKAVELU: நான் முன்பே சொன்னேன் தனிப்பட்ட நபர்கள் நிறைய உற்பத்தி பண்ண வேண்டுமென்ற நோக்கத்தோடு செய்கிறார்கள். ஆனால்,

[10th August 1960

அரசாங்கப் பண்ணைகளிலே நல்ல பொறுக்கு விதைகள், நல்ல "க்வாலிடி" விதைகள், உயர்ந்த ரக விதைகள் உற்பத்தி செய்ய வேண்டும் என்பதற்கு முக்கியத்துவம் கொடுத்துச் செய்வதால் உற்பத்தி சற்றுக் குறைவாக இருக்கிறது. ஆனால், நல்ல சரக்கு.

*Chillies and tamarind*

* 69 *Q.*—SRI A. A. RASHEED
SRI S. M. ANNAMALAI } Will the Hon. the Minister for Revenue be pleased to state the gist of the reply received from the Union Government regarding the export of chillies and tamarind?

THE HON. SRI M. A. MANICKAVELU : The Government of India have replied that the export policy in respect of chillies and tamarind has been carefully reviewed and that due to the considerations of earning foreign exchange and in the long term interests of trade in these commodities they do not consider it advisable to recommend a change in the existing export policy.

SRI A. A RASHEED : Sir, May I know whether the Government have represented to the Union Government the hardships of the consumers as against the producers?

THE HON. SRI M. A. MANICKAVELU : We represented and this is the reply we have received. In the interest of the trade itself and to earn foreign exchange, export should not be totally banned.

SRI S. M. ANNAMALAI: நம் மாநிலத்திற்கு ஆண்டொன்றுக்குத் தேவையான புளி, மிளகாய், எவ்வளவு? வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படுகிற புளியின் அளவுக்குப் பற்றாக் குறை இருக்கிறதா? பற்றாக்குறை இருக்கும்போது வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்வதனால் தமிழ் நாடு பாதிக்கப் படுகிறது. ஆகையால் மத்திய சர்க்காரிடத்தில் புளி, மிளகாய் இவைகளை வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்ய அனுமதிக்கக் கூடாது என்று இந்தச் சர்க்கார் ஏன் வற்புறுத்தக் கூடாது?

THE HON. SRI M. A. MANICKAVELU: இதைப் பற்றி முன்பே எழுதியதற்குப் பதில் வந்தது. இன்னும் வற்புறுத்த வேண்டுமானால் அவர்கள் சரியாகப் புரிந்துகொள்ளவில்லை என்றுதான் அர்த்தம்.

SRI A. A. RASHEED : Sir, Is the Hon. Minister aware that the prices of chillies and tamarind are still high now in our State? Will the Government once again recommend to the Union Government to allow restricted export, if there cannot be a total ban, of these commodities of chillies and tamarind?

THE HON. SRI M. A. MANICKAVELU : Now the foreign exchange is very necessary for more useful purposes and we are also asking for it. In this context it will not be advisable to make any suggestion that will not bring us more foreign exchange.

10th August 1960]

SRI S. M. ANNAMALAI: சென்ற ஆண்டு இதே நேரத்தில் புளி, மிளகாய் விலை எவ்வளவு இருந்தது? இப்பொழுது விலை எவ்வளவு இருக்கிறது?

THE HON. SRI M. A. MANICKAVELU: தகவல் வேண்டுமானால் தனியாகக் கேள்வி போடவேண்டும். புளி, மிளகாய் இவைகளை எவ்வளவுக்கெவ்வளவு குறைக்கிறோமோ அவ்வளவுக்கவ்வளவு உடம்புக்கு நல்லது என்று சொல்வார்கள்.

SRI V. SANKARAN: மத்திய சர்க்காருடைய பதிலிலே, தற்போதுள்ள ஏற்றுமதிக் கொள்கையிலே எந்தவித மாறுதலும் தேவையில்லை என்று இருப்பதாகச் சொல்லப்பட்டது. தற்போதுள்ள மத்திய சர்க்காரின் ஏற்றுமதிக் கொள்கை என்ன என்பதை விவரமாக எடுத்துச் சொல்ல முடியுமா?

MR. SPEAKER: The hon Member must put a separate question.

SRI S. LAZAR: Is the Government aware that the prices of certain other goods like tannery goods are going very high and will this Government recommend to the Union Government to ban the export of these also?

THE HON. SRI M. A. MANICKAVELU: This morning I am concerned only with chillies and tamarind.

SRI V. K. KOTHANDARAMAN: நமது ராஜ்யத்திலிருந்து புளி, மிளகாய் ஏற்றுமதி செய்யக்கூடிய கம்பெனிகள் யாவை என்று சொல்ல முடியுமா?

MR. SPEAKER: தனிக் கேள்வி போட வேண்டும்.

SRI N. R. THIAGARAJAN: ஒரு நாடு முன்னேற வேண்டுமானால், அந்த நாட்டு மக்களின் தேவையை ஓரளவு குறைத்தாவது வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்து பணம் சம்பாதிப்பதை முக்கியமாகக் கருதி, அதே வகையில் புளி, மிளகாய் இவைகளை இலங்கைக்கு ஏற்றுமதி செய்து கொண்டு வந்தோம். அதை மீண்டும் கையாண்டு, அதிகமாக ஏற்றுமதி செய்ய அரசாங்கம் முன் வருமா?

THE HON. SRI M. A. MANICKAVELU: அந்த மாதிரி எல்லோரும் புரிந்துகொள்ளவில்லை. அதுதான் கஷ்டம்.

*Housing scheme for industrial workers*

*70 Q.—SRI M. P. SARATHI: கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் அளிப்பாரா—

(அ) இந்த ராஜ்ய தொழிலாளர்களுக்கு வீடு அமைப்புத் திட்டத்திற்காக ஆயுள் இன்ஷூரன்சு கார்ப்பொரேஷனிடமிருந்து அரசினர்துறைக்கு கிடைத்த கடன் தொகை எவ்வளவு?

(ஆ) ராஜ்ய அரசாங்கம் இத் திட்டத்தின் கீழ் எந்த இடங்களில் எத்தனை வீடுகள் கட்ட முடிந்தது?

THE HON. SRI R. VENKATARAMAN: (a) The Life Insurance Corporation of India is not giving any loan to the State Government for construction of tenements for industrial workers.

(b) Does not arise.

*Sugar*

*71 *Q.*—SRI N. R. THIAGARAJAN: கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் அளிப்பாரா—

(அ) மதுரை ஜில்லாவிற்கு ஒதுக்கப்பட்ட சீனி மூட்டைகள் எத்தனை?

(ஆ) அதில் பெரியகுளம் தாலூகாவிற்கு எத்தனை மூட்டைகள் கொடுக்கப்பட்டன?

(இ) சீனி வாங்கி சில்லறையில் பொதுமக்களுக்கு விற்று பழக்கமில்லாதவர்களுக்கு சீனி பெர்மிட் கொடுக்கப்பட்டதா?

THE HON. SRI M. A. MANICKAVELU: (a) 10,000 bags.

(b) 1,200 bags.

(c) No, Sir.

SRI N. R. THIAGARAJAN: "சர்க்கரை" என்ற சொல் தான் இனிப்பாக இருக்கிறதே தவிர, விநியோக விஷயத்தில் இனிப்பாக இல்லை; கசப்பாக இருக்கிறது. நகரவாசிகளுக்கு அதிகமாக விநியோகிக்கப்படுகிறதே தவிர, கிராமவாசிகளுக்குப் பரவலாக விநியோகிக்கப்படவில்லை என்ற புகார் இருக்கிறது. ஆகவே, ஒரு திட்டவட்டமான கொள்கையை வகுத்து, நகரங்களில் பங்கீடு செய்வதைப்போல் கிராமங்களிலும் சரியாகப் பங்கீடு செய்யப்படவேண்டுமென்று சர்க்கார் சரியான உத்தரவு போடுமா?

THE HON. SRI M. A. MANICKAVELU: திட்டம் போட்டு, எந்த எந்த ஜில்லாவுக்கு எவ்வளவு தேவை இருக்கிறதோ அதைக் கணக்கிலெடுத்து அதற்குத் தகுந்தாற்போல் ஏற்பாடு செய்யப்படுகிறது. இதிலே கஷ்டம் என்னவென்றால், வட நாட்டிலிருந்து சர்க்கரை இங்கு வருவதற்கு ஒரு மாதம் இரண்டு மாதம் ஆகிறது. அதுபற்றி அவர்களுக்குச் சொல்லியிருக்கிறோம். ஒரு மாதம், இரண்டு மாதத்திற்கு முன்பே "லோட்" பண்ணி அனுப்பச் சொல்லியிருப்பதால், இனி காலா காலத்தில் வரும்; அப்பொழுது சரியாகப் போய்விடும்.

SRIMATHI P. K. R. LAKSHMIKANTHAM: மதுரை நகரைப் பொறுத்தவரையில், அங்கு விசேஷ காலங்களிலும் மற்ற காலங்களிலும் சர்க்கரை வேண்டியிருந்தால், தாசில்தாரோ, ரெவின்யூ

10th August 1960]

டிவிஷனல் ஆபீசரோ கொடுக்க மறுக்கிறார்கள். விசேஷ காலங்களில் சர்க்கரை கிடைக்க அரசாங்கம் வகை செய்வார்களா?

THE HON. SRI M. A. MANICKAVELU: அதைச் செய்து கொண்டுதான் வருகிறார்கள். தீபாவளி, பொங்கல் காலத்தில் அதிகமாக சர்க்கரை கொடுக்க ஏற்பாடு செய்கிறார்கள்.

SRIMATHI P. K. R. LAKSHMIKANTHAM: கல்யாண சமயங் களிலே . . .

THE HON. SRI M. A. MANICKAVELU: கல்யாணங்கள் ஒரு வருஷத்திலே ஜாஸ்தி நடக்கலாம், ஒரு வருஷத்திலே குறைவாக நடக்கலாம். அதைப்பற்றி திட்டவட்டமாகச் சொல்ல முடியாது. பண்டிகை என்றால், அந்தந்தக் காலத்தில் தாராள மாக அதிகமாகக் கொடுக்கிறோம்.

SRI K. SATTANATHA KARAYALAR: சர்க்கரை விநி யோகிப்பதற்கு எந்த விதமான நடவடிக்கை எடுக்கப் பட்டுள்ளது? கூட்டுறவு இயக்கத்தின் மூலமாக பெரும் பகுதி கொடுக்கப்படாமல் மிகக் குறைந்த அளவு தானே கூட்டுறவு இயக்கத்தின் மூலமாகக் கொடுக்கப்படுகிறது. பத்து சதமானத் திற்கும் குறைவாகத்தான் கூட்டுறவு இயக்கத்தின் மூலமாகக் கொடுக்கப்படுகிறது. சர்க்கரை விநியோகத்தில் நமக்குப் பரிபூரணமான கட்டுப்பாடு கிடையாதா? கூட்டுறவு இயக்கத் திற்கு முதல் இடம் கொடுக்காமல் பரம்பரை வியாபாரிகள் மூலமாகவே கொடுக்கப்படுவது ஏன்?

MR. SPEAKER: மூலக் கேள்வி, "மதுரை ஜில்லாவிற்கு ஒதுக்கப்பட்ட சீனி மூட்டைகள் எத்தனை" என்பது பற்றியது, "பாலிஸி மாட்டர்" கேட்கப்படவில்லை. மந்திரி அவர்கள் சுருக்கமாகப் பதில் கொடுப்பதாக இருந்தால் எனக்கு ஆட்சேபணை இல்லை. I should have even disallowed the question of the hon. Member Srimathi Lakshmikantham and there is no justification for the hon. Member to put a similar question.

(பதில் இல்லை)

* 72 *Q.*—SRI A. A. RASHEED: Will the Hon. the Minister for Revenue be pleased to state the steps taken to bring down the price of sugar in the Madras City?

THE HON. SRI M. A. MANICKAVELU: Sugar is being sold in Madras City at present at Rs. 118 to 121·44 per bag and Rs. 1·66 to 1·71 per viss, which is the controlled price.

[10th August 1960

Sri A. A. RASHEED : Is the Hon. Minister aware that sugar is not available at the controlled rate in the Madras City and it is sold in fact at Rs. 2–50 in blackmarket and if so, what steps the Government have taken to put down blackmarketing and sell sugar at the control price?

The Hon. Sri M. A. MANICKAVELU : Government have fixed control price but the prices vary in the blackmarket. Blackmarket is a very elusive sort of market. If more sugar is put on the market, blackmarket will have no busy time. The only remedy is for more sugar to be made available and also for the public to boycott the blackmarket.

Mr. SPEAKER : Now the hon. Member, Sri Sattanatha Karayalar, can put his supplementary question in a modified form under this main question.

Sri K. SATTANATHA KARAYALAR : கூட்டுறவு சங்கங்களின் மூலமாக சர்க்கரையை விநியோகித்தால் அதன் விலை குறையும் என்று சர்க்கார் கருதவில்லையா? சர்க்கரையை முழுவதும் கூட்டுறவு மார்கெட் மூலமே விநியோகிப்பதற்கு வேண்டிய நடவடிக்கை எடுக்கப்படுமா?

The Hon. Sri M. A. MANICKAVELU: அதற்குப் போதுமான கூட்டுறவு சங்கங்கள் இருக்கவேண்டும். இம்மாதிரி சர்க்கரை விற்கிறவர்கள் நிறைய இருக்கிறார்கள். மதுரை தாலுகாவில் மாத்திரம் 800 சில்லரை வியாபாரிகள் இருக்கிறார்கள். எல்லா தாலூக்காக்களிலும், பிர்க்காக்களிலும் கூட்டுறவு சங்கங்கள் கிடைப்பது கஷ்டம். ஆகையினால் சாத்தியமான இடங்களில் கூட்டுறவு சங்கங்கள் மூலம் விநியோகிக்கிறோம். மற்ற இடங்களில் "ரீடைலர்ஸுக்கு" கொடுக்கிறோம்.

Sri R. KRISHNASAMI NAIDU: சர்பத் அல்லது மற்ற இனிப்பு பண்டங்கள் தயாரிப்பதற்காக பெர்மிட் வாங்கிக் கொள்ளுபவர்கள், சர்க்கரை மூட்டைகளைக் குறைந்த அளவுக்கு உபயோகப்படுத்திக்கொண்டு, பாக்கியை பிளாக்மார்கெட்டில் விற்பதாக பரவலாக புகார்கள் இருக்கின்றன. கொடுக்கப்படும் பெர்மிட்டுகளின் பேரில் வாங்கப்படும் சர்க்கரை சரிவர உபயோகப்படுத்தப்படுகிறதா என்பதைப் பரிசீலனை செய்து, இம்மாதிரி பாக்கி சர்க்கரை பிளாக்மார்கெட்டில் விற்கப்படுவதைத் தடுக்க சர்க்கார் வேண்டிய நடவடிக்கைகள் எடுப்பார்களா?

The Hon. Sri M. A. MANICKAVELU: இம்மாதிரி சர்க்கரை பிளாக்மார்கெட்டில் விற்கப்படுவதற்கு உபயோகிக்கப்படுகிறது என்று புகார்கள் வரும் சமயத்தில், அவைகளை விசாரித்து தகுந்த நடவடிக்கை எடுக்கப்படும். புகார் வந்தால்தான் தெரியும்.

Sri A. A. RASHEED : In order to reduce the price of sugar, have the Government of Madras asked the Government of India for increased allotment of sugar for our State and if so, what is the reply received from them?

10th August 1960]

THE HON. SRI M. A. MANICKAVELU : We have not only asked for increased supply but have also asked them to send the consignment a little in advance so that it may come here in time. As I said earlier, it takes 1½ to 2 months for sugar to reach Madras after it is loaded in Uttar Pradesh and other States.

SRI P. M. MUNUSAMI GOUNDER: சர்க்கரை விநியோகம் செய்வதில் மற்ற சாமான்கள் வாங்கினால் தான் சர்க்கரை கொடுக்கப்படும் என்ற முறையில் நடந்துகொண்டிருக்கிறது. ஆகையால் புதியவர்கள் போகும்பொழுது சர்க்கரை கொடுக்க மறுக்கிறார்கள். யார் சென்றாலும் கொடுக்கலாம் என்ற முறையை சர்க்கார் ஏற்படுத்தவேண்டும். அதே மாதிரி சர்க்கார் உத்தியோகஸ்தர்களுக்குக் கூட தனிப்பட்ட முறையில் சர்க்கரை விநியோகம் செய்யப்படுவதாகத் தெரிகிறது. அந்தச் சலுகை எல்லோருக்கும் கிடைக்கச் செய்ய சர்க்கார் ஆலோசிக்குமா?

THE HON. SRI M. A. MANICKAVELU: அதிலே என்ன கஷ்டம் என்றால், சர்க்கரையை கண்டிரோல் விலைக்கு வாங்கி பிளாக்மார்கெட்டில் விற்பதற்கென்றே ஆள்கள் இருக்கிறார்கள். அவர்களுக்கு நாள் ஒன்றுக்கு 8 அணா 12 அணா கூலி கொடுக்கப் படுகிறது, கியூவில் நின்று வாங்குவதற்காக. இன்னும் ஏதாவது சாமான் வாங்கவேண்டுமென்று வற்புறுத்துவது, இதை ஓரளவுக்குத் தடை செய்வதுமாதிரி இருக்கிறது.

*Madras-Chingleput District Retail Dealers' Association*

* 73 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether the Government have received a memorandum, dated 3rd March 1960, from the Madras-Chingleput District Retail Dealers' Association, Madras, regarding the difficulties in respect of procurement and distribution of wheat, sugar skimmed milk powder, rice and camphor; and

(*b*) if so, the action taken thereon?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Yes.

(*b*) Under the direction of the Government, the Commissioner of Civil Supplies had looked into the matter and had also given a reply on the 12th April 1960 to the Retali Dealers' Association.

*Five-faced Lingam*

* 74 *Q.*—SRI A. VEDARATHNAM: கனம் மின்சார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) திருச்சி ஜில்லா திருவானைக்காவலில் வடக்குத் தெருவிலுள்ள ஒரு பழைய கோவிலில் சமீபத்தில் பஞ்சமுக லிங்கம் அகப்பட்டதா?

[10th August 1960

(ஆ) அப்படியாயின், அதை அரசாங்கம் என்ன செய்திருக்கிறது?

THE HON. SRI V. RAMIAH: (a) & (b) One anchamuga Lingam was unearthed in 1943 and it was installed in a temple under the order of Sri Sankaracharya Mutt, who are in management of the temple.

SRI A. VEDARATHNAM: இம்மாதிரி பூமியில் அகப்படுகின்ற விக்கிரகங்களையெல்லாம் சர்க்கார் என்ன செய்கிறார்கள்? இது விஷயத்தில் அவர்களுடைய கொள்கை என்ன? சில இடங்களில் அதை அந்தந்த ஆலயங்களில் கொடுத்து பூஜை செய்ய அனுமதிக்கிறார்கள். சில இடங்களில் அப்படி அகப்படுகின்ற விக்ரகங்களை மியூஸியத்திற்குக் கொண்டு போகிறார்கள். அப்படிச் செய்யாமல் அந்தந்த ஆலயங்களில் அந்த விக்ரகங்களைக் கொடுத்து பூஜை செய்வதற்கு அனுமதிப்பார்களா?

THE HON. SRI V. RAMIAH: நல்ல பழுது இல்லாமல் இருக்கும் விக்ரகங்கள் கிடைத்தால், ஆங்காங்கு இருக்கக்கூடிய கோவில்களில் வைத்து பூஜை செய்வதற்கு ஏற்பாடு செய்கிறார்கள்.

SRI M. KARUNANITHI: பஞ்சமுக லிங்கம் என்று கூறப்படுகிறது. ஐந்து முகங்களா அல்லது வறுமையில் அடிபட்ட முகமா? (சிரிப்பு)

(பதில் இல்லை)

SRI V. K. KOTHANDARAMAN: முகம் மாத்திரம் பஞ்சமா? அல்லது கால், கை, வயிறு எல்லாமே பஞ்சமாக இருக்கிறதா?

(பதில் இல்லை)

*Kabaleeswarar Devasthanam*

MR. SPEAKER: The hon. Member, Sri K. Vinayakam, is not in his seat. The question and answer will be printed in the proceedings.

* 75 *Q.*—SRI K. VINAYAKAM: Will the Hon. the Minister for Electricity be pleased to state on what basis the trustees of Kabaleeswarar Devasthanam, Mylapore, Madras are appointed?

THE HON. SRI V. RAMIAH: The trustees are appointed according to the scheme settled by the Hindu Religious and Charitable Endowments authorities.

*Cashewnut*

MR. SPEAKER: The hon. Member, Sri K. R. Viswanathan, is not in his seat. The question and answer will be printed in the proceedings.

10th August 1960]

* 76 *Q.*—SRI K. R. VISWANATHAN: Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether the Government have received any petition, dated 23rd June 1960 from the villagers of Udaiyarpalayam taluk requesting to bring cashewnut crop under the Regulated Market system; and

(*b*) if so, the action taken thereon?

THE HON. SRI M. A. MANICKAVELU: (*a*) No, Sir.

(*b*) Does not arise.

*Sulphur*

* 77 *Q.*—SRI S. M. ANNAMALAI: கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

1959-ஆம் டிசம்பர்மீ 15-ம் தேதி நட்சத்திரக் குறியிட்ட கேள்வி எண் 181-க்கு அளித்த பதிலையொட்டி போளூர் தாலூகா தாளியார் பங்களாவுக்கு அருகில் கிடைக்கும் கந்தகத்தைத் தோண்டி எடுப்பது எந்த நிலையில் உள்ளது?

THE HON. SRI R. VENKATARAMAN: The Director, Geological Survey of India, has reported that the Geological Survey of India are short of drilling equipment and that the work will be taken up during the Third Plan period as soon as a drill becomes available.

SRI S. M. ANNAMALAI: நானும் இந்தச் சட்டமன்றத்தில் 3-1/2 ஆண்டுகளாக இருக்கின்றேன். இதுபற்றி 4 கேள்விகள் போட்டு, அடுத்தாற்போல் 5-வது கேள்வி போட்டிருக்கிறேன். இந்த ஐந்து கேள்விகளுக்கும் அமைச்சர் அவர்கள் இதே மாதிரி தான் பதில் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். நாடு இருக்கிற நிலைமையில் இந்தக் கந்தகத்தை தோண்டி எடுத்தால் மிகவும் கிராக்கியாக இருக்கும். இந்த நிலைமையை ஒட்டி இந்த கந்தகத்தை தோண்டி எடுப்பதற்கு மத்திய சர்க்காரை அணுகி கூடிய சீக்கிரம் துரிதமான நடவடிக்கை எடுக்க சர்க்கார் முன்வருமா?

THE HON. SRI R. VENKATARAMAN: ஐந்து கேள்விகள் போடுவதன் மூலம் ஒரு டிரில் கிடைக்குமானால், இன்னும் ஐந்து கேள்விகள் போடலாம் கனம் அங்கத்தினர். டிரில் அகப்பட வில்லை என்பதுதான் காரணம்.

*Improvement of tanks*

* 78 *Q.*—SRI K. GOPALA KOUNDER: கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) செஞ்சி தாலூகா, செம்மேடு கிராமத்தில் உள்ள P.W.D. ஏரியை அபிவிருத்தி செய்யத் திட்டம் தயாரிக்கப் பட்டதா?

(ஆ) அப்படியானால், எப்பொழுது வேலை துவக்கப்படும்?

[10th August 1960

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Yes, Sir. Proposals for (i) Special repairs and improvements to the tank and (ii) Desilting-*cum*-reclamation of the tank are being finalised.

(*b*) The works are likely to be started in January 1961.

SRI K. GOPALA KOUNDER : ஏற்கனவே இந்த ஏரி வேலையை 1959–60-ல் எடுத்துக்கொள்ளுவதாக கனம் அமைச்சர் அவர்கள் தெரிவித்தார்கள். ஆனால் நாளது வரையிலும் ஒரு விதமான நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை. ஆகையால் 1960–61-ம் ஆண்டிலாவது துரிதமாக இந்த வேலை எடுத்துக் கொள்ளப்படுமா?

THE HON. SRI M. A. MANICKAVELU : ஜனவரி 1961-ல் அதாவது நடப்பு நிதி ஆண்டில் எடுத்துக்கொள்ளப்போவதாகத் தான் சொன்னேன்.

* 79 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) திருப்பத்தூர் தாலூகா, வளையாம்பட்டில் உள்ள லாலா ஏரி, துலசீபாய் ஏரிகளைப் பழுதுபார்க்க வேண்டுமென்று கோரி கிரிசமுத்திரம் கிராம மக்களிடமிருந்து 1951-ம்ஹு பிப்ரவரிமீ 11, 1957-ம்ஹு ஆகஸ்டுமீ 26, 1959-ம்ஹு டிசம்பர்மீ 1 தேதிகளில் மகஜர் வந்ததா?

(ஆ) அப்படியானால், அவைகளின்மீது எடுக்கப்பட்ட நடவடிக்கை என்ன?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) No, Sir.

(*b*) Necessary sanction of estimate for the restoration of the Lala tank has been issued by the Board of Revenue (Food Production). Proposal of the Superintending Engineer (Food Production) for the restoration of the Thulasi Bai tank is awaited by the Board.

SRI S. M. ANNAMALAI : இந்த ஏரிகள் எப்பொழுதோ உடைந்துவிட்டன. சுமார் 15 ஆண்டு காலமாக பல மகஜர்கள் அனுப்பியும்கூட மகஜர் ஒன்றும் வரவில்லை என்று அமைச்சர் அவர்கள் பதில் சொன்னார்கள். இந்த ஏரிகள் மூலம் ஏறத்தாழ 1,000 ஏக்கர்களுக்கு மேல் பாசன வசதி கிடைக்கும். இவ்வளவு காலமாக இவைகளை சும்மா விட்டுவைப்பது சர்க்காருக்கு நியாயமா? ஆகையால் உடனடியாக இதைக் கவனித்து சீக்கிரம் நடவடிக்கை எடுக்க சர்க்கார் முன்வருவார்களா?

THE HON. SRI M. A. MANICKAVELU : There was an order of ban. The ban order was lifted only in January 1959 so that each case may be considered on merits. In view of that, it was further examined and now an estimate of Rs. 23,000 has been sent from the Superintending Engineer for the restoration of the Lala tank. The department has also instructed the Superintending Engineer to expedite the proposal in respect of the Thulasi Bai tank. So, we have asked the estimates to be expedited.

10th August 1960]

SRI T. KARIA GOUNDER: கனம் சபாநாயகர் அவர்களே, இந்த ஏரிகளைப் புதிப்பிப்பது, பாலார் பேசின் ரூல்ஸ்படி நிறுத்தப்பட்டிருக்கிறதா? அப்படி உடைந்துபோன ஏரியைப் புதிப்பிக்க ரூல்ஸ் இடம் கொடுக்காது என்பதை தெரிவிப்பார்களா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU: ரிப்பேர் செய்வது என்று முடிவு செய்துதான் எஸ்டிமேட் வந்திருக்கிறது. அதை முழுவதும் பரிசீலித்த பிறகு ரிப்பேர் செய்யப்படும்.

*Death of a worker*

* 80 Q.—SRI V. K. KOTHANDARAMAN: Will the Hon. the Minister for Finance be pleased to state the reasons for not holding a post-mortem examination over the dead body of a building worker who died on 8th March 1960 in the Mary's College, Tuticorin?

THE HON. SRI C. SUBRAMANIAM: In this case death was due to an accidental fall and there was no foul play or suspicion. As the incident was not reported to the Police no post-mortem examination was held over the body of the deceased.

*Police dogs*

* 81 Q.—SRI P. G. MANICKAM: கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1959–60-ல் போலீஸ் நாய்களின் பராமரிப்புக்காக எவ்வளவு தொகை செலவழிக்கப்பட்டது?

(ஆ) கேஸ்களைத் துப்புத்துலக்க நாய்களைக் கூட்டிச் சென்றதற்காக எவ்வளவு தொகை செலவு செய்யப்பட்டது?

(இ) எத்தனை கேஸ்களில் துப்புத்துலக்க போலீஸ் நாய்கள் உபயோகப்படுத்தப்பட்டன?

(ஈ) இவைகளுள் எத்தனை கேஸ்கள் துப்புத்துலக்கப் பட்டன?

THE HON. SRI C. SUBRAMANIAM: (a) Rs. 8,023-08 nP.

(b) Rs. 5,546-98 nP.

(c) 184.

(d) 59.

SRI P. G. MANICKAM: சார், சென்னையிலிருந்து பல ஜில்லாக்களுக்கும் நாய்களை அனுப்ப வேண்டியிருப்பதால் அதிகச் செலவினங்கள் ஏற்படுகின்றன. ஆகையினால், நாய்களை வளர்ப்பதை இன்னும் சில ஜில்லாக்களுக்கு விஸ்தரித்து, அங்கெல்லாம் நாய் வளர்க்கும் திட்டத்தை அமுலாக்க சர்க்கார் பரிசீலனை செய்கிறதா, அல்லது இனி பரிசீலனை செய்யுமா?

THE HON. SRI C. SUBRAMANIAM: அதற்குத் தனிக் கேள்வி போடவேண்டும்.

[10th August 1960

*Intensive Cultivation schemes*

* 82 *Q.*—Sri P. G. MANICKAM: கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) ஆடுதுறையில் துவக்கப்பட்டிருக்கும் தீவிரச் சாகுபடி பரீட்சார்த்த திட்டத்திற்காக (1) போர்டு ஸ்தாபனம், (2) மத்திய சர்க்கார், (3) நம் ராஜ்ய சர்க்கார், பங்குத் தொகை எவ்வளவு?

(ஆ) எத்தனை ஏகரா நிலப்பரப்பில் இத் திட்டம் அமுலுக்குக் கொண்டு வரப்படும்?

(இ) விவசாய அபிவிருத்திக்காக விவசாயிகளுக்கு என்னென்ன உதவிகள் அளிக்கப்படும்?

The Hon. Sri M. A. MANICKAVELU: (*a*) According to the tentative scheme received from the Government of India, the sharing of the expenditure is as follows :—

The Ford Foundation will meet 50 per cent of the cost of additional staff during the entire period of the programme. The balance of 50 per cent during 1960–61 will be borne by the Government of India, during the subsequent years the balance will be shared between the Centre and State Governments on a 50 : 50 basis.

In respect of other items such as training of staff in farm management, resources survey and evaluation, transport, agricultural workshops, scientific demonstrations, foreign specialists, etc., the finalised scheme from the Government of India is awaited and precise details of the pattern of financial assistance will be known after it is received.

(*b*) The scheme will be implemented in Thanjavur district and to start within an area of 184,800 acres in 22 blocks and it will be extended eventually to 34 blocks at the end of the Five-year period, covering an area of about 9 lakh acres.

(*c*) The essence of the scheme is that each farmer will be helped to draw up a plan of increasing production in respect of his farm and to achieve the planned target by providing technical guidance and timely credit and supplies required under his farm plan.

Sri P. G. MANICKAM: ஸார், இந்த பரீக்ஷார்த்த திட்டத்தை அமுலாக்க, வேலை முறைகளை வகுக்க, தஞ்சாவூரிலும் கோயம்புத்தூரிலும், அதிகாரிகள், விவசாயிகள் மகாநாடு நடந்திருப்பதாகத் தெரிகிறது ; அந்த மகாநாட்டில் என்னென்ன வேலை முறைகளை வகுத்திருக்கிறார்கள் ?

The Hon. Sri M. A. MANICKAVELU: தஞ்சாவூர் பாக்கேஜ் திட்டத்தைப் பற்றியதுதான் இது ; அந்த விவரங்கள் கொடுக்கப்பட்டன.

10th August 1960]

SRI A. VEDARATHNAM: ஸார், இந்த பாக்கேஜ் டீலில் எடுத்துக் கொண்டிருக்கிற ப்ளாக்குகள், "வெட் ஏரியாஸ்" நீர் பாசன வசதிகள் உள்ள பகுதிகளைத்தான் எடுத்திருக்கிறார்கள். அங்கே உள்ள மானாவரி, "ரெயின்பட்" பகுதிகளும் இந்த பாக்கேஜ் டீலில் சேர்க்கப்படுமா? பாசன வசதியில்லாத பகுதிகளுக்கு பாசன வசதியும் செய்து கொடுக்க, அந்த முறையில் பாக்கேஜ் டீலை அமுலாக்க, வசதி செய்து கொடுக்கப்படுமா?

THE HON. SRI M. A. MANICKAVELU: ஆரம்பத்தில் 184,800 ஏக்கர் என்று சொன்னேன். திட்ட காலத்திற்குள் அது ஒன்பது லட்சம் ஆகும். அதற்கு வேண்டிய நிலம், ரொம்ப நல்ல வசதியான நிலம் எங்கு இருக்கிறதோ, அது எடுக்கப்படும்.

SRI M. D. THIAGARAJA PILLAI: தஞ்சை ஜில்லாவில், கடைசியாக எடுக்கப்பட்டிருக்கின்ற புது ப்ளாக்குகள் இந்தத் திட்டத்தில் சேர்க்கப்படுமா, அங்கு இது விஸ்தரிக்கப்பட இருக்கிறதா?

THE HON. SRI M. A. MANICKAVELU: இப்பொழுது 22 ப்ளாக்குகளுக்கு இருப்பது, பின்னால், 34 ப்ளாக்குகளுக்கு விஸ்தரிக்கப்படும் என்று சொன்னேன்.

SRI K. RAMACHANDRAN: Sir, the basis of the scheme is to increase production, and therefore, in the implementation of the scheme, what is the rate of increase in production that is anticipated?

THE HON. SRI M. A. MANICKAVELU: We must wait a bit and see.

*Nalagarh Committee*

* 83 *Q.*—SRI N. K. PALANISAMI: Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether the Central has called for any proposals from this State for giving effect to the recommendations of the Nalagarh Committee on Agricultural Administration; and

(*b*) if so, the details of the reply sent?

THE HON. SRI M. A. MANICKAVELU: (*a*) Yes, Sir.

(*b*) The proposals are under consideration of the Government.

SRI N. K. PALANISAMI: When I put the queston some $1\frac{1}{2}$ years ago the same reply was given. Now it is being repeated. May I know why in spite of the lapse of $1\frac{1}{2}$ years the matter is still under consideration?

THE HON. SRI M. A. MANICKAVELU: The Government have examined all the recommendations of the Committee. Almost all the recommendations have been treated as already in vogue in this State. Necessary action has been taken to implement a few

[10th August 1960

recommendations which require implementation. Some more proposals are expected. When they are received they will be examined and final decision taken.

*Air-conditioning of the House of the Legislative Assembly*

* 84 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether there is any proposal to air-condition the House of the Madras Legislative Assembly; and

(*b*) if so, when?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

SRI A. A. RASHEED : Is the Hon. Minister aware of the fact that members and Ministers can turn out much better and more work in an air-conditioned House than in a sultry place? If so, will the Government reconsider the air-conditioning of this House?

THE HON. SRI C. SUBRAMANIAM : I do not know whether all hon. Members would agree with the proposal put forward by the hon. Member. As a matter of fact the general experience is once one is inside an air-conditioned chamber it is all right. But when he comes out he suffers all the more.

SRI K. S. G. HAJA SHERIFF : It is a recognized fact that in an air-conditioned room one could turn out more work. So will the Government consider the possibility of providing at least Ministers' rooms with air-conditioning plant so that they could turn out better and more work?

THE HON. SRI S. SUBRAMANIAM : I suppose it is not a reflection against the quality of the present work turned out by Ministers. (Laughter.)

*Hand-made paper*

* 85 *Q.*—SRI M. P. SARATHI : கனம் மின்சார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப் பாரா—

(அ) ' *Testing laboratory for standardization of hand-made paper* ' இந்த ராஜ்யத்தில் நிறுவப்பட்டுள்ளதா ?

(ஆ) எவ்வளவு காலமாக ?

(இ) இதை நிறுவ மத்திய அரசாங்கம் உதவி செய்ததா ? எந்த அளவில் ?

THE HON SRI V. RAMAIAH : (*a*) No, Sir.

(*b*) and (*c*) Do not arise.

10th August 1960]

*Cinema theatres*

* 86 *Q.*—SRI N. R. THIAGARAJAN: கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) இரவு குறிப்பிட்ட நேரத்திற்குமேல் நடைபெறும் சினிமாத் தியேட்டர்கள் மீது நடவடிக்கை எடுக்கப்படுகிறதா?

(ஆ) அப்படியானால், 1960-ல் இதுவரை எத்தனை தியேட்டர்கள் மீது நடவடிக்கை எடுக்கப்பட்டது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Yes, Sir.

(*b*) One in Thanjavur and one in Madras.

SRI N. R. THIAGARAJAN: ஸார், குறிப்பிட்ட படம் ஓடும் தியேட்டர்களை சஸ்பெண்ட் செய்து நடவடிக்கைகள் எடுப்பதற்குப் பதிலாக, அபராதம் மட்டும் விதிக்கும் முறையை கையாள்வார்களா ? படங்கள் 15,000 அடிக்கு மேல் போவதால்தான் அதிக நேரம் ஓட வேண்டிவருகிறது. ஆகவே, படங்கள் 15,000 அடிக்குக்குறைவாகத் தயாரிக்கச் சட்டம் போட்டு விதி வகுப்பார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM: சஸ்பெண்ட் பண்ணினாலே, அது அபராதத்திற்கு மேல் வரும்படி குறைகிறது, செலவினங்கள் ஏற்படுகின்றன. படத்தின் நீளத்தை குறைப்பது பற்றி இந்தக் கேள்வியில் பதில் சொல்ல முடியாது.

*Common Police Force for the Southern Zone*

* 87 *Q.*—SRI A. VEDARATHNAM: கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) தென்மண்டலப் போலீஸ் படை ஒன்று அமைக்கும் திட்டம் இப்போது எந்த நிலையில் இருக்கிறது ?

(ஆ) இதில் சம்பந்தப்பட்ட ஏனைய மாநில சர்க்கார்கள் ஒத்துக்கொண்டு விட்டார்களா ?

(இ) இத் திட்டம் உருவானால் எப்போது அமுலுக்கு வரும் ?

(ஈ) அதன் மூலம் இம்மாநிலத்திற்குள்ள அனுகூலங்கள் என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM: (*a*), (*b*) & (*c*).—The matter is still in the stage of consideration by the Inspector-General of Police of the States in Southern Zone.

(*d*) In cases of emergencies in this State, the entire personnel of the Common Armed Police Reserve will become available for use in this State and it wil ease the burden of the State in respect of keeping an armed reserve in sufficient strength to meet an emergency.

[10th August 1960

SRI A. VEDARATHNAM: முன்பு இந்தப் பிரச்னை வந்த காலத்தில் கேரள ராஜ்யத்தைத் தவிர மற்ற ராஜ்யங்கள் இதற்கு ஒத்துக் கொண்டிருந்தார்கள். இப்பொழுது இருக்கிற கேரள அரசாங்கம் அதை ஏற்றுக்கொண்டிருக்கிறார்களா? அப்படி யானால் அதன் பேரில் எடுக்கப்பட்ட நடவடிக்கை என்ன என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: கேரள சர்க்கார் பல பிரச்னைகளை ஒத்துக்கொண்டிருக்கிறார்கள். அவைகளில் அனுகூலமான முடிவு எடுப்பார்கள் என்றும் எதிர்ப்பார்க் கிறேன்.

SRI A. VEDARATHNAM: அப்படி ஒரு பொது போலீஸ் படை ஏற்படுத்துவது என்று முன் வந்தால் அது எந்த இடத்தில் அமைக்கப்படும்.

THE HON. SRI C. SUBRAMANIAM: ஒவ்வொரு ராஜ்யத்திலும் ஒவ்வொரு பகுதி அமைக்கப்படும்.

*"Your Friend"*

*88 *Q.*—SRI P. G. MANICKAM: கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

"உங்கள் நண்பன்" என்ற போலீஸ் படக்காட்சி எந்தெந்த ஜில்லாக்களிலே, எத்தனை தடவைகள் காட்டப் பட்டது?

THE HON. SRI C. SUBRAMANIAM: The film was exhibited in all the districts in the State including Madras City. It is not possible to state the number of times the film was exhibited, as no record is maintained for the purpose.

SRI P. G. MANICKAM: இந்தப் படக்காட்சிகள் எல்லாம் போலீஸ் இலாகா மூலம் காட்டப்படுகிறதா அல்லது யாரால் காட்டப்படுகிறது? சினிமா தியேட்டர்கள் ஒவ்வொன்றும் இந்தப் படக்காட்சியைக் காட்டுவதற்கு ஏதாவது நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறதா?

THE HON. SRI C. SUBRAMANIAM: பல இடங்களில் இந்தப் படக்காட்சி காட்டப்படுகிறது. போலீஸ் இலாகா மூலம் மட்டும் அல்ல.

*Buffalo Farm*

* 89. *Q.*—SRI N. K. PALANISAMI: Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether the Government have instructed the District Veterinary Officer, Erode, to examine the feasibility of opening a buffalo farm in Chennimalai forests;

10th August 1960]

(b) whether any report has been received, and

(c) if so, the steps taken thereon?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) Yes, Sir.

(b) & (c) The report has just been received by the Director of Animal Husbandry and it is being examined by him.

SRI N. K. PALANISAMI : Sir, since there are no buffalo farms in the State, will the Government open a buffalo farm in Chennimalai forests and also in some more centres in our State?

THE HON. SRI M. A. MANICKAVELU : Yes, Sir. There is necessity for a buffalo farm in Chennimalai area. An extent of 323 and odd acres is under the control of the Forest Department and this place seems to be an ideal place for opening such a farm. This is under the examination of the department. The Forest Department must release that land and that question is being taken up now.

*Rubber Industry*

*90 *Q.*—SRI P. G. MANICKAM: கனம் மின்சார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

1960-ம் வருடம் மே மாதம் மலேயா தேசத்திலிருந்து சென்னைக்கு வந்த ரப்பர் நிபுணர்களோடு சென்னை அரசாங்கம் நடத்திய பேச்சு வார்த்தைகளின் விவரங்கள் யாவை ?

THE HON. SRI V. RAMAIAH : It is presumed that the Honourable Member refers to the discussion which the officials of the Madras Government had with the Rubber Experts from Malaya on 30th April 1960 at the Secretariat. The Leader of the Team made certain suggestions regarding rubber cultivation in the State and explained the measures taken for the better cultivation of rubber in Malaya.

MR. SPEAKER : Questions are over.

**[*Note.*—An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.]**

## II.—EXPUNCTION OF OBJECTIONABLE MATTER.

THE HON. SRI C. SUBRAMANIAM : Mr. Speaker, Sir, yesterday during the course of the discussion on the Governor's Address Sri S. Nagaraja Monigar during his speech made some observations against which objection was taken by certain hon. Members of this House. Unfortunately, I was not present in the House and the Hon. Speaker was not also in the Chair. Now I have the excerpts of the speech with me. I have gone through it. Even though on the face of it, it might be considered that there is nothing objectionable in it, still I feel Sir, that it contains insinuation and innuendoes. Apart from what the hon. Member might have meant by that speech, certain hon. Members have taken objection to it and I am inclined to agree with them that

that portion of the speech is objectionable. I would, therefore, respectfully submit to the Hon. Speaker to order expunction of that portion of the speech starting from "200 ஆண்டுகளுக்குமுன்" and whole of the ending with "கேட்டுக் கொள்கிறேன்" that is the whole of the paragraph.

MR. SPEAKER: I was not in the Chair. Even that would not have made any difference. This morning the Hon. the Leader of the House showed me the relevant speech. I think it is indecent to say the least. I would appeal to the hon. Members that they should try to keep the debate in the House at a very high level. It is not the duty of the Speaker alone to safeguard the interests and dignity of the House. Every hon. Member has a right and share in it. Therefore, Members should not speak as though they are addressing public meetings. At public meetings they could say anything they like. There the Speaker has no control over them.

THE HON. SRI C. SUBRAMANIAM: Even when addressing public meetings one should observe a certain amount of restraint.

MR. SPEAKER: I, therefore, request the hon. Members that when they are speaking in this august body they should keep up the dignity of the House. Of course, hon. Members have to listen to all speeches that are made in the House. It is a terrible headache to the Speaker and the Deputy Speaker. Hon. Members should raise points of order and object to the speech of an objectionable type. On this matter, I am convinced that the speech is indecent. I am glad to say that the Hon. the Deputy Speaker, who was in the Chair then agrees with me that this speech is indecent and I, therefore, under rule 235 of the Madras Assembly Rules, order that the portion of the speech referred to by the Hon. the Leader of the House be expunged.

## III.—DISCUSSION ON THE GOVERNOR'S ADDRESS—*cont.*

MR. SPEAKER: Sri M. Kalyasundaram will now begin his speech on the Governor's Address.

SRI M. KALYANASUNDARAM: கனம் சபாநாயகர் அவர்களே, கவர்னர் அவர்கள் உரையின் மீது நடைபெறும் இந்த விவாதத்தில் நன்றி தெரிவிக்கும் தீர்மானத்தைப் பிரேரேபித்த கனம் அங்கத்தினர் அவர்கள் ஒரு புதிய முறையில் தன்னுடைய உரையை ஆரம்பித்தார். கவர்னர் பெருமான் உரையின் மீது நடை பெறும் விவாதத்தில் கருத்து வேற்றுமைக்கு இடம் அளிக்காத முறையில் பேசவேண்டும் என்றும், கருத்து வேற்றுமைக்கு இடம் இருக்கக்கூடாது என்றும் அவர் பிரேரேபித்துப் பேசியதோடு எதிர்க்கட்சியினர் அதை ஆமோதிக்கக் கூடிய முறையில் பேச வேண்டும் என்றும் ஒரு உயர்ந்த தத்துவத்தை எடுத்து உரைத்தார்கள். அது வரவேற்கக் கூடியதுதான். ஆனால் அதற்குக் காரணம் என்ன இருக்கிறது என்பதை ஆராய வேண்டும் என்று அவரை நான் கேட்டுக் கொள்ளுகிறேன். கவர்னர் உரையைத் தயாரிப்பதற்குப் பொறுப்பாக உள்ளவர்கள் கருத்து வேற்றுமைக்கு இடம் அளிக்காத வகையில் தயாரித்

10th August 1960] [Sri M. Kalyanasundaram]

திருந்தால், அத்தகைய சூழ்நிலையை உண்டாக்கியிருந்தால் எல்லோரும் அதை ஆமோதித்துத் தான் பேசுவார்கள். அந்த விதத்தில் அந்த உரையைத் தயாரித்திருந்தால் அப்படி ஆமோதித்துப் பேசுவதற்குச் சாத்தியமாக இருந்திருக்கும். ஆனால் கவர்னர் உரையைப் பார்த்தால் அது ஒரு தேர்தல் பிரசாரமாகத்தான் தோன்றுகிறது. அப்படிப்பட்ட ஒரு சூழ் நிலையை ஏற்படுத்தியிருந்தால் அதை ஆமோதித்து எப்படி பேச முடியும் என்பதை யோசித்துப் பார்க்க வேண்டும். கருத்து வேற்றுமைகளுக்கு இடம் கொடுக்கக்கூடிய அளவில் பல விஷயங்கள் கவர்னர் அவர்களுடைய உரையில் இடம் பெற்றிருக்கின்றன. பல விஷயங்கள் கருத்து வேற்றுமைக்கு இடம் கொடுக்கக்கூடிய அளவில் சேர்க்கப்பட்டிருப்பதால் அத்தகைய சூழ் நிலை ஏற்படுவதற்கு, அதாவது கனம் அங்கத்தினர் சொன்னதுபோல், சாத்தியம் இல்லாமல் இருக்கிறது என்பது என்னுடைய அபிப்பிராயம்.

உதாரணமாக, அவருடைய உரையின் முதலாவது பாராவை எடுத்துக்கொள்ள வேண்டும். அதில் போலீசுக்குப் பாராட்டு தலைத் தெரிவித்திருக்கிறார்கள். போலீஸ் என்ன செய்திருக்கக் கூடும், என்ன செய்திருக்கிறது, என்பதெல்லாம் வேறு விஷயம். ஆனால் சமீபத்தில் நிகழ்ந்த மத்திய சர்க்கார் ஊழியர்களுடைய வேலை நிறுத்தம் சம்பந்தமாக நம்முடைய ராஜ்யத்தில் எந்த விதமான அசம்பாவித நிகழ்ச்சியும் ஏற்படாமல் இருந்தது போலீஸ் திறமையால் அல்ல. ஆனால் அதற்குப் பாராட்டுதலைத் தெரிவித்திருக்கிறார்கள். மத்திய சர்க்கார் ஊழியர்களுடைய கோரிக்கைகள் என்ன, அவர்கள் வேலை நிறுத்தம் செய்தது நியாயமா இல்லையா என்பதைப் பற்றி கருத்து வித்தியாசங்கள் இருக்கக் கூடாது. வேலை நிறுத்தம் நடந்த முறையைப் பற்றியும், போலீஸ் நடந்து கொண்ட முறையைப் பற்றியும் தான் இந்தச் சபையில் கருத்து வித்தியாசம் இருக்கிறது. இப்படிக் கருத்து வேற்றுமை இருக்கும் போது அந்தப் போலீசைப் பற்றி பாராட்டுதலைத் தெரிவித்துவிட்டு அதற்கு எதிர்க் கட்சிகளும் நன்றி தெரிவிக்கும் தீர்மானத்தில் கலந்து கொண்டு அதை ஆமோதிக்க வேண்டும் என்று சொன்னால் அது எவ்வளவு தூரம் நியாயம் என்றுதான் தெரியவில்லை. இதைக் கொஞ்சம் சிந்தித்துப் பார்க்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். வேலை நிறுத்தத்திற்குக் காரணம் என்ன? வேலை நிறுத்தத்தைத் தூண்டி விடுகிறார்கள் என்று சொல்லி, அதற்கு அரசியல் காரணமா என்று பார்த்தால் அதன் உண்மையைக் கண்டுபிடிக்க முடியாது. வேலை நிறுத்தத் திற்குக் காரணம் அதைத் தடுக்கக்கூடிய சக்தி இவைகள் எல்லாம் அரசாங்கத்தினுடைய கையில் இருக்கிறது. அவர் களுக்கு இருக்கக்கூடிய அதிகாரத்தினாலும், அவசரச் சட்டத் தினாலும், அல்லது அவர்களிடத்திலுள்ள போலீசை உபயோ கித்தும், வேலை நிறுத்தத்தைத் தடுத்து விடலாம்—அதை சமாளித்து விடலாம்—என்று நினைப்பது சரியல்ல. வேலை நிறுத்தம் என்பது ஒரு நோய். அந்த நோய்க்குக் காரணம் என்ன என்று கண்டுபிடித்து அதற்குப் பரிகாரத்தைத் தேட வேண்டுமேயொழிய அந்த நோய் வந்த பிறகு அதைத் தடுக்க

[Sri M. Kalyanasundaram] [10th August 1960

நடவடிக்கை எடுத்துக் கொள்வது அவ்வளவு சரியல்ல. வேலை நிறுத்தம் நடந்த பின் அதைச் சம்மாளிக்க போலீசை வைத்துக் கொண்டு பரிகாரம் தேடிக்கொள்ள வேண்டுமே தவிர வேலை நிறுத்தத்தை நடைபெருமல் போலீசை வைத்துக் கொண்டு தடை செய்வது என்பதும் அவர்களை வைத்துக்கொண்டு அடக்கு முறை மூலம் அடக்குவது என்பதும் சரியல்ல. மத்திய சர்க்கார் ஊழியர்கள் வேலை நிறுத்தம் செய்ததை போலீசைக் கொண்டு சமாளித்து விட்டோம் என்று பெருமை அடித்துக் கொள்வதில் பிரயோசனம் இல்லை. அதற்குப் பதிலாக மத்திய சர்க்கார் ஊழியர்கள் வேலை நிறுத்தம் செய்வதற்குக் காரணமாக இருந்த கோரிக்கைகளை நிறைவேற்றிவிட்டோம் என்று சொல்லி அதில் வெற்றி கண்டுவிட்டோம் என்று சொன்னல் அதைக் கண்டு நான் சந்தோஷப்படுவேனே தவிர அவர்களை வேலை நிறுத்தம் செய்ய விடாமல் தடுத்து ஒடுக்கி விட்டோம் என்று திறமையாகச் சொல்லுவதை கண்டு நான் சந்தோஷப்படமாட்டேன். எந்த தேசத்திலும் எதிர்க்கட்சி அதை ஒத்துக் கொள்ளாது. வேலை நிறுத்தம் வராமல் அதைத் தடுத்து அதற்குக் காரணமாக இருக்கும் கோரிக்கைகளை விட்டுக் கொடுக்க வேண்டும். அப்படி விட்டுக் கொடுத்து வேலை நிறுத்தத்தைத் தடுத்தால்தான் அதற்குப் பெருமை உண்டு. வெறும் அடக்கு முறை மூலம், அவசரச் சட்டத்தின் மூலம்,
9-30 a.m. நிறுத்தி விட்டோம் என்று சொன்னல், அது வெற்றி அடைந்ததாக ஆகாது. நம்முடைய தேசத்தில் எல்லா ராஜ்ய சர்க்கார்களுக்கும் தெரியும். மத்திய சர்க்காருக்கும் இது ஒரு சிறந்த படிப்பினையாக இருக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். வெறும் அரசியல் நோக்கத்தோடு இந்தப் பிரச்சினையைப் பார்க்கக்கூடாது. வேலை நிறுத்தம் செய்யும் படியாக அவர்களை யார் தூண்டிவிட்டார்கள் என்பதெல்லாம் பிரச்னை அல்ல. வேலை நிறுத்தம் நடந்தது. அதை ஆரம்பித்தது சரியா என்பது பற்றி நானே வேறு விதமாக நினைக்கலாம். சரியானபடி தயாரிப்பு இல்லாமல் ஆரம்பித்தார்களே என்றுதான் வருத்தம். அவர்கள் அநுபவம் அற்றவர்கள் என்றே புலிமேல் உட்கார்ந்து சவாரி செய்தவர்கள் என்றே . . .

THE HON. SRI C. SUBRAMANIAM: பார்லிமெண்டில் இப்போது நிகழ்ந்த நிகழ்ச்சியைப்பற்றி இங்கே குறிப்பிட்டுப் பேசுவது சரியல்ல. நமக்குள் இருக்கும் விஷயங்களைப் பற்றி பேசலாம். அங்கே நடந்தது பற்றிப் பேசினல் அதற்கு நான் பதில் சொல்ல முடியாது. அவர்களும் பதில் சொல்ல இங்கில்லை.

SRI M. KALYANASUNDARAM: பார்லிமெண்டில் நடந்த விஷயங்களைப் பற்றி நான் குறிப்பிடவில்லை. (கனம் ஸ்ரீ. ஸி. சுப்பிரமணியம்: "புலி மேல் உட்கார்ந்து சவாரி" என்று சொல்லுகிறபோதே தெரிகிறது. யாரும் படிக்காமல் இருக்கமாட்டார்கள்.) அதைப் பார்த்து நான் குறிப்பிட வில்லை. ஒருகால் நான் குறிப்பிட்டது அது போலவே இருக்கலாம். (கனம் ஸ்ரீ. ஸி. சுப்பிரமணியம்: அதைத் தெரிந்து

10th August 1960] [Sri M. Kalyanasundaram]

கொள்ளாமலேயே அவர் அதை அப்படி ஒத்துக்கொள்கிறார் என்றால் சரிதான்.) (சிரிப்பு) இந்த வேலை நிறுத்தத்திற்குப் பொறுப்பாளியாகத் தலைமை தாங்கியவர்கள் மீது எந்த நடவடிக்கை எடுத்தாலும் ஆட்சேபணை இல்லை. அது அரசியல். அதற்கு இடம் உண்டு. என் மீது கூட வழக்கு போட்டிருக்கிறார்கள். வழக்கு கோர்ட்டில் இருப்பதனால் அதுபற்றிய விவரங்களை நான் குறிப்பிட விரும்பவில்லை. என்னை விசாரணை செய்வதெல்லாம் முடிந்துவிட்டது. தீர்ப்பு அளிக்க வேண்டியதுதான் பாக்கி. ஆனால் இந்தச் சமயத்தில் ராஜ்ய சர்க்கார் வழக்கை வாபஸ் பெறவேண்டாம் என்றுதான் நான் கேட்டுக் கொள்கிறேன். வழக்கை வாபஸ் பெற்று பின்வாங்கி ஓட வேண்டாம். அரசியல் தலைவர்களை கோர்ட்டுக்கு இழுங்கள், சிறைக்கு இழுங்கள். ஆனால் ஊழியர்கள் மீது நடவடிக்கை எடுத்துக் கொள்வது சரியல்ல. அவர்கள் மீது தொடரப்பட்ட வழக்குகளிலும், அவசரச் சட்டத்தின் 4-வது பிரிவுப்படி தொடரப்பட்ட வழக்குகளை வாபஸ் வாங்குவதாக மட்டும் சொன்னால் சரியாகாது. நம் ராஜ்யத்தைப் பொறுத்த வரையில் போலீசார் கொஞ்சம் அதிக ஆர்வத்துடனேயே செக்ஷன் 4, 5 ஆகிய இரண்டையும் சேர்த்தே வழக்குப் போட்டு விட்டார்கள். ஆகவே இப்போது சர்க்கார் ஊழியர்களைப் பழிவாங்கும் எண்ணத்தோடு நடந்துக் கொள்ளக் கூடாது என்று கேட்டுக் கொள்கிறேன். அவர்கள் எல்லோருடைய ஒத்துழைப்பினாலும் தான் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் வெற்றிபெற வேண்டிய அவசியம் இருக்கிறது. இந்த நிலையில் அவர்கள் உள்ளம் உடைந்து போனால் அதனால் என்ன நிலைமை உண்டாகும் என்பது அமைச்சர் அவர்களுக்குத் தெரியாதிருக்காது. ஆகவே அவர்கள் மீது போடப்பட்டிருக்கும் வழக்குகள் எல்லாவற்றையும் வாபஸ் வாங்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். என் மீதோ, திரு. அண்ணாதுரை மீதோ போடப்பட்டிருக்கும் வழக்குகளை வாபஸ் பெறவேண்டுமென்று நான் சொல்லவில்லை. இதை நடத்துங்கள்.

THE HON. SRI C. SUBRAMANIAM: உங்கள் மீது உள்ள வழக்கை வாபஸ் வாங்காது நடத்த வேண்டுமென்று சொல்லுங்கள். அவரையும் ஏன் சேர்த்து இழுத்துக் கொள்கிறீர்கள் அங்கும் கம்பெனி வேண்டுமா?

SRI M. KALYANASUNDARAM: வேலை நிறுத்தம் செய்த ஊழியர்களின் மீது வழக்குகள் போட்டு பழி வாங்குவதற்கு முன்னால் வேலை நிறுத்தத்திற்குக் காரணம் என்னவென்று ஆராய்ச்சி செய்ய வேண்டும். மத்திய சர்க்கார் ஊழியர்களாக இருந்தாலும் சரி, ராஜ்ய சர்க்கார் ஊழியர்களாக இருந்தாலும் சரி, இன்றைக்கு இருக்கக்கூடிய நிலைமையில் தங்களுடைய வாழ்க்கைத் தரத்தை மட்டும் உயர்த்திக்கொள்ள வேண்டுமென்று கோரிக்கை எழுப்பியிருந்தால் அதை நானே ஒப்புக் கொண்டிருக்க மாட்டேன். ஆனால் இன்றைய தினம் அவர்களுடைய கோரிக்கை என்ன? குறைந்து கொண்டே

[Sri M. Kalyanasundaram] [10th August 1960

போகிற அவர்களுடைய வாழ்க்கைத் தரத்தை சரிக்கட்ட வேண்டுமென்பது தான். "அதற்கு ஈடு செய்யுங்கள்" என்பது தான் அவர்கள் கோரிக்கையாகும். இன்றைக்கு வாங்கக் கூடிய சம்பளத்தின் மதிப்பைவிட விலைவாசிகள் உயர்ந்து விட்டன. ஆகவே, அதற்கு ஈடுசெய்ய வேண்டுமென்று அவர்கள் கோருவது மிகவும் நியாயமான கோரிக்கையாகும். திருட்டுத்தனமாக தங்களுடைய வாழ்க்கைத் தரத்தை மட்டும் தாங்கள் கேந்திரமான ஸ்தானங்களில் இருப்பதன் காரணமாக —உயர்த்திக் கொள்ளவேண்டுமென்று அவர்கள் கோரிக்கையை வைத்திருந்தால் அதை யாரும் ஏற்க முடியாது. அப்படி இல்லாதபோது இவர்களுடைய கோரிக்கை என்ன என்பதைக் கூட ஆராய்ச்சி செய்யாமல் அவர்களுடைய மனம் உடைந்து போகும்படியாக நடவடிக்கைகளை எடுத்துக் கொள்வது சரியல்ல. அவர்களுடைய கோரிக்கைகளில் இருக்கும் நியாயத்தை உணர்ந்து கொள்ள இன்றைய தினம் இருக்கும் விலைவாசி புள்ளியை கவனிப்போம். இதுபற்றி சட்டசபை ரிசர்ச் செக்ஷனை நான் கேட்டிருந்தேன். இவர்கள் இதுபற்றிய புள்ளிவிவரங்களைச் சேகரித்து எனக்கு மட்டும் அல்ல, மற்ற அங்கத்தினர்களுக்கும் அனுப்பி இருக்கிறார்கள். அதைப் பார்த்தால் வேலை நிறுத்தத்தின் காரணத்தைப் புரிந்து கொள்ள முடியும்.

வாழ்க்கைச் செலவுப் புள்ளி பொதுவாக ஜனவரி 1959-ல் 421-ஆக இருந்தது ஜனவரி 1960-ல் 441-ஆக உயர்ந்திருக்கிறது. இதில் உணவுப் பண்டங்களை மட்டும் எடுத்துப் பார்த்தால் ஜனவரி 1959-ல் 478-ஆக இருந்தது ஜனவரி 1960-ல் 501-ஆக உயர்ந்திருப்பது தெரியும். பிப்ரவரி 1959-ல் 461-ஆக இருந்தது பிப்ரவரி 1960-ல் 510-ஆக உயர்ந்திருக்கிறது. இப்படி வரிசையாகப் பார்க்க வேண்டும்.

| | 1959 | 1960 |
|---|---|---|
| மார்ச் .. .. | 452 | 505 |
| எப்ரல் .. .. | 463 | 505 |
| மே .. .. | 478 | 511 |
| ஜூன் .. .. | 491 | 523 |
| ஜூலை .. .. | 498 | 523 |

ஆகஸ்டு பற்றிச் சொல்லவேண்டியதில்லை. 1959-ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 494-ஆக இருந்தது என்றால் இப்போதுள்ள நிலவரத்தைப் பார்த்தால் சரித்திரத்திலேயே இதைவிட அதிகமாக எப்போதும் உயர்ந்து இருந்ததில்லை. இதற்கு முன் எப்போது பார்த்தாலும்—யுத்த காலத்திலும் கூடச் சரி—உணவுப் பண்டங்களின் விலை இவ்வளவு அதிகமாக இருந்ததே இல்லை என்று சொல்லி விடலாம். இதை அமைச்சர் அவர்கள் கவனிக்க வேண்டும். இப்படி விலைவாசிகள் உயர்ந்து கொண்டே போவதைத் தடுப்பதற்கு அமைச்சர் அவர்கள் என்ன நடவடிக்கை எடுத்தார்கள்? வேலை நிறுத்தத்திற்குக் காரணமாக இருந்ததே இந்த விலைவாசி உயர்வுதானே? அந்த உயர்வுக் கேற்ற பஞ்சப்படி தரவேண்டும் என்பது நியாயமற்ற

10th August 1960] [Sri M. Kalyanasundaram]

கோரிக்கையா ? எதேச்சாதிகார நாடு என்று சொல்லப் படுகிற கம்யூனிஸ்ட்டு நாடுகளை விட்டு விடுங்கள். நான் அதைப்பற்றிச் சொல்லவில்லை. இதர பிரான்சு, பிரிட்டன் போன்ற எந்த நாட்டில் பஞ்சப்படி என்று இருக்கிறது ? இங்குதான் கிராக்கிப்படி என்பதைப் பஞ்சப்படி என்று வைத்துக் கொண்டிருக்கிறோம். சம்பளத்தையும் கூட்டாமல், விலை உயர்வுக்கேற்ற பஞ்சப்படியும் தராவிட்டால், அவர் களுடைய வாழ்க்கை எப்படி நடக்கும்? மனம் உடையாமல் அவர்கள் எப்படி இருப்பார்கள்? உயர்ந்து கொண்டே போகிற வாழ்க்கைப் புள்ளிவிவரத்திற்குக் கட்டுப்படியாகும் வகையில் சம்பளத்தையோ, மற்றவற்றையோ கொடுத்துவிட்டு அவர்கள் வேலை நிறுத்தம் செய்யக் கூடாது என்றால் புரிந்து கொள்ள முடியும். அல்லது அவற்றைப் பெறுவதற்குரிய வாய்ப்பைச் செய்து விட்டு வேலை நிறுத்தம் செய்யக் கூடாது என்றால் அதைப் புரிந்துகொள்ள முடியும். அவர்களுடைய வாங்கும் சக்தி எவ்வளவு குறைந்து இருந்தாலும் சரி, பட்டினி கிடந் தாலும் சரி, வேலைநிறுத்தம் செய்யாது உழைக்க வேண்டும் என்றால் இதன் பலாபலன் யாருக்கு? உணவுப்பண்டங்களின் விலைவாசிகள் உயர்ந்துகொண்டே போவதைப்பற்றி இந்தச் சட்டசபையிலும் சரி, வெளியிலும் சரி பல முறையும் வற்புறுத்தப்பட்டு வந்திருக்கிறது. இது ஒரு கட்சிப் பிரச்சினை அல்ல. இது கட்சிக்கு அப்பாற்பட்ட பிரச்சினை. மக்கள் எல்லோருக்கும் உணவுப் பண்டங்கள் வழங்குவது, அவர் களுடைய மொழி சம்பந்தப்பட்ட விஷயங்கள் ஆகியவை ஏதாவதொரு கட்சியின் பிரச்சினையாகக் கருதக்கூடாது. இது தேசியப் பிரச்சினை. ஆகவே இந்தத் தேசியப் பிரச்சினையில் —உணவுப் பண்டங்களின் விலையைக் கட்டுப்படுத்த சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிறது ? எதிர்க் கட்சிக்காரர்கள் என்னவோ கூக்குரல் போடுகிறார்களே என்று சொல்லலாம். எதிர்க்கட்சிக்காரர்கள் சொல்லுகிறார்கள், அதிலும் கம்யூனிஸ்ட் கட்சி அதிகமாகச் சத்தம் போட்டுக் கொண்டிருக்கிறார்கள், என்று மாத்திரம் சொல்லுகிறார்கள். இதைப் பற்றி பிளானிங் கமிஷனிலே பேசினார்களா என்று தெரியவில்லை. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்திலே கூட சுறுசுறுப்பான நடவடிக்கை எடுக்கப் போகிறார்களா என்பதும் சந்தேகம். ஏனென்றால் அதற்கான அறிகுறி ஒன்றையும் காணோம். 'What structure of regulatory devices including price control, zonal arrangement, prescription of minimum and maximum State Trading will ensure optimum results, needs to be carefully examined. These problems are at present under study by a Committee of the National Development Council.' தேசிய அபிவிருத்தி கவுன்சில் முன்பாக விலைவாசிகள் உயர்வைப் பற்றி சொன்னதாகவும், அதை ஒரு நிலைக்குக் கொண்டுவருவது பற்றிய ஆராய்ச்சியும் நடந்து கொண்டிருப்பதாக கனம் நிதி அமைச்சர் அவர்கள் பட்ஜட் பிரசங்கத்தில் குறிப்பிட்ட வாசகம் என்ன ஆயிற்று? இந்தப் பிரச்சினை இன்னும் இருந்து கொண்டே இருக்கிறது. விலைவாசிகள் விஷம் போல் இன்னும் உயர்ந்து கொண்டே இருப்பதை நாம் பார்க்கிறோம். விலை

[Sri M. Kalyanasundaram] [10th August 1960

வாசிகள் உயர்வுக்குக் காரணம் தனியார் துறையில் வியாபாரம் அதிகரித்துக் கொண்டு, விலைவாசிகள் கட்டுப்படுத்த முடியாத அளவிற்கு உயர்ந்துக்கொண்டே போகிறது. போதாக் குறைக்கு, சர்க்கார் தான் நோட்டை அச்சடிக்கிறது என்றால், தனிப்பட்டவர்களும் நோட்டுக்களை அச்சடித்து மக்களிடையே பரவச் செய்திருப்பது மிகவும் வருந்தத் தக்க விஷயம் ஆகும். இதைக் கண்டிப்பாகத் தடுப்பதற்கு சர்க்கார் தீவிர நடவடிக்கை எடுக்க வேண்டும். இது மிக மிக அபாயகரமான ராஜ துவேஷ குற்றம் என்று நினைக்கிறேன். இதைத் தடுப்பதற்கு கால தாமதம் ஏற்படக்கூடாது. அதுவும் நோட்டு அச்சடிப்பது என்பது சாதாரணமான விஷயம் அல்ல. இதைப் பற்றிய வழக்கு கோர்ட்டில் இருப்பதால்—ஸப் ஜுடிஸாக இருப்பதால்—நான் அதிகமாகப் பேசப்போவதில்லை. இதனால் நாட்டில் உற்பத்தியாகும் செல்வம் தனியார் கைக்குப் போய்க் கொண்டிருக்கிறது. விலைவாசியின் உயர்வைத் தடுக்க வேண்டும். நிலத்தில் உற்பத்தியாகக் கூடிய பொருள்கள் தனியார் கைக்குப் போகக் கூடாது. அப்படித் தனியார் கையில் இருப்பதுதான் விலைவாசிகள் ஏற்றத்திற்கு முக்கிய காரணமாக இருக்கும், எந்தப் பொருளையும் வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளுங்கள், உதாரணமாக புளி, மிளகாய், எண்ணெய் முதலிய எல்லா அத்தியாவசியப் பண்டங்களும், விலை உயர்ந்து கொண்டே போகிறது. இதற்குக் காரணம் ஏற்றுமதி என்று சொல்லுகிறார்கள். வெளி நாட்டிற்கு ஏற்றுமதி செய்வதனால் தான் விலைவாசிகள் உயர்ந்து கொண்டே போகிறது என்பதை நான் ஒத்துக் கொள்ள முடியாது. நம் தேசத்தின் முன்னேற்றத் திற்கு, வெளிநாடுகளில் தொடர்பு இருப்பதற்கும், ஓரளவு ஏற்றுமதி செய்வது அவசியமாக இருக்கிறது. இதனால்தான் விலை ஏறிக்கொண்டே போகிறது. ஆகையால் அதைத் தடுக்க வேண்டும் என்று சொல்லுவது சரியல்ல. இதை ஏற்றுக் கொள்ள முடியாது. அரசாங்கம் சரியான புள்ளி விவரங்கள் தான் கொடுத்திருக்கிறார்கள். அதை நான் பாராட்டுகிறேன். அத்தியாவசியமான பண்டங்களின் விலை உயர்ந்து கொண்டே போகிறது. அதைத் தடுக்காமல், உற்பத்தியாகும் பொருள்களை யெல்லாம் தனியார் கையில் கொடுத்து விடுகிறோம். அதுதான் முக்கியமான காரணம். ஸ்டேட் டிரேடிங்கை ஒரு கொள்கை யாக சர்க்கார் கொள்ளவேண்டும். நியாயமான முறையில் விலை வாசியின் உயர்வைத் தடுத்து இந்தப் பிரச்சினையைச் சமாளிக்க முடியும். அப்படியிருக்கும்போது சர்க்கார் ஏன் இதை எடுத்துக்கொள்ள பயப்படுகிறார்கள் என்பது புரியவில்லை. இதற்கு பொதுமக்களும், எல்லாக் கட்சியினரும் நிச்சயம் ஆதரவு அளிப்பார்கள். வேலை நிறுத்தத்தைத் தடுக்க வேண்டும் என்று சொல்லுகிறவர்கள், விலைவாசியை முதலில் தடுத்தால் இந்தப் பிரச்சினையே எழாது என்று தெரிவித்துக் கொள்ளு கிறேன். ஒரு சிலருக்காக, அதுவும் தங்கள் கட்சிக்கு ஆதர வாளர்கள் என்று, ஸ்டேட் டிரேடிங்கை எடுத்துக் கொள்ளாமல் லட்சக் கணக்கான மக்கள் பாதிக்கப்படுவதைப் பார்த்துக் கொண்டு விலையைக் கட்டுப் படுத்தாமல் இருப்பது சரியல்ல என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். இவைகளையெல்லாம்

10th August 1960] [Sri M. Kalyanasundaram]

சிந்தித்துப் பார்த்தால் அரசாங்கத்தின் கொள்கை மீதுதான் குறை கூற வேண்டும். சர்க்காரின் கொள்கை காரணமாகத் தான் இந்த நிலைமை இருக்கிறது. அந்த ஆபத்தான நிலைமையைச் சமாளிப்பதற்கு அரசாங்கம் உடனடியாகத் தலையிட்டு விலைவாசி ஒரே நிலையை அடைவதற்கு முயற்சி எடுத்துக் கொள்ள வேண்டும். இந்த முயற்சி மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலேகூட வெற்றி பெறாது என்றுதான் சொல்ல வேண்டும். தேசீய அபிவிருத்தி கவுன்சிலிலும், டில்லியில் மத்திய அரசாங்கத்திடமும் எடுத்துக்கூறி, தீவிர நடவடிக்கை எடுத்தால் தான் ஸ்டிரைக்கைக்கூட ஓரளவு தவிர்க்க முடியும்.

இந்த நாட்டிலே தொழில் அபிவிருத்தி அடைந்திருக்கிறது; உற்பத்தி பெருகியிருக்கிறது; திட்டங்கள் நிறைவேறியிருக்கின்றன; அதை ஒத்துக்கொள்கிறேன். ஆனால் விலைவாசியின் உயர்வைத் தடுப்பதற்கு சர்க்காரின் கொள்கை என்ன என்பது மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலும் விளக்கப்படவில்லை. தொழிலாளர்கள் சம்பந்தமாகச் சர்க்கார் என்னென்ன கொள்கைகளை அனுசரித்துப் போகிறது என்பதை விளக்கவில்லை. முன்பு 292 ஆயிரம் ஏக்கர் நிலம் பயிர் செய்யப்பட்டது. நீர் பாசனத் திட்டங்கள் நிறைவேறிய பிறகு 3½ லட்சம் ஏக்கர் நிலத்தில் சாகுபடியாகிக்கொண்டிருக்கிறது. அரசாங்கம் சரியான புள்ளி விவரங்கள் கொடுத்திருக்கிறது. இதில் தவறு ஒன்றுமில்லை. இந்தப் புள்ளிவிவரத்தை நாங்கள் ஏற்றுக் கொள்ளுகிறோம். உற்பத்தி பெருகியிருக்கிறது. திட்டங்கள் பெருகியிருக்கிறது, இல்லை என்று சொல்லவில்லை. ஆனால் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் தொழிலாளர்கள் கொள்கை என்ன? விலைவாசியின் கொள்கை என்ன? தொழிலாளர்கள் சம்பந்தப்பட்ட மட்டில் அவர்கள் வேலை நிறுத்தம் செய்வதற்குக் காரணம் என்ன? விலைவாசியின் உயர்வுதான் காரணம் என்பதை அரசாங்கம் சிந்தித்துப் பார்க்க வேண்டும். தொழிற் சங்கத்தை ஒழித்துக்கட்டப் பார்க்கிறார்களே தவிர பதுக்கல்காரர்களை ஒழித்து தேசத்தினுடைய நலனைப் பாதுகாக்க பயப்படுகிறார்கள். இதற்கு ஆதரவு கொடுக்க மக்கள் இருக்கிறார்கள். இந்த மன்றம் இருக்கிறது. இங்கே எல்லோரையும் கலந்தாலோசித்து ஏற்ற நடவடிக்கை எடுக்கலாம். சகல அரசியல் கட்சிகளும் இதற்கு ஒத்துழைப்பார்கள். அதை விட்டுவிட்டு, ஒரு தொழிற்சங்கக் கட்சியிலுள்ள அங்கத்தினர்களை இன்னொரு தொழிற்சங்கத்திற்கு மாற்றுவதற்கு போலீஸை உபயோகித்து நடவடிக்கை எடுத்துக் கொண்டு வருகிறார்கள். இந்தத் தொழிற்சங்கம், கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்ததா அல்லது திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்ததா என்று பார்த்து தங்கள் அதிகாரத்தை அரசியல் கட்சியில் பிரயோகப்படுத்துகிறார்கள். அதனால் சமீபத்தில் பல தொழில் தகராறுகள் மத்தியஸ்தத்திற்கு விடப்படவில்லை என்பதைச் சொல்ல விரும்புகிறேன். சமீபத்தில் பஞ்சாலைத் தகராறில் சமரசம் ஏற்பட்டதை வரவேற்கிறேன். அதற்காகச் சந்தோஷப்படுகிறேன். ஆனால் அதற்கு அரசாங்கம் பொறுப்பா? அரசாங்கத்திற்கு

[Sri M. Kalyanasundaram] [10th August 1960

அதிலுள்ள பங்கு என்ன? அரசாங்கம் ஆட்களை கூட்டி வைத்திருக்கலாம். ஆனால் யார் விட்டுக் கொடுத்தது? யார் விட்டுக் கொடுத்தது யாரது உரிமை பாதுகாக்கப் பட்டிருக் கிறது என்று பார்த்தால் தொழிலாளர்களைத்தான் நாம் பாராட்ட வேண்டும். தொழிலாளர்களும், தொழிற்சங்கமும் விட்டுக் கொடுத்துத்தான் சமரசம் ஏற்பட்டதே தவிர முதலாளிகள் விட்டுக் கொடுத்தல்ல. அல்லது அரசாங்கம் முதலாளிகள் மீது எடுத்த நடவடிக்கைகளினால் அல்ல. எதிர்க் கட்சிகளைத் தாக்குவதற்கு, அரசாங்க அதிகாரத்தைப் பயன் படுத்த வேண்டாமென்று கேட்டுக் கொள்கிறேன். திருச்சி ஜில்லாவில் புதுக்கோட்டை பக்கத்தில் ஒரு பஞ்சாலை மூடப்பட் டிருக்கிறது. அதை அரசியல் காரணத்திற்காக உபயோகப் படுத்துகிறார்கள். அதன் தொழிற் சங்கம் அகில இந்திய தொழிற் சங்க காங்கிரஸோடு இணைக்கப்பட்டது. அது இதற்கு முன்பு ஐ.என்.டி.யு.சி.-யில் இருந்தது. பின்னர், அது ஏ.ஐ.டி.யு.ஸி.-யோடு சேர்க்கப்பட்டது. கோவையில் இருப்பதைவிட அதிக வேலைப் பளுவை செய்ய முதலாளிகள் நிர்பந்தித்துக் கொண்டு வந்தார்கள். அது முடியாததால் நெருப்புப் பிடித்த சாக்கைக் காண்பித்து 800 தொழிலாளர்களை வேலையிலிருந்து நீக்கியிருக்கிறார்கள் இரண்டு மாத காலமாக. அது சரியா? அந்தத் தொழிலாளர்களை ஐ.என்.டி.யு.ஸி.-யில் சேருவார்களேயானால் அந்த மில்லைத் திறக்கிறேன் என்று அந்த முதலாளி பகிரங்கமாகக் கூறுகிறார். நான் கேட்கிறேன், இந்த "க்ளோஷர்" நியாயமா என்று? தொழிலாளர்களை வேலையி லிருந்து நீக்கியிருப்பது சட்டப்படி செல்லத் தக்கதா என்பதைப் பரிசீலனை செய்யவேண்டுமென்று கேட்கிறேன். கூறப்படும் காரணம் உண்மையான காரணமா? இது குறித்து . . .

THE HON. SRI R. VENKATARAMAN: இந்த விவாதத்தில் எனக்குப் பதில் சொல்ல சந்தர்ப்பம் இல்லையாதலால் இப்போதே ஒரு நிமிஷத்தில் இதற்கு பதில் சொல்லிவிடுகிறேன். 5 லட்சம் ரூபாய் பெருமான பஞ்சு அந்த இடத்தில் எறிந்து விட்டது. ஆகவே எம்களால் மில்லை நடத்த முடியாது என்று அவர்கள் சொன்னதால் வேறு நடவடிக்கை எடுக்க முடியவில்லை.

MR. SPEAKER: The hon. Member has already taken 27 minutes.

SRI M. KALYANASUNDARAM: முதலாளி சொன்ன காரணத்தைத்தான் சொல்லுகிறார்களே தவிர அது நியாயமான காரணமா என்பதைப் பரிசீலனை செய்யவேண்டுமென்றுதான் சொல்கிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN: போலீஸ் ரிப்போர்ட் டும் அது மாதிரித்தான்.

SRI M. KALYANASUNDARAM: தீ பிடித்தது உண்மையே. ஆனால் உண்மையில் மில்லை "க்ளோஸ்" செய்யப் போகிறார்களா? வேறு முறையில் அதைத் தொடர்ந்து

10th August 1960] [Sri M. Kalyanasundaram]

நடத்தப் போகிறூர்களா? வேலே தொடங்க வேண்டு மென்பதுதான் முதலாளியின் நோக்கம். அதற்குச் சர்க்கார் கொள்கை உதவியளிக்கிறது.

THE HON. SRI R. VENKATARAMAN: அது உங்கள் கட்சி.

SRI M. KALYANASUNDARAM: அதைப் பரிசீலிக்க வேண்டுமென்று சொன்னேன். நான் சொல்வது சரியல்ல என்றுல் அதை நிரூபிக்கட்டும். தொழிலாளர்கள் சம்பந்தப் பட்ட மட்டில், தொழிற்சங்கங்களே அரசியல் காரணத்திற்காகப் பாகுபடுத்தி, குரோதத்தோடு நடத்துவது என்ற தொழில் கொள்கை இருந்தால் மூன்றுவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் தொழில் அமைதி கெட்டு, தகராறு ஜாஸ்தியாகுமே தவிர தொழில் அமைதி ஏற்படாது. அதோடு திட்டமிட்டபடி, திட்ட மிட்ட முறையில், உற்பத்தி பெருக வேண்டுமென்று சொன்னுல் சர்க்கார் கொள்கையில் மாறுதல் வேண்டும். குறிப்பாக, விலே வாசிக் கொள்கையில், தொழிலாளர் சம்பந்தப்பட்ட மட்டில் அவர்கள் கையாண்டு வரக் கூடிய கொள்கையில் மாறுதல் வேண்டுமென்று கூறிக்கொண்டு எனது உரையை முடிக்கிறேன்.

MR. SPEAKER: $3\frac{1}{2}$ மணி நேரம் இருக்கிறது. 20 அங்கத்தினர்கள் பேசுவதற்கு என்னிடம் பெயர் கொடுத்திருக் கிறூர்கள். ஒவ்வொரு அங்கத்தினரும் பத்து நிமிஷத்திற்கு மேல் பேச வேண்டாமென்று கேட்டுக் கொள்கிறேன். அப்படியானுல் $3\frac{1}{2}$ மணி நேரத்திற்குள் எல்லோரும் பேச முடியும். ஒன்பது நிமிடம் ஆன உடன் மணி அடிப்பேன். பத்து நிமிஷத்திற்குள் அவர்கள் பேச்சை முடித்துவிட வேண்டும்.

* SRI A. A. RASHEED: Mr. Speaker, Sir, it is but natural that we should give a Vote of Thanks to the Governor for his Address because the Governor's Address contains a resume of, past achievements, present progress, and the future prospects in the agricultural, educational and industrial fields. It has also touched upon the problem of language and hence I would like to speak first on the language problem.

Sir, in India there are fourteen constitutionally recognised languages, but we have no common language for inter-State correspondence. Hence, a language must be found. Sir, the greatest heritage of the British regime was the introduction of the English language. It had a unifying force. It was this language which was used by our leaders to rouse the masses during the freedom struggle. (The Hon. Sri C. Subramaniam : Not for rousing masses.) At least from the English newspapers they were able to get support from the public. I am not pleading here for the retention of English but one common language must be found. What is the common language—whether it should be Hindi or English or should both the languages continue as common languages? In the case of Hindi, it has limited vocabulary and limited literature and besides the Hindi fanatics had made it so much Sanskritized that it is difficult to understand even for a Urdu knowing person like me. Sir Hindi should not be the common language till it attains proficiency and until that time English

[Sri A .A. Rasheed] [10th August 1960

should continue to be the common language. Also only when the Southern States have attained proficiency, perhaps we can think of making Hindi the common language. With due apologies and in the face of the protest of the Dravida Munnetra Kazhagam, I would say that one of the Indian languages must become a common language of the *lingua franca* of India.

What have we done? Have we done the right thing in our State? It is up to the Government to see whether they have done the right thing in introducing Tamil as the medium of instruction at the college level, when many educationists of the type of Dr. C. P. Ramaswami Iyer, Dr. Lakshmanaswami Mudaliyar, Dr. Subbarayan and many others regard this, as a wrong-minded obstinacy of the Government and not based on calculated reasoning.

MR. SPEAKER : The hon. Member need not drag in the names of those who are not in this House.

SRI A. A. RASHEED : I am guided by my elders.

Sir, besides, many English and Tamil dailies consider that it is not a desirable step. Why? Because there are only a very few Tamil text-books for the University classes. Until the original text is written in Tamil, we should postpone it. I am, sure, the day will not be very far when text-books will be written in Tamil, when all colleges could have Tamil as the medium of instruction. Until that time I would request the Government to go slow with their policy and not entirely drop the proposal. (The Hon. Sri C. Subramaniam : What is your opinion?) The Government have introduced it in one college. Let them await the results of the experiment in that college and then introduce it in other colleges, instead of trying to introduce it in all colleges and making it a failure.

Sir, the Government must be like Caesar's wife. They must be above suspicion. Now I may refer to another controversial subject but I am not going to say much on that because the matter is *sub judice*. I refer to the appointment of Sri Alagirisami as the Government Pleader.

MR. SPEAKER : I must draw the attention of the hon. Member to the fact that the matter is *sub judice* and so he should not refer to it to-day. The judgment is being reserved and he cannot refer to it individually.

SRI A. A. RASHEED : I am not saying that the appointment was a wrong one. The Government have done the right thing.

THE HON. SRI C. SUBRAMANIAM : I do not think the hon. Member can express even such an opinion. Either way he cannot express it.

MR. SPEAKER : The hon. Member is well advised not to refer to it and I would appeal to him not to persist in that.

SRI A. A. RASHEED : Justice should not only be just but also appear to be just. What Government does, should not only be right but appear to be right.

10th August 1960] [Sri A. A. Rasheed]

A scare has been created by the circulation of forged notes in cities and towns. As a result even genuine 100-rupees notes are exchanged at discount. I would request Government to recommend to the Union Government to demonetise 100-rupee notes and take back all 100-rupee notes under circulation now and issue fresh 100-rupee notes so that this scare and chaos and confusion created by forged notes may be put an end to.

Many hon. Members of this House have referred in their speeches mainly to the ever-increasing price of essential commodities. The price has risen to the detriment of the fixed salary earners. The purchasing power of money has gone down to 25 per cent of what it was in 1935. The time has come when Government should solve the problem. Government should control the increase in prices. Giving more salary to public servants means more money in circulation and more inflation That amounts to too much money chasing too few articles. If things are allowed to go as at present, the time is not far off when bagfull of notes will purchase only a handful of articles. God forbid, let us not reach that stage.

To solve the ever-increasing price problem, the hon. Member from Lalgudi has given a suggestion. He has said that Government should give more subsidy so that we could control the increase in prices. Has that hon. Member realised the immensity of the problem? Has he realised the amount of money that would have to be spent on subsidy? The whole of the money that we have allotted for the Third Five-Year Plan would not be sufficient if Government were to come forward to give subsidy to all commodities produced by the ryots It is true that the tiller of the soil must get his share. But that does not mean that he, the tiller, should put the community to ransom. Someting must be done immediately and quickly to this problem of ever-increasing prices. It is a contradiction in terms to say that when production has increased, prices also have increased at the same time. (The Hon. Sri R. Venkataraman : If the hon. Member knew economics, he would understand it.) I would like to tell the Hon. Minister for Industries that I am an Economics Graduate of the Madras University. I know something of economics.

THE HON. SRI C. SUBRAMANIAM : That is the real difficulty. The hon. Member should re-learn what economics he would have learnt in colleges because they do not apply to the present-day conditions.

SRI A. A. RASHEED : There is no use of saying that the Doctor has performed the operation successfully but that the patient has died. The operation should be performed keeping the patient alive.

What about the State we are living in and also the country we are living in? When Vinobaji was asked whether we are having a Welfare State in our country he stated that it is an Illfare State that we are living in. Has he told the right thing or is he wrong?

There is some truth in what he said. I am not belittling the achievements of this Government. We have done a lot to improve the lot of the villages and the public at large. (The time bell was rung.)

One minute, Sir. I would like to say something about the development of Tuticorin Port and the taking up of the Sethusamudram Project because yesterday the Hon. Minister for Finance has given an assurance that he would again address the Government of India to include these two schemes in the Third Plan. These two schemes shuold be included in the Third Plan. Otherwise people of the south will say that the Union Government is not Government of the people but, Government of the North, by the North and for the North. Let us not allow that thing to be said of the Government.

There are already proposals to establish a ship-building yard at Cochin. I welcome it. But it is a disturbing bit of news to find that an oil refinery is also going to be established near Cochin itself. Do we not have a suitable place in Madras State to locate an oil refinery? Why should even the oil refinery, besides the ship-building yard, be established near Cochin?

THE HON. SRI C. SUBRAMANIAM: How does the hon. Member say that?

SRI A. A. RASHEED: I have read so in the newspapers. If it is wrong, the Hon. Minister can contradict me and say that it is not proposed to establish an oil-refinery at Cochin.

THE HON. SRI C. SUBRAMANIAM: If newspapers could establish refineries I think we should have 100 refineries in our country today. I do not think hon. Members should give credence to such kind of newspaper reports.

* SRI S. RAMALINGA PADAYACHI: கனம் சட்ட மன்ற தலைவர் அவர்களே, கவர்னர் அவர்களுடைய உரைக்கு திரு. லாசர் அவர்கள் கொண்டுவந்திருக்கும் நன்றித் தீர்மானத்தின்மீது, அதை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் பேச ஆசைப்படுகிறேன். சமீபத்தில் மத்திய அரசாங்க ஊழியர்கள் வேலை நிறுத்தம் செய்து பல தொந்தரவுகளை ஏற்படுத்தினார்கள். நாட்டிலுள்ள தலைவர்கள் எல்லாம் வேலைநிறுத்தம் செய்யக் கூடாது என்று கேட்டுக் கொண்டும்கூட மத்திய சர்க்கார் ஊழியர்கள் வேலை நிறுத்தம் செய்தது மிகவும் வருந்ததக்க விஷயம். குறிப்பாக திருச்சியில் இதனால் பலவிதமான தொந்தரவுகள் ஏற்பட்டன. ஒரு அரசியல் கட்சி தொழிலாளிகள் அங்கு வேலை செய்யப்போனபோது வேறு இரண்டு அரசியல் கட்சியில் அமைந்திருக்கும் தொழிலாளிகள் அவர்களை அடித்து ஒருவர் கையை ஒடித்துவிட்டும் மேலும் கலகம் நடக்கும் நிலைமையிலிருந்தபொழுது வேலைக்குப் போகக்கூடாது என்று தடுத்து நிறுத்தினார்கள். அப்போது அங்குள்ள மாவட்ட கலக்டர் அவர்களும், டி.எஸ்.பி. அவர்களும் தக்க நடவடிக்கை எடுத்துத் தொந்தரவு செய்த ஊழியர்களை அப்புறப்படுத்தினார்கள். இதன் காரணமாக பொதுமக்களுக்கு எவ்வளவோ கஷ்டங்கள்

10th August 1960] [Sri S. Ramalinga Padayachi]

ஏற்பட்டன. இம்மாதிரி வேலைநிறுத்தம்கள் நடைபெறுவதினால் அரசாங்கத்தின் முற்போக்கு சக்திகள் எல்லாம் தடைபடு கின்றன. அதோடு எந்த நாட்டிலும் இம்மாதிரியான போக்கு நடைபெற்றிருக்காது. இதைப்பற்றி நேற்றுகூட திராவிட முன்னேற்றக்கழகத்திலுள்ள ஒரு அங்கத்தினர், "வேலை நிறுத்த காலத்தில் காங்கிரஸ் அங்கத்தினர்கள் வீட்டுக் வீடாகப் போய் வேலைக்குப் போங்கள் என்று சொன்னார்கள். மண்டல காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினர்களே தபால் கடிதங்களை வீடு வீடாகக் கொண்டுபோய் கொடுத்தார்கள்; அது காங்கிரஸ் அங் கத்தினர்களுக்கு இழிவு இல்லவா" என்று கேட்டார். இதில் என்ன இழிவு இருக்கிறது? இவ்விதமான வேலைநிறுத்தங்கள் நடைபெறுவதால் பொதுமக்களுடைய பணிகள் கெட்டுப் போகக்கூடாது என்பது காங்கிரஸ்காரர்கள் எண்ணம். அது மட்டுமல்ல. நாட்டுக்கு சுதந்திரம் வாங்கித்தந்த தலைவர்களின் வழியில் வேலை செய்து கொண்டிருக்கும் நமது தலைவர்களும் இவ்வித பணியை செய்தார்கள். இதில் எந்த விதமான தவறும் இல்லை என்றுதான் சொல்லமுடியும். ஆகவே இம்மாதிரி செய்தது சரியா தப்பா என்று இந்தச் சபையில் கேட்டுக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

அடுத்தபடியாக, திருத்தணி நம்முடைய தாயகத்தோடு சேர்ந்ததைப்பற்றி அங்கிருந்து வந்துள்ள நம்முடைய அங்கத் தினர் தங்களுடைய மகிழ்ச்சியைத் தெரிவித்தார்கள். தாயகத் தில் சேர்ந்த மக்களைப் பாராட்ட வேண்டியது நம்முடைய கடமையாகும்.

அடுத்தபடியாக, ஆரணியாறுத் திட்டம், பரம்பிக்குளத் திட்டம் எல்லாம் சுமுகமாகத் தீர்க்கப்பட்டிருக்கிறது. நம் முடைய அரசாங்கத்திற்கு மேலாக இப்படி ஒரு மத்திய அரசாங்கம் இருக்கின்ற காரணத்தினால்தான் இவ்விதமான திட்டங்கள் எல்லாம் சுமுகமாகத் தீர்க்கப்பட்டிருக்கின்றன. அதல்லாமல் நாம் தனியாகப் பிரிந்து இருப்போமானால் இம் மாதிரியான ஒரு பலனை நாம் அடைய முடியுமா? ஆகவே நாட்டுப் பிரிவினை என்பது பொருத்தமற்றது. நாடு பிரிவினைப் பட்டு இருந்தால் நிச்சயமாக இதுபோன்ற பலன்கள் எல்லாம் கிடைக்காமல் போகலாம். ஆகவே இனிமேலாவது நாட்டுப் பிரிவினை வேண்டும் என்று சொல்லுபவர்கள் அவ்விதம் சொல்லுவதைக் கைவிடுவார்கள் என்று எண்ணுகிறேன்.

அடுத்தபடியாக, இந்தி மொழியைப்பற்றி சிலர் என்ன வெல்லாமோ சொல்லுகிறார்கள். முன்னால் 6,000 மைல்களுக்கு அப்பாலிருந்து வந்து நம்மை ஆண்டு கொண்டிருந்த போது அந்த மொழி வேண்டாம் என்று அப்போது யாரும் சொல்ல வில்லை. ஆனால் இப்போது மட்டும் நம்முடைய இந்தியாவில் உள்ள ஒரு மொழியாகிய இந்தி வேண்டாம் என்று சொல்லு வதில் என்ன பொருத்தம் இருக்கிறது? நாணயங்களில் எல்லாம் நயா பைசா என்று எழுதுவதினால் இந்தி புகுத்தப்படுகிறது என்று சொல்லுகிறார்கள். ஆனால் அது சரியல்ல, நம்முடைய போதனை மொழி தமிழாகத் தான் இருந்து கொண்டிருக்கிறது. இந்தியாவிலுள்ள எல்லோரும் ஒரே வகையில் செயல் பட்டுக்

[Sri S. Ramalinga Padayachi] [10th August 1960

கொண்டிருக்க வேண்டுமானல் நாணயங்களிலும், மைல் கல் களிலும் இந்தி எழுதுவதனல் எந்தவிதத் தவறும் இல்லை. இந்தியா பூராவுக்கும் ஒரே மொழி இருக்கவேண்டும் என்று சொல்லுவது பாராட்டத்தக்கதுதான் என்று சொல்ல ஆசைப் படுகிறேன்.

அடுத்தபடியாக தென்-மேற்கு பருவக் காற்று மழை இந்த
10-10 a.m. வருஷம் அதிகமாக இல்லை—நதிப் பெருக்கு அதிகமாக இல்லை— என்று சொன்னலும் கூட, குறிப்பிட்ட காலத்தில் கோடை மழை பெய்திருக்கிறது. அதோடு புஞ்சைக்கு வேண்டிய காலத் தில் பெய்யும் மழையும் நல்ல முறையில் பெய்திருக்கிறது. மலையாளப் பகுதியில் பெய்யும் மழை அதிகமாகப் பெய்யா விட்டாலும் கூட நமது மாநிலத்தில் பெய்யக் கூடிய மழை நல்ல முறையில் பெய்திருக்கிறது. வட கிழக்குப் பருவக் காற்று மழை யும் சரியான முறையில் பெய்யும், அதனல் எந்த விதமான கஷ்டமும் இருக்காது என்று நம்புகிறேன்.

அடுத்தபடியாக தொழிற்சாலைகளைப் பற்றி கவர்னர் பெருமான் உரையில் குறிப்பிடப்பட்டுள்ளது. கச்சா ஃபிலிம் தொழிற்சாலை உதகையில் ஏற்படும் என்று சொல்லியிருக் கிறர்கள். இது மிக மிக வரவேற்கத்தக்கது. இந்தத் தொழிற் சாலைக்கான இடம் உதகையானலும் கூட, வேறு இரண்டு தொழிற்சாலைகளைச் சென்னையில் ஏற்படுத்தப் போவதாகக் குறிப் பிட்டிருக்கிறர்கள். ஒரே இடத்தில் சென்னையைப் போல அதிகமான ஜன நெருக்கம் இருக்கக் கூடிய இடத்தில்—மேலும் மேலும் தொழிற்சாலைகளை ஏற்படுத்திக் கொண்டே போனல் இன்னும் அதிக ஜன நெருக்கம் ஏற்படும். திருச்சியில் நல்ல தண்ணீர் வசதி இருக்கிறது. இட வசதியும் இருக்கிறது. ஆகவே இந்தத் தொழிற்சாலைகளை ஒரே இடத்தில் வைக்காமல் திருச்சி போன்ற இடங்களிலும் பரவலாக ஏற்படுத்தினல் ஆங் காங்கு தொழில் வசதி ஏற்படும். அதனல் ஜன நெருக்கம் அதிக மாகி கஷ்டங்களும் ஏற்படாது என்று எடுத்துச் சொல்ல விரும்புகிறேன்.

நெய்வேலியைப் பொறுத்த வரையில் வேலை நல்ல முறையில் நடந்துகொண்டு வருகிறது. குறிப்பிட்ட காலத்திற்கு முன்ன லேயே ம்வேலை முடிந்துவிடக்கூடிய நிலைமை இருக்கிறது. நெய் வேலியில் பழுப்பு நிலக்கரி எடுத்த பிறகு சேலத்தில் உருக்குத் தொழிற்சாலை ஆரம்பிக்க இருக்கிறது. இந்த நெய்வேலித் திட்டம் பூர்த்தியானவுடன் வட நாடு வளர்கிறது, தென் நாடு வஞ்சிக்கப்படுகிறது என்று சொல்வதற்கு இடமில்லாமல் போய் விடும் என்று நான் நினைக்கிறேன். ஒவ்வொரு நாட்டுக்கும் எந்தெந்த சமயத்தில் வசதி ஏற்படுகிறதோ அந்தந்த சமயத்தில் தான் இதையெல்லாம் செய்ய முடியுமே தவிர, அதற்கு முன் பாகச் செய்ய முடியாது. இப்போது தென் நாடு வளர்ந்து கொண்டுதான் வருகிறது. தென் நாடு வஞ்சிக்கப்படுவதாகச் சொல்ல முடியாது. இனிமேலும் இந்த மாதிரித் தொழில்கள் இங்கே அதிகமாக ஏற்படும்போது இந்த மாதிரி சொல்ல முடியாது என்று எடுத்துக்காட்ட விரும்புகிறேன்.

10th August 1960] [Sri S. Ramalinga Padayachi]

அடுத்தபடியாக மின்சாரத்தைப் பற்றிச் சொல்லும்போது இப்போது இருக்கும் மின்சாரத்தை விட இனிமேல் குந்தாத் திட்டத்தினுல் அதிகமாகக் கிடைக்கும். இது வரையில் நமது நாட்டிலே 10,000 கிராமங்களுக்கு மின்சாரம் கொடுக்கப் பட்டதாகச் சொல்லப்படுகிறது. மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்திலே அனல் விசை மின் சக்தி நிலையம் நெய்வேலியில் ஏற்பட்ட பிறகு எல்லா கிராமங்களுக்கும் கொடுப்பதாக இருக் கிருர்கள். மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்திற்குப் பிறகு மற்ற மாநிலங்களுக்கும் கூட மின்சாரம் கொடுக்கக் கூடிய வசதி ஏற்படும். மற்ற மாநிலங்களை விட நமக்கு அதிக வசதி ஏற்படப் போகிறது. அமைச்சர் அவர்கள் பெரு முயற்சியெடுத்து மின்சார உற்பத்தியை அதிகப்படுத்தியதற்கு மாநில மக்களின் சார்பாக அவர்களுக்கு நன்றி கூறக் கடமைப்பட்டிருக்கிருேம்.

அடுத்தபடியாக நீர்ப்பாசனத்தைப் பொறுத்த வரையில், சிறிய நீர்ப்பாசனத் திட்டங்களான ஆயக்கட்டு ஏரிகள் பழுது பார்க்கப்படாத நிலையில் இருக்கின்றன. குறிப்பாக உடையார் பாளையம் தாலுக்காவில் குழமூர் ஏரி 15 ஆண்டுகாலமாக ஒன்றும் செய்யப்படாத நிலையில் இருக்கிறது. 15 ஆண்டு களுக்கு முன்பு திட்டம் ஏற்படுத்தியும் கூட, 4–5 ஆண்டுகளுக்கு முன்பு 85,000 ரூபாய் செலவில் செய்வதற்கு திட்டம் அப்ருவ் ஆகியும் கூட வேலை எடுத்துக்கொள்ளப்படாமல் இருக்கிறது. அதை உடனடியாக எடுத்துக்கொள்ள வேண்டுமென்று விரும்பு கிறேன்.

அடுத்தபடியாக சொட்டைப்பாளையத்திலிருந்து நாமக்கல் வழியாக எங்கள் பகுதிக்கு தண்ணீர் கொடுக்க சாத்தியம் இருக் கிறது என்று சொல்லப்பட்டது. பெரம்பலூர் உயரமான லெவலில் இருப்பதால் சாத்தியமில்லை என்று சொன்ஞர்கள். உடையார்பாளையம் மிக தூரமாக இருப்பதால் தண்ணீர் கொடுக்க சாத்தியமில்லை என்று சர்க்காரிடமிருந்து தகவல் வந் திருக்கிறது. சொட்டைப்பாளையத்திலிருந்து 15 மைல் அளவுக்கு உயரமாக இருந்தாலும், தண்ணீர் பாயக்கூடிய வாய்ப்பு இருக்கும் இடங்களுக்கு தண்ணீர் கொண்டுவர வசதி இருக்கிறது. ஆகையால் சர்க்கார் இதை மறு பரிசீலனை செய்து இந்தத் திட்டத்தை நிறைவேற்றவேண்டுமென்று கேட்டுக் கொண்டு இத்துடன் முடித்துக்கொள்கிறேன்.

* SRI K. RAMACHANDRAN: கனம் சபாநாயகர் அவர்களே, கவர்னர்பெருமான் ஆற்றிய உரையின்மீதும், அதன் மீது வந்துள்ள தீர்மானங்களின் மீதும் எனது கருத்துக்களைச் சொல்ல ஆசைப்படுகிறேன்.

பொதுவாக முதலிலேயே மத்திய சர்க்கார் ஊழியர்கள் ஸ்டிரைக்கைப்பற்றி கவர்னர் அவர்கள் குறிப்பிட்டிருக்கிருர்கள். அந்த ஸ்டிரைக் வந்து, அது நடந்து, முடிந்ததுமே பொது மக்களுக்குத் திருப்திகரமாக இருக்கிறது என்று சொல்ல வேண்டியிருக்கிறது. ஏனென்ருல் தேவையில்லாமல் ஒரு ஸ்டிரைக்கை ஆரம்பித்தது பொதுவாக யாருக்குமே பிடிக்காத விஷயமாக இருந்தது. பொதுமக்களுடைய கருத்தைப் பார்த் தால் ஸ்டிரைக் காலத்தில் ரயில்கள் கூட சரியான நேரத்தில்

வந்துகொண்டிருந்தன—இந்த மாதிரி இருந்தால் கூடத் தேவலை என்ற அளவுக்கு பேச்சு இருந்தது. ஸ்டிரைக் காலத்தில் பல இடங்களில் சென்று பார்க்கும்போது ரயில்கள் "டு தி மினிட்" சரியாக வந்துகொண்டிருந்தன. பல இடங்களில் சென்று பார்த்தோம். நானும் கூட ஒரு கிளாஸ்—4 ஊழியர்கள் யூனியனின் தலைவராக இருக்கிறேன் இந்த ஸ்டிரைக்கைப்பற்றி முன் அறிவிப்பே கிடையாது. அவர்களை விசாரித்ததில் திடீரென்று எங்களை ஸ்டிரைக் செய்யவேண்டுமென்று மேலே யிருந்து சொல்கிறார்கள் என்று சொன்னார்கள். 12 மணிக்கு ஸ்டிரைக் ஆரம்பிப்பதில் 11 மணி வரையில் என்ன என்று சொல்ல முடியாத நிலையில் இருந்தது. பொதுவாக கனம் அங்கத்தினர் திரு. கல்யாணசுந்திரம் அவர்கள் சொன்னது போல விலைவாசி அதிகமாகி விட்டது என்ற காரணத்திற்காக இந்த ஸ்டிரைக்கைச் செய்தார்கள் என்பதை ஒப்புக்கொள்ள முடியாது. யாரோ ஒரு சிலர் கூறியதற்காகத்தான் இந்த ஸ்டிரைக்கைச் செய்ய முன் வந்திருக்கிறார்கள். விலைவாசி உயர்வுபற்றிச் சொன்னார்கள். விலைவாசி உயர்ந்திருப்பது வாஸ்தவம்தான். ஒப்புக்கொள்கிறேன். 3 லட்சம் பேர்களுக்கு மட்டுமல்ல இந்த விலைவாசி உயர்வு. மத்திய சர்க்கார் ஊழியர் கள் 22 லட்சம் பேர்களில் 3 லட்சம் பேர்கள்தான் ஸ்டிரைக் செய் திருக்கிறார்கள். மற்றவர்களுக்கும்தான் இந்த உயர்வு இருக் கிறது. அதே போல ஸ்டேட் அரசாங்க ஊழியர்கள் இருக் கிறார்கள். மற்றவர்களெல்லாம் இருக்கிறார்கள். மூன்று மாதங் களுக்கு முன்புதான் மத்திய சர்க்கார் சம்பளக் கமிஷன் ரிப்போர்ட் வந்திருக்கிறது. இந்த நேரத்தில், இந்த நிலையில் ஸ்டிரைக் நடந்திருக்கிறது. இதைப் போன்ற காரியங்களில் அனுபவம் இல்லாமல் செய்துவிட்டார்கள் என்று அனுதாபப் பட்டார்கள். நானும்கூட அனுதாபப்படுகிறேன். இப்படிப் பட்ட தொழிற் சங்கத் தலைவர்களை நம்பி ஏதோ செய்து விட்டார்கள், அனுபவமில்லாதவர்கள். இந்த ஸ்டிரைக் வெற்றியடைந்திருந்தால் இதை நாங்கள்தான் ஏற்று நடத்தி னோம், மாபெரும் வெற்றி வந்துவிட்டது என்று சொல்வார்கள். இன்றைக்குத் தோல்வியடைந்து விட்டதால் "பாவம், அனுபவ மில்லாதவர்கள்" என்று சொல்லுகிறார்கள். சிப்பந்திகளுக்கு தொழிற் சங்க உரிமைகள் இருக்க வேண்டுமென்று வரவேற்பவர் களுள் நானும் ஒருவன்தான். ஆனால் இந்த மாதிரியான தொழிற் சங்கத் தலைவர்களை நம்பி காரியத்தில் ஈடுபடக் கூடாது. இதை ஒரு படிப்பினையாக எடுத்துக்கொள்ள வேண்டும். நமது மாநில சிப்பந்திகள் கூட அனுதாபம் தெரி வித்ததாகச் சொன்னார்கள். இவர்களுக்குள் இருக்கக் கூடிய டிஸ்பாரிட்டியே பெரிதாக இருக்கிறது. இதையெல்லாம் மனதில்கொண்டு சர்க்கார் நல்ல விதத்தில் சம்பளத்தை உயர்த்தி யிருப்பதைப்பற்றி நான் மிகவும் சந்தோஷப்படுகிறேன். இந்த மாதிரி சர்க்கார் சிப்பந்திகள் ஈடுபடக் கூடாது என்பதுதான் என்னுடைய கருத்தும்கூட.

அடுத்தபடியாக, மொழிப் பிரச்னைபற்றிச் சொல்லப்பட்டிருக் கிறது. சென்னை சர்க்கார் கடைப்பிடிக்கும் திட்டம் நன்றாகத் தான் இருக்கிறது. நம்முடைய ராஜ்யத்தைப் பொறுத்த

10th August 1960] [Sri K. Ramachandran]

வரையில் தமிழ் முக்கியம் என்றிருக்கிறது. இந்தியுடன்கூட மற்ற மொழிகளும் கற்பதற்கு வகை செய்யப்பட்டிருக்கிறது. ஆனாலும் கூட இன்றைக்கு இருக்கக் கூடிய நிலைமை இந்தி ஒவ்வொரு விதத்திலும் ஆதிக்கம் பெறக் கூடிய நிலைமைதான் கண்ணுக்குத் தெரிகிறது. இன்றைக்கு இருக்கக் கூடிய நிலைமையில் இந்திக்கு அவ்வளவு முக்கியத்துவம் இருக்க வேண்டிய அவசியமில்லை. அந்த மொழியின் ஆதிக்கம் ஏற்படக் கூடிய நிலைமை ஏற்படுமானல் அது விரும்பத்தக்கதல்ல. ஆங்கிலம் எல்லோருக்கும் ஒரு பொதுவான மொழியாக இருக்க சந்தர்ப்பம் இருக்கிறது. இந்திக்கு முக்கியத்துவம் கொடுக்கும் நிலைமையை நீக்க நமது அரசாங்கம் பாடுபட வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

நீர்ப்பாசனத்தைப் பொறுத்தவரை, பரம்பிக்குளத் திட்டத்தைப் பொறுத்து ஒரு நல்ல முடிவு ஏற்பட்டது குறித்துச் சந்தோஷப்படுகிறேன். கவர்னர் உரையிலே, கேரளத்துடன் மற்ற பல திட்டங்களைப் பற்றியும் பேசி முடிவு காண முயற்சி எடுத்துக் கொள்ளப்படும் என்று கூறியிருந்தால் நான் சந்தோஷப்பட்டிருப்பேன். "அப்பர் பெரியார்" திட்டம் இருக்கிறது. இன்னும் இது போன்ற பல திட்டங்கள் இருக்கின்றன. இந்தத் திட்டங்களையெல்லாம் மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்திலே சேர்ப்பதற்கு முயற்சி எடுத்துக் கொள்ளவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். வைகை அணையைப் பொறுத்தவரை கிழக்கு ராமநாதபுரம் பகுதிக்கு ஓரளவு நல்ல முறையில் தண்ணீர் வரக்கூடிய நிலைமை இருக்கிறது. அதை நிரந்தரமான முயற்சியாக்கி, இதுவரை போடாது இருக்கிற "ரூல்ஸ் ரெகுலேஷன்" போடவேண்டும். $1\frac{1}{2}$ கோடி ரூபாய் செலவில் வைகையில் "ரீ மாடல்" செய்து தண்ணீர் விநியோகத்திற்கான நல்ல திட்டம் இருப்பதாகச் சொல்லுகிருர்கள். அதையும் நல்ல முறையில் நிறைவேற்றிக் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். தற்போதைய எஸ்டிமேட் கமிட்டி ரிப்போர்ட்டைப் பார்த்தால் கிட்டத்தட்ட 14,700 குளங்கள் இன்னும் ரிப்பேர் செய்யப்படாமல் இருக்கிறது என்று தெரிகிறது. இன்றைக்கு நாம் அந்தக் காரியத்தைச் செய்யும் வேகத்தைப் பார்த்தால் இன்னும் 50 வருஷ காலம் அவ்வளவு குளங்களையும் சீர்படுத்துவதற்கு ஆகும். ஒரு "எமர்ஜன்ஸி பேஸிஸ்" வைத்து அந்தக் காரியத்தைத் துரிதப்படுத்த வேண்டும். நம் எஸ்டிமேட்ஸ் கமிட்டி அறிக்கையிலே சொல்லப்பட்டிருக்கும் விஷயங்களை நன்ருக ஆராய்ந்து பரிசீலிக்கவேண்டும். தண்ணீர் விட்டாலும் கால்வாய்களில் தண்ணீர் வரக்கூடாத நிலைமை இருக்கிறது. இந்த மாதிரி நிலைமையைச் சீர்திருத்தம் செய்ய துரிதமாக நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும்.

தொழில் கொள்கையைப் பொறுத்தவரை பரவலாக இந்தத் தொழில்கள் அமையவேண்டுமென்ற கருத்தைச் சொல்லியிருக்கிருர்கள். மத்திய அரசாங்கத்தை இதற்காக நம்முடைய அரசாங்கம் வற்புறுத்தி வந்திருக்கிறது என்று சொல்லியிருக்கிருர்கள். இந்தக் கொள்கையை நம்முடைய அரசாங்கமே

[Sri K. Ramachandran] [10th August 1960

முதலில் கடைப்பிடிக்க வேண்டுமென்று நான் கூறியிருக்கிறேன். இப்போது நம்முடைய மாநிலத்தில் தொழில் வளர்ச்சியைப் பார்த்தால் ஒரு சில குறிப்பிட்ட பகுதிகளே முன்னேறிக்கொண்டு போகும் நிலைமை இருக்கிறது. பல பகுதிகள் தொழில் வளர்ச்சி யற்ற நிலைமையில் இருக்கின்றன. தொழில் வளர்ச்சியில் பின் தங்கிய பகுதிகளுக்கு முதலிடம் கொடுக்கப்படவேண்டுமென்று தொழில் மந்திரியவர்கள் கூறியிருக்கிறார்கள். ஆனால் நடை முறையில் அந்த வகையில் நடக்கவில்லை. இன்றைக்கு கிழக்கு ராமநாதபுரத்தில் ஒரு டெக்ஸ்டைல் மில் ஏற்படுத்த வேண்டு மென்றும், மானமதுரையில் ஒரு சர்க்கரை ஆலை ஏற்படுத்த வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டிருக்கிறோம். அங்கு இவற்றுக்கு வேண்டிய சௌகரியங்கள் இருப்பதால்தான் சொல் கிறோம். கிழக்கு ராமநாதபுரம் கோஸ்டல் ஏரியாவில் தாதுப் பொருள்கள் கிடைக்கின்றன. அவைகளையெல்லாம் பயன்படுத்தி அந்தப் பகுதியில் தொழில் வளர்ச்சி ஏற்பட வழிசெய்து தர வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

சென்னை ராஜ்ய சிப்பந்திகளின் சம்பளக் கமிஷன் அறிக்கை ஓரளவு திருப்தியாக இருக்கிறது. அதில் "வில்லேஜ் ஆபீசர் களை"ப் பொறுத்தவரை நிவாரணம் இல்லையென்று சொல்ல விரும்புகிறேன். அவர்களுக்கு ஏதாகிலும் செய்யவேண்டு மென்று கேட்டுக் கொள்கிறேன்.

மின்சாரத்தைப் பொறுத்தவரை கிராமாந்திரங்களில் முன் போல் வேகமாக மின்சார விஸ்தரிப்பு வேலை நடக்கவில்லை. கம்பெனிகள் இருந்த காலத்தில் கூடியவரை சீக்கிரமாகச் செய்து வந்தார்கள். சர்க்கார் டிபார்ட்மெண்ட் வேலை செய்யும் போது காலதாமதம் ஏற்படுவது வருந்தத்தக்கது. இதைத் துரிதப்படுத்த வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

(மணியடிக்கப்பட்டது.)

SRI K. S. G. HAJA SHERIFF: Mr. Speaker, Sir, it is a great pleasure for me to support the Motion of Thanks moved by my esteemed colleague, Mr. S. Lazar for the address of His Excellency the Governor. Sir, we are very much gratified to note from the speech that the State had recorded all-round improvement in every sector. That only shows the efficiency of the administration. The State has registered all-round progress in each and every direction. We must pay compliments not only to the Governor, not only to the Ministers but also to the officers who are engaged in giving shape to a socialistic structure of society which is our goal.

Sir, at the same time, I should not fail to give expression to some of our disappointments. I find that there has been no provision made for eradication of the slums. I feel that slum eradication work must be taken up on an emergency basis. In this metropolitan City, Sir, there are umpteen slums whose condition is very abnormal and beyond the imagination of most of the

10th August 1960] [Sri K. S. G. Haja Sheriff]

Members here. I have been visiting these slums on many occasions but I should express before this House my complete shock about the condition of the people who are living there. How they live there, how they maintain their health and to what conditions they are subjected to, I cannot express in this House. It is, therefore, very essential that this slum eradication work should be taken up on an emergency basis and we must see that the slum dwellers are completely rehabilitated.

Sir, I am aware of the difficulties that would confront the Government when they take up slum improvement work. But these should not be an excuse for not improving these slums. Particularly, slums in the heart of the City are very dangerous from all aspects compared to the slums existing in the villages. If an epidemic or any such thing breaks out in the slums in the villages, it will not be very dangerous but if it breaks out particularly in the slum areas in the City, the havoc caused by it cannot be imagined and I, therefore, suggest to the Government that immediate attention should be paid to the question of wiping out these slums.

Recently, we have been hearing of a number of fire accidents in these slums. Most of them happened on account of small things, some people throwing beedi butts and some such things. Unless these are looked into, I am afraid things will go very bad and will lead to very wide discontent among the poor people.

Sir, I am also particularly glad to note that new industries are coming up in many parts of our State. But I have been pleading that these industries should not be located in the metropolitan City or in the hearts of the towns, because even from the defence point of view it is not safe to locate these industries in these areas. Experience has taught us how during the Second World War particularly major ports were made targets of attack and how most of the big industries had been shattered to pieces.

So, I would like that this industry should as far as possible be located in each and every district so that it would also be safe from all points of view. It will not create very great difficulties to the Government, particularly when they are introducing electricity and when they are forming roads even in the remote hamlets. Therefore, I would suggest that the industry should as far as possible be located in various places.

Sir, I would urge very much the development of Minor ports, 10-30 a.m. especially the port of Tuticorin. I can say that the port of Tuticorin is in a very exalted position. Among very few minor ports which are free from Nature's adverse activities in the world, Tuticorin port is one, which is an all-weather port. Steamers can work all the 24 hours and 365 days without any interference. Already that port is doing excellent service and it is of great use. If it is developed into a major port with the introduction of three berths, I am sure it will double its capacity and in no time that port will be a great asset. We must develop that port since there is no major port between Madras and Cochin and there is no possibility of developing

[Sri K. S. G. Haja Sheriff] [10th August 1960

any other port other than the Tuticorin Port as a major port. So, I would urge upon the Government to see that all pressure is put and even with slight adjustment, the Tuticorin Port is developed as a major port and completed during the Third Plan period.

Sir, another major factor for developing ports is the co-operation that is required from the Transport authorities. At peresent we find that although the Transport authorities are co-operating, still they stand as a sort of bottleneck in the development of the port in the Madras City. I am referring to the Madras Port where mechanical contrivances are being introduced. But I must point out that on account of the bottleneck of transport, particularly railways, it is not able to develop as fast as it could. I went through the connected papers which have been submitted to this House about two days ago, wherein a target of 32 million tons of export during the Third Plan period was fixed. In our port we will be able to handle 4 million tons provided the railways play their part. I would suggest to the Hon. Minister for Industries to take up the matter at a high level and see that the railways do play an important role so that there may not be any necessity for reduction in our targets.

Sir, some hon. Members referred to the upward trend in the price of commodities. May I ask one thing? What are the reasons for this upward trend in prices? It is a plain fact that wages chase the price and the price chases wages. This has been referred to even in the last Budget speech. We must come to a sort of understanding in this regard. I make a plea that we must freeze the wages at a particular level. Some hon. Members might object to it and say that the profit also should be freezed. But profit has already been freezed. The only solution is that unless wages are freezed, prices cannot be freezed. This is a very serious problem. Already there is unemployment among the people, particularly among the educated people. The people employed in industries are in a very comfortable position and are getting better wages as compared to those working in any office including the Government office. But uneducated and illiterate workers are getting hundreds of rupees even though the educated workers are not getting that amount. It is not correct to put so much money into their hands as it would only create inflation and it would be difficult to stop it later. In a developing country, people's purchasing power is increasing and as a result of it they go in for more foodstuffs. It is only due to consumption of more foodstuffs, that prices are also going up and at the same time commodities also are not available. So, I would suggest that we must arrest the rise in prices and should not allow it to go beyond a certain limit. At the same time, we must also arrest the rise in wages. I hope my good friends who are controlling labour unions would realize this. Due to abnormal rise in prices, to a certain extent if the industries are to bear additional expenditure on account of rise in wages, to that extent the industries would have to increase the price of commodities. When the price of commodities is increased, there is a hue and cry

10th August 1960] [Sri K. S. G. Haja Sheriff]

raised that the wage should be increased. It is working like a vicious circle. I hope the Government would give serious attention to this aspect of the matter.

* SRI S. THANGAVELU: கனம் சபாநாயகர் அவர்களே, மேன்மை தங்கிய கவர்னர் பெருமான் அவர்கள் ஆற்றிய உரை யின்மீது நானும் இரண்டொரு வார்த்தைகள் சொல்ல விரும்பு கிறேன். அவர்கள் ஆற்றிய உரையில் நாட்டின் முன்னேற்றத்திற் கான காரியங்களைப் பல வகைகளாகப் பிரித்து, ஒவ்வொரு வகை யிலும் திட்டங்கள் வகுத்திருப்பதைப்பற்றி அவர்கள் குறிப்பிட் டிருப்பதற்காக அவர்களை நான் பாராட்டக் கடமைப்பட்டிருக் கிறேன். மத்திய சர்க்கார் சிப்பந்திகள் வேலை நிறுத்தம் செய்த தைப்பற்றியும் கவர்னர் தம்முடைய உரையில் குறிப்பிட்டிருக் கிறார். ஒரு சில கட்சிக்காரர்கள் சர்க்கார் சிப்பந்திகளைத் தூண்டிவிட்டு, அவர்கள் மூலமாகத் தங்கள் கட்சியைப் பலப் படுத்திக்கொள்ள வேண்டுமென்ற எண்ணத்திலே இருந்து கொண்டிருக்கிறார்கள். பொதுமக்கள் ஆதரவு இல்லாததன் காரணமாக வேலைநிறுத்தம் முடிவடைந்துவிட்டது என்பதைக் குறித்து நான் பெருமிதத்தோடு சொல்லிக்கொள்ளக் கடமைப் பட்டிருக்கிறேன்.

விவசாயப் பெருங்குடி மக்களுக்கு வேண்டிய நல்ல திட்டத் தைத் தீட்டியிருப்பது பற்றியும் அவருடைய உரையில் குறிப்பிட் டிருக்கிறார்கள். விவசாயப் பெருங்குடி மக்களுக்கு, அதாவது சாதாரண ஏழை விவசாயிகளுக்குத் தரிசு புறம்போக்கு நிலங் களைப் பட்டா செய்துகொடுக்கவேண்டும். கண்டிஷன் அட மானம் செய்துகொடுக்கப்படவேண்டும். ஒவ்வொரு ஜில்லாவி லும் எவ்வளவு தரிசு புறம்போக்கு நிலம் எவ்வளவு இருக்கிறதோ அதை ஏழை ஜனங்களுக்குப் பட்டா செய்துகொடுக்கவேண்டு மென்று சர்க்காரைக் கேட்டுக்கொள்ளுகின்றேன்.

மின்சாரத்தைப் பொறுத்தவரையில், எனது தொகுதியில் பல கிராமங்களுக்கு மின்சார வசதி செய்துகொடுக்கப்பட்டிருக் கிறது. அதற்காக சர்க்காரைப் பாராட்டுகிறேன். அழக பெருமாள்குப்பம், அலியனூர், பகண்டை, மேலப்பாளையம், திருவதி, பாயித்தம்பாடி ஆகிய கிராமங்களுக்கும் இன்னும் பண்ணுருட்டி பிர்க்காவில் பல கிராமங்களுக்கும் மின்சார வசதி செய்துகொடுத்திருப்பதற்காக சர்க்காரைப் பாராட்டுகிறேன். அதேசமயத்தில் மின்சக்தி வேண்டும் என்று அகரம் பிர்க்கா, குரிஞ்சிப்பாடி பிர்க்கா முதலிய இடங்களிலிருந்தும் கேட்டிருக் கிறார்கள். அந்த இடங்களுக்கும் மின்சக்தி கிடைக்க ஆவன செய்யவேண்டும் என்று சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன்.

தொழில் வகையிலே, நெய்வேலி 1961-ம் ஆண்டு எடுக்கப் போகும் நிலக்கரி சம்பந்தமாகவும் ரசாயன உரங்கள் சம்பந்த மாகவும் விரைவிலே நடவடிக்கை எடுத்து நாட்டு மக்களுக்கு நல்ல சந்தர்ப்பங்களைத் தேடிக் கொடுக்கவேண்டுமென்றும் நான் சர்க்காரைக் கேட்டுக்கொள்கின்றேன். அதுமட்டுமல்ல. இந்தி மொழி பிரச்னையைப்பற்றி இந்தி வேண்டாம், நாம் தமிழர்கள், மற்ற பாஷைகளை நாம் கற்றுக்கொள்ளவேண்டாம்

[Sri S. Thangavelu] [10th August 1960

என்று ஒரு சில கட்சியினர்கள் பொதுமக்களிடத்திலே, ஒன்றுமே அறியாத பாமர மக்களிடத்திலே முட்டுக்கட்டை போட்டுக் கொண்டு வருகிறார்கள். அது தவறுதலான காரியம் என்று சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். நாம் பல ஊர்களுக்கு போகவேண்டி இருப்பதால் பல பாஷைகள் தெரிந்திருக்க வேண்டும். இந்த தேசத்தில் எல்லா பாஷைகளையும்விட இந்தியை அதிகமான பேர்கள் பேசுகிறார்கள். ஆகையால் பள்ளி மாணவ மாணவிகள் இந்தி கற்றுக்கொண்டால் தான் வட பிரதேசங்களுக்குச் சென்று பணி செய்துகொண்டு வருவதற்கு அது உறு துணையாக இருக்கும் என்று நான் தெரிவித்துக் கொள்ளுகிறேன். ஏதோ இந்தி எதிர்ப்பு என்று சொல்லி, நம் ஜனாதிபதி கனம் ராஜன் பாபு அவர்கள் வரும் காலத்தில் அவர் களுக்கு கருப்புக்கொடி காட்டவேண்டுமென்று கூட ஒரு சில கட்சியினர் சொல்லிக்கொண்டிருந்தார்கள். அவர்கள் இப் பொழுது அதை வாபஸ் வாங்கிக்கொண்டிருக்கிறார்கள் என்பதற் காக பாராட்டுதலை தெரிவித்துக்கொள்ளுவதாக பல காங்கிரஸ் அங்கத்தினர்கள் சொன்னார்கள். அவர்கள் வாபஸ் வாங்கிக்கொண்டதன் கருத்து, பொது மக்கள் ஆதரவு தங்களுக்கு கிடைக்காது என்ற காரணத்திற்காகத் தான் வாபஸ் வாங்கிக்கொண்டார்கள் என்று தெள்ளத் தெளிவாகச் சொல்லிக்கொள்ளுகிறேன்.

அதுமட்டுமல்ல. பல தொழில்கள் நடக்கும் இடங்களில் தொழிலாளர்களை ஏமாற்றி அவர்கள் மத்தியிலே நாங்கள் தான் சொன்னோம், அதனால் தான் காங்கிரஸ் சர்க்கார் செய்கிறது என்று பெருமை பாராட்டிக்கொண்டிருக்கிறார்கள். தோல்வி அடையும்போது அவர்கள் மீது பரிதாபப்படுகிறார்கள். அவர் களுக்கு நல்ல முறையில் பலன் கிடைக்காதபோது போலீஸை வைத்துக்கொண்டு மிரட்டி மத்திய சர்க்கார் சிப்பந்திகளை மீண்டும் வேலைக்கு வைத்துக்கொண்டிருக்கிறார்கள் என்று சொல்லுகிறார்கள். போலீஸ் சிப்பந்திகள் நாட்டில் இருக்கும் சட்டங்களை அமுல் நடத்தவும், மக்கள் மத்தியிலே அமைதியை நிலைநாட்டவும் இருக்கிறார்கள். நாம் போடும் சட்டங்களையும், திட்டங்களையும் அமுல் நடத்துவதற்காக இருக்கும் போலீஸ் அதிகாரிகளைக் கொண்டு மிரட்டி சர்க்கார் சிப்பந்திகளை டியூடிக்கு சேரும்படி செய்துவிட்டார்கள் என்று அவதூறாகப் பேசுவது சரியல்ல என்பது தான் என்னுடைய வேண்டுகோள். இம்மாதிரி நல்ல காரியங்களை நடத்திக்கொண்டு போகும் மாநில சர்க்கார் இன்னும் மற்ற மாகாணங்களுக்கு எடுத்துக்காட்டாக இருக்கிறது. பல தொழிற்சாலைகளையும், பல விவசாய காரியங் களையும் நல்ல முறையில் நடத்திக்கொண்டு போகும்பொழுது ஒரு சில கட்சியினர்கள் குறுக்கே புகுந்து அந்த திட்டங்கள் நடந்தால் காங்கிரஸுக்கு அதிக பலம் ஏற்பட்டுவிடுமோ என்று அஞ்சி பொதுமக்களிடத்தில் போய் பல தப்பிதமான காரியங் களை சொல்லிக்கொண்டு, அது வெற்றிகரமாக நடந்தால் நாங் கள் தான் சொன்னோம் அதனால் தான் காங்கிரஸ் சர்க்கார் செய் தார்கள் என்று சொல்லுகிறார்கள். நடக்காவிட்டால், "பார்த் தீர்களா, பார்த்தீர்களா, காங்கிரஸ் சர்க்கார் இதைச் செய்ய

10th August 1960] [Sri S. Thangavelu]

வில்லை, அதைச் செய்யவில்லை, என்று குறை கூறிக்கொண்டிருக்கிறார்கள். " ஸப் இந்தி படோகி, லிக்கோதி பனேங்கிநவாப்பு " எல்லா மாணவ மாணவிகளும் இந்தி படித்தால் தான் எல்லா அலுவலகங்களிலும் அமர்ந்து நாட்டினுடைய சட்ட திட்டங்களை நிர்வகித்து அமுல் நடத்துவதற்கு முடியும். வருங்கால மாணவ மாணவிகள் இந்தி மணிகளாக திகழ வேண்டும் என்று ஆசைப்படுகிறேன். ஹிந்தி கற்றுக்கொள்ளவேண்டாம் என்று தடை செய்து முட்டுக்கட்டை போடும் ஒரு சில கட்சியினர்கள் அந்தத் தவறுதலான மனப்பான்மையை விட்டுவிட்டு, எல்லா மக்களும் இன்புற்று வாழவேண்டும் என்ற நல்லெண்ணத்தின் கீழ் நாம் பாடுபட்டவேண்டுமே தவிர, இம்மாதிரி தவறுதலான காரியங்களை செய்யவேண்டாம் என்று வேண்டுகோள் விடுக்கின்றேன்.

நமது மாகாணத்தில் சர்க்கரை ஆலைகள் தொடங்கும் விஷயத்தைப் பற்றி கவர்னர் பெருமான் ஆற்றிய உரையில் இருக்கிறது. அந்த ஆலைகளுடைய நிர்வாக வேலைகள் கூடிய சீக்கிரம் தொடங்கி, அதன் மூலம் பல ஆயிரக்கணக்கான தொழிலாளர்களுக்கு வேலை வாய்ப்பும் கிடைக்கக்கூடிய அம்சமும் அதில் கண்டிருக்கிறது. கூடிய சீக்கிரம் இதை ஆரம்பிக்கவேண்டுமென்று சர்க்காரை நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

நீர்ப்பாசன விஷயமாக நமது சென்னை மாநிலத்தில் பல்வேறு நல்ல திட்டங்களை தீட்டிக்கொடுத்து பல நீர் தேக்கங்களை கட்டியிருக்கிறார்கள். அதற்காக நான் சர்க்காரைப் பாராட்டுகிறேன். தென் ஆற்காடு ஜில்லாவில் வீடூர் அணையைக் கட்டி பல ஆயிரக்கணக்கான ஏகர் நிலங்களுக்கு நீர்ப்பாசன வசதி செய்து கொடுத்திருக்கிறார்கள். நாம் எவ்வளவு தான் அணை கட்டி வசதி செய்துகொண்டாலும், இயற்கை சோதனை நம்மோடு இருந்து கொண்டிருக்கிறது. ஆகவே, மக்கள் எல்லோரும் எல்லா ஆலயங்களிலும் தெய்வ பக்தியோடு பூஜை செய்தால், எல்லா ஏரிகள், குளங்கள், அணைக்கட்டுகள் ரொம்புவதற்கு தெய்வ சக்தியால் மழை பெய்யும். ஆகவே நாம் எல்லோரும் நல்ல மழை பெய்வதற்கு எல்லா ஆலயங்களிலும் தெய்வத்தை பூஜை செய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, கவர்னர் பெருமானுடைய உரையை ஆதரித்து, என்னுடைய உரையை முடித்துக் கொள்ளுகிறேன். " ஜெய் ஹிந்த் "

Sri P. S. SANTHANAM: கனம் சட்டமன்றத் தலைவர் அவர்களே, கவர்னர் பெருமான் உரையிலே எனது கருத்தினை சொல்ல முற்படுகிறேன். கவர்னர் பெருமான் அவர்களுடைய உரையில் தொழிலாளர்களுடைய வேலை நிறுத்தத்தை திறமையாக போலீஸார் அடக்கி அமைதிப்படுத்தியிருக்கிறார்கள் என்ற முறையில் போலீஸ் இலாகாவை பாராட்டியிருக்கிறார்கள். உண்மையிலேயே அதுபற்றி நான் வேதனைப்படுகிறேன். போலீஸ்காரர்களை அதற்காக பாராட்டுவதற்கில்லை. போலீஸ் காவல்படையினர் கொலை, கொள்ளைகளை தடுப்பதற்காக இருக்கின்றனர். வட ஆற்காடு ஜில்லாவில் திருவண்ணாமலையை

[Sri P. S. Santhanam] [10th August 1960

அடுத்த இடத்தில் சுமார் ஒரு ஆண்டு காலத்திற்குள் 5, 6 கொலை கள் செய்யப்பட்டும், கொலை என்று தெரிந்திருந்தும், துப்பு துலக்குவதற்கு போலீஸாருக்குத் திறமையில்லை. அதிலே துப்புத் துலக்குவதற்கு நாய் வந்தபோதிலும், அதை நிராகரித்து விட்டனர். அத்தகைய போலீஸ் இலாகாவை நாம் எப்படி பாராட்டமுடியும்?

(Sri S. M. Annamalai in the Chair.)

நிற்கவும், நமது மாநில கவர்னர் பெருமான்/ஆற்றிய உரை யில் நிலமில்லாதவர்கள் ஏழைகளுடைய திட்டங்கள் காணப்பட வில்லை என்பது குறித்து உண்மையிலேயே நான் வருந்துகிறேன். நிலம் இல்லாதவர்களுக்கு நிலம் கொடுக்கப்படும், உழுபவர் களுக்கே நிலம் சொந்தம் என்று அரைகூவிய சர்க்கார், சர்க் காருக்கு ஆதரவாய் ஆணி வேராய் இருக்கிற கவர்னர் பெருமான் உரையில் நிலம் இல்லாதவர்களுக்கு நிலம் கொடுப்பதுபற்றி ஒரு வார்த்தை கூட இல்லாததுபற்றி நான் வருந்துகிறேன். நம் மாநிலத்தை எடுத்துக்கொண்டால் பெரும்பாலான மக்கள் விவ சாயத்தை நம்பி வாழக்கூடியவர்கள். 8-ல் 6 பங்கு உழவர்கள். நமக்கு அதிக தொழில் வளம் கிடையாது. விவசாயிகளுக்கு வேண்டிய சில பண்பாடுகள் செய்வதற்கு சர்க்கார் பல அணை களைக் கட்டி இருக்கிறார்கள். அதை நான் உண்மையிலேயே வர வேற்கிறேன். ஏரிகளை செப்பனிடுவதற்காகவும், சிறிய கால்வாய் களை பயன்படுத்துவதற்காகவும் சிறிய நீர்தேக்கங்களுக்காகவும் சர்க்கார் பல திட்டங்களை போட்டிருக்கிறார்கள். அதை நான் வரவேற்கிறேன். சிறிய ஏரிகளை, சிறிய கால்வாய்களை செப்பனிடு வதற்கு பல திட்டங்கள் இருந்தும், பல ஆண்டு காலமாக அத்தகைய திட்டங்கள் நிறைவேற்றப்படாமல் இருப்பதினால் அங்குள்ள ஏழை விவசாய மக்கள் மிகவும் பாதிக்கப்பட்டிருக் கிறார்கள் என்பதை சர்க்காரின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். உதாரணமாக குடி தண்ணீர் வசதிக்காக பல பகுதிகளில் மக்கள் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். திருவண்ணாமலையில் குடி தண்ணீருக்காக கஷ்டப்பட்டு, ஏறக் குறைய 5, 6 மைல் தூரத்திலிருந்து கிணறுகளிலிருந்து லாரிகள் மூலம் 50,000 ரூபாய்க்கு மேற்கொண்டு செலவு செய்து டவுனுக்கு குடி தண்ணீர் சப்ளை செய்துகொண்டிருக்கிறார்கள். ஆகவே, சாத்தனூர் கால்வாயிலிருந்து குடி தண்ணீரை சமுத்திர ஏரிக்கு விட்டால், சுமார் 6,000 ஏக்கராவுக்கு நீர்ப்பாசன வசதி ஏற்படுவதுமின்றி, ஏறக்குறைய 50,000 ஜனத்தொகை கொண்ட அந்த பிராந்தியத்திற்கு குடி தண்ணீர் வசதியும் கிடைக்கும். ஆனால் அம்மாதிரியான திட்டத்தை சர்க்கார் இதுவரை கொண்டுவரவில்லை. உண்மையிலே அவர்கள் அப்படிக் கொண்டு வராததற்காக வேதனைப்படுகிறோம். செங்கம் தாலூக்காவை அடுத்த சிறிய கால்வாயை மராமத்து செய்ய ஏறக்குறைய ரூ. 20 லட்சம் செலவாகும் என்று மதிப்பிட்டிருக் கிறார்கள். அப்படிச் செய்யாதது அந்தப் பகுதி மக்களுக்கு மிகுந்த குறையாக இருக்கிறது என்று இந்த மா மன்றத்தின் மூலமாகத் தெரிவித்துக் கொள்கிறேன்.

10th August 1960] [Sri P. S. Santhanam]

தொழில் வளம் பற்றிச் சொல்லும்போது, இன்றைக்குச் சிறிய திட்டங்களைப் பற்றிக் கவர்னர் உரையில் சொல்லியிருக்கிறார்கள். வட ஆற்காடு செங்கம் தாலூக்காப் பக்கத்தில் சந்தனக் கட்டைகள் அதிகமாகக் கிடைக்கிறது. அங்கே நிரம்பக் கட்டடங்களும் இருக்கின்றன. அந்தக் கட்டைகளையும் வைத்து, அந்த கட்டடங்களைக் கொண்டு, சந்தனத் தைலம் இறக்கும் தொழிலை ஆரம்பிக்க ஏதுவாக இருக்கும். திருவண்ணாமலை, அதன் பக்கத்தில் உள்ள கிராமங்களில் மைகா கிடைப்பதாக, அந்த ப்ளாக் டெவலப்மெண்ட் ஆபீசர் அவர்கள் சர்க்காருக்குக் குறிப்பு அனுப்பியிருந்தும், சர்க்கார் எந்த நடவடிக்கைகளும் எடுத்தாகத் தெரியவில்லை. போலூர் தாலூக்காவில், கந்தகம் கிடைப்பதாக கனம் அண்ணாமலை குறிப்பிட்டிருக்கிறார்கள். அம்மாதிரிக் கனிப்பொருள்களை எடுக்க உடனடியாக நடவடிக்கை எடுத்தால், அந்தப் பகுதி மக்களுக்கு நல் வாழ்வு வாழ வழி செய்ததாகும் என்று இந்த மன்றத்தின் மூலம் தெரிவிக்கிறேன். சுமார் 5, 6 ஆண்டுகளுக்கு முன் ஒரு சர்க்கரை ஆலை நிறுவ, லைசென்சு கொடுக்கப்பட்டது. ஆனால், அதை வாங்கியவர், ரங்கசாமி ரெட்டியார் ஜஸ்டிஸ் கட்சியைச் சேர்ந்தவர் என்ற காரணத்தால், ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்கள் அதில் எந்தப் பங்கும் எடுக்கக் கூடாது என்று இருந்ததன் காரணத்தால், அந்த லைசென்சு ரத்து செய்யப்பட்டது. மீண்டும் சர்க்கரை ஆலையைப் பற்றி கவர்னர் உரையில் குறிப்பிடப்பட்டு இருக்கிறது. இது சம்மந்தமாக ஐந்து விண்ணப்பங்கள் வந்திருக்கின்றன. அதில் திருவண்ணாமலை ஒன்று. முக்கியமாக சர்க்காருக்குக் கூற விரும்புகிறேன், செங்கம் தாலூக்கா, போலூர் தாலூக்கா, திருவண்ணாமலை, ஆரணி இன்னும் பல கிராமங்கள் மத்தியில் ஒரு ஆலை நிறுவினால், அது மக்களுக்கு ரொம்ப சௌகரியமாக இருக்கும் என்பதையும், அதற்கு லைசென்சு வழங்கினால் பெரும் ஆதரவு இருக்கும் என்றும் இந்த மன்றத்தின் மூலம் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

ஹரிஜனங்களுக்கு வீடுகட்டிக் கொடுக்கும் திட்டத்தை எடுத்துக் கொண்டால் மிகவும் வருந்தத் தக்கதாக இருக்கிறது. மந்திரிகள் ஓடி ஓடிப் பார்க்கிறார்கள்; மண்டல காங்கிரஸ் அங்கத்தினர்கள், காங்கிரஸ் கமிட்டி தலைவர்கள் எல்லோரும் ஓடியோடிப் பார்க்கிறார்கள். அப்படிப் பார்க்கும் நேரத்தில், அந்த ஹரிஜனங்கள் வாழும் பகுதிகளை இவர்கள் நேரில் கண்டால், கண்ணீர்தான் விடுவார்கள். அது நிச்சயம். அவர்களுடைய நிலையைச் சீர்படுத்தப் பல, பலத் திட்டங்கள் இருக்கின்றன. ஆனால், சர்க்கார் அவற்றை நிறைவேற்றத் தயங்குகிறார்கள். அதன் நோக்கம் அங்குள்ள பெரிய, பெரிய நிலச் சுவாந்தார்கள், மில் முதலாளிகள், மோட்டார் மன்னர்கள் அதை எதிர்க்கிறார்கள். நான் இந்த சமயம் ரயிலில் வரும் நேரத்தில் பேசிக்கொள்கிறார்கள் :—"இவர்கள் இந்த ஹரிஜனங்களுக்கு இம்மாதிரிச் சலுகைகளையெல்லாம் கொடுத்து விடுகிறார்கள். ஆகவே, அவர்கள் எங்களை மதிக்கமாட்டேன் என்கிறார்கள். என் பண்ணைக்கு வேலைக்கு வர மாட்டேன் என்கிறார்கள். இதனால்தான் இவர்கள் கிசான் போராட்டம்

[Sri P. S. Santhanam] [10th August 1960

நடத்துகிறுர்கள். அதிகக் கூலி கேட்கிறுர்கள் " என்றெல்லாம். ஆகவே ஹரிஜனங்களுக்கு, உள்ளன்போடு மற்றவர் தடுப்பதைப் பாராட்டாமல், ஆவன செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

பள்ளிப் பிள்ளைகளுக்கு பகல் உணவு கொடுப்பதுபற்றி பெரு மகிழ்ச்சியடைகிறேன். இப்பொழுது இதை சர்க்கார் பல பள்ளிகளுக்கும் விஸ்தரிக்கப் போகிறுர்கள். இதே சமயத்தில் தனியார் நடத்தும் ஹாஸ்டல்களையும், சர்க்காரே எடுத்து நடத்த வேண்டும். தனியார் நடத்தும் ஹாஸ்டல்கள் ஹரிஜன மக்களுக்கு பயன் அளிப்பதில்லை. ஆகவே அந்த விஷயத்தையும் இந்த மன்றத்திலே கூறுகிறேன். அம்மாதிரி ஹாஸ்டல்களில் பல குற்றங்கள், குறைகள் இருக்கின்றன. குறிப்பாக சிதம்பரம் தென்னுற்காடு பகுதிகளை எடுத்துக்கொண்டால் .....

(டெம்பரரி சேர்மன் மணியடித்து அடுத்த மெம்பரைக் கூப்பிட்டார்.)

SRI C. R. RAMASWAMI: சபைத் தலைவர் அவர்களே, ஆண்டுக்கு ஒருமுறை கவர்னர் அவர்கள் சம்பிரதாய முறைப்படி ஒரு உரையை நிகழ்த்துகிறுர்கள். அதன்மேல் நாம் விவாதம் நடத்துகிறேம். முக்கியமாக அரசாங்கத்தின் கொள்கையை இந்த உரையில் எடுத்துச் சொல்லுகிறுர்கள். இந்த ஆண்டு உரையில் முக்கியமாக மூன்று விஷயங்களைப் பற்றிச் சொல்லி யிருக்கிறுர்கள். முதன்முதலில், மத்திய சர்க்கார் ஊழியர்கள் வேலை நிறுத்தம் செய்ததை சர்க்கார் சமாளித்ததற்கு மத்திய சர்க்காரையும், மாகாண சர்க்காரையும் நாம் பாராட்ட வேண்டும். அது ஒரு பெரிய சாதனைதான். நம் சுதந்தரமே பறி போகும் போல் ஏற்பட்ட நிலைமையைக் கண்டோம். முக்கிய மாக சில அரசியல் கட்சிகள் சேர்ந்துகொண்டு இதை அடிப் படையாக வைத்துக் கொண்டு, இராஜ்யத்தையே கைபிடிக்க லாம் என்று ஆரம்பித்தார்கள். முக்கியமாக கம்யூனிஸ்ட் கட்சி நண்பர்கள், அவர்களுடைய முதல் தலைவர், லெனின், கடைப் பிடித்ததைத்தான் ஆரம்பித்தார்கள். லெனின் சொன்னுர், "முதலில் நாட்டிலே ஒரு பெரிய குழப்பத்தை உண்டாக்கி, ஸிவில் அதாரிடி கம்ப்ளீட்டாக " கொலாப்ஸ் " ஆகக் கூடிய சூழ்நிலையைக் கொண்டு வந்து, ஒரு பெரிய புரட்சியைக் கொண்டு வர வேண்டும்" என்று. இதில் அவர்களுக்கு பல கட்சிகளும் துணையாக வந்தன, திராவிட முன்னேற்றக் கட்சி நண்பர்கள், அவர்களோடு துணைசெய்ய முன்வந்தார்கள். இவர்கள் கம்யூனிஸ்ட் கட்சி கொள்கை நன்றாகத் தெரிந்துதான் துணை செய்ய முன் வந்தார்களா, அல்லது அவர்கள் கொள்கை புரியாமலே காங்கிரஸ் கட்சிக்கு எதிராக இருக்கிறது என்பதற் காக ஆதரவு கொடுத்தார்களா என்பதைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். அவர்கள் அரசியல் ஞானம் இருந்துதான் சேர்ந் தார்கள் என்றால், அதை வரவேற்கத்தான் வேண்டும். ஆனால், கம்யூனிஸ்ட் கட்சி அரசாங்கத்தை எதிர்க்கிறுர்கள், அதற்கு ஆதரவு அளிக்க வேண்டும் என்று புரட்சியையும்

10th August 1960] [Sri C. R. Ramaswami]

குழப்பத்தையும் ஏற்படுத்தவேண்டுமென்றால் அது சரியல்ல என்பது என் எண்ணம். இருபத்திரண்டு லட்சம் தொழிலாளிகளில், ஓரிரண்டு லட்சம் தொழிலாளிகளே வேலைநிறுத்தத்தில் சேர்ந்திருந்தார்கள். மீதி 20 லட்சம் தொழிலாளிகளுக்கு நம் பாராட்டுதலைத் தெரிவிக்க வேண்டும். பிரதம மந்திரி நேரு அவர்கள் கூட சொல்லியிருக்கிறார்கள். இம்மாதிரி நாட்டில் வேலை நிறுத்தம் ஏற்பட்டால், நாம் எந்த வேலையையும் நன்றாகச் செய்ய முடியாது என்று. அது நாட்டுக்கு ஒரு சோதனையாக இருந்தது. அதைச் சமாளித்ததற்கு நாம் ராஜ்ய சர்க்கார்களையும், மத்திய சர்க்காரையும் பாராட்ட வேண்டும். அது திரும்பவும் ஏற்படக் கூடாது என்ற எண்ணத்தில், தொழில் சங்கத் தலைவர்கள் பற்றி திட்டம் கொண்டு வந்திருக்கிறார்கள். முக்கியமாக அரசியல் கட்சித் தலைவர்கள் சங்கத் தலைவர்களாக இருக்கக் கூடாது என்று. அது மிகவும் முக்கியமானது.

மொழிப் பிரச்னையைப் பற்றி கவர்னர் அவர்களும் அது ஒரு சிக்கலான பிரச்னை என்று சொல்லியிருக்கிறார்கள். திரு பணிக்கர் அவர்கள் மைலாப்பூரில் சொன்னார்கள்: "300 ஆண்டுகளாக ஆங்கிலம் போதனை செய்யப்பட்டும், நாம் படித்து வந்தும், நாட்டில் ஒன்றரை சத விகிதம் கூட ஆங்கிலம் படித்தவர்கள் இல்லை" என்று. ஆகவே, ஆங்கிலத்தில் எல்லோரும் படித்தவர்களாக இருப்பது சாத்தியமில்லை. அது அவசியமும் இல்லை. ஆகவே, ஒவ்வொரு மாகாணமும், தன் சொந்த மொழியில், கல்லூரிகளிலும் போதனை செய்ய ஏற்பாடு செய்துகொள்ள வேண்டும். அகில இந்திய ரீதியில் பார்த்தால், ஹிந்தி வேண்டுமா, ஆங்கிலம் வேண்டுமா என்ற பிரச்னையில், அது ஹிந்திதான் என்பதை யாரும் மறுப்பதற்கில்லை. அப்படி மறுப்பவர்களுக்கு, காலத்தின் போக்குத் தெரியவில்லை யென்றுதான் சொல்ல நான் முன் வந்துள்ளேன்.

நமது இந்தியாவில் ஏறக்குறைய 41 சத விகிதம் பேர்கள் சாதாரணமாக ஹிந்தி புரிந்து கொண்டிருக்கிறார்கள். வியாபாரிகளும் ஹிந்தி அவசியம் கற்றுக்கொள்ள வேண்டும் என்று சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். வட இந்தியாவில் எல்லோரும் ஹிந்தியில் கணக்குகள் எழுதி வருவதால் அவர்களுடன் இவர்கள் வியாபாரம் நடத்துவதற்காக இவர்களும் ஹிந்தி கற்றுக் கொள்ள வேண்டும் என்று நினைக்கிறார்கள். அப்பொழுதுதான் அவர்களுடைய வியாபாரம் நல்ல விதத்தில் நடக்கும் என்ற முறையில் அப்படி கற்றுக்கொள்ள வேண்டும் என்று நினைக்கிறார்கள். இப்பொழுது எல்லோரும் ஆங்கிலத்தில் தங்களுடைய வியாபாரக் கணக்குகளை எழுதுவதில்லை. எந்த மாகாணத்திலும் ஆங்கிலத்தில் கணக்குகள் எழுதுவதில்லை. இங்கு தமிழில் கணக்குகளை எழுதிக்கொண்டிருந்தால் அதை வைத்துக்கொண்டு மற்ற மாகாணங்களுடன் வியாபாரம் செய்ய முடியாது என்று வியாபாரிகள் நினைப்பதால், எல்லோரும் ஹிந்தியில் கணக்குகளை எழுதுவதற்கு முற்படுகிறார்கள். ஆகவே அந்த விதத்திலும் ஹிந்தி கற்றுக்கொள்வது ரொம்பவும் அவசியமாக இருக்கிறது. ஆகவே வியாபார ரீதியில் பார்த்தாலும் கூட

11-00 a.m.

[Sri C. R. Ramaswami] [10th August 1960

ஹிந்தி கற்றுக்கொள்வது அவசியமாக இருக்கிறது. ஹிந்தி வரப்போவதில்லை என்று நினைத்துக்கொண்டிருந்தால் இந்தியாவின் முக்கியவத்துவத்திற்கு பாதகம் ஏற்படக்கூடியதாக இருக்கிறது. ஹிந்தியே வரப்போகிறதில்லை என்று இருந்தால் முன்னேற்றமடையவே முடியாது. ஆங்கிலத்தையே முழுதும் நம்பிக்கொண்டிருக்க முடியாது. ஆங்கிலத்தையே நம்பிக் கொண்டிருந்தால் நம்முடைய காரியம் முழுவதும் நடைபெருது. ஏனென்ருல் மற்ற மாகாணங்களில் ஹிந்தியில் கணக்குகளை எழுதும் போது நாம் மட்டும் ஆங்கிலத்திலும் தமிழிலும் எழுதிக்கொண்டிருந்தால் ஒன்றும் பிரயோசனப்படாது. ஒவ்வொரு தடவையும் அவைகளை மொழி பெயர்த்துக்கொண்டிருக்கக்கூடிய நிலைமை ஏற்படும். அதனுல் வியாபாரம் பாதிக்கப்படும். அந்த அடிப்படையில் ஹிந்தி கற்றுக்கொள்ள வேண்டியது ரொம்பவும் அவசியமாக இருக்கிறது.

ஆங்கிலத்தை அடியோடு விட்டு விடவேண்டுமென்பதும் இல்லை. அவற்றையும் கொஞ்சம் கற்றுக்கொள்ள வேண்டியது அவசியமாக இருக்கிறது. நம்முடைய நாட்டின் முன்னேற்றத்திற்கு அது ரொம்பவும் அவசியமாக இருக்கிறது. விஞ்ஞானப் படிப்பு முதலியவைகளுக்கு அது அவசியமாக இருக்கிறது. அதற்கு வேண்டி ஒவ்வொரு கல்லூரியிலும் "பேசிக்" ஆங்கிலம் என்று சொல்லக்கூடிய குறைந்த அளவில் ஆங்கிலம் கற்றுக்கொடுக்க வேண்டியது அவசியமாக இருக்கிறது. அதன் மூலமாக விஞ்ஞானம் முதலியவைகளைக் கற்றுக்கொள்வதற்கு வசதியாக இருக்கும். ஆகவே ஆங்கிலம், ஹிந்தி இரண்டும் கற்றுக்கொள்ள வேண்டியது அவசியமாக இருக்கிறது. விஞ்ஞானப் படிப்புக்கு வேண்டிய அளவு ஆங்கிலம் கற்றுக் கொள்ள வேண்டும். ஆங்கிலமே கூடாது என்று சொல்வதற்கு இல்லை. எல்லா மொழிகளையும் கற்றுக் கொள்ள வேண்டியது ரொம்பவும் அவசியம். எவ்வளவுக்கு எவ்வளவு அதிகப்படியான பாஷைகளைக் கற்றுக்கொள்ளுகிருேமோ அந்த அளவுக்கு நன்மைதான். எனக்குத் தெரியும் இங்கிலாந்தில் ஆக்ஸ்போர்ட், கேம்பிரிட்ஜ் மாணவ, மாணவிகள் பிரெஞ்சு, ஜெர்மன் முதலிய பாஷைகளைக் கற்றுக்கொள்வதற்கு எவ்வளவோ ஆசைப்படுகிருர்கள் என்பது. இந்த அடிப்படையில் பார்க்கும் போது நாம் எவ்வளவு பாஷைகளைக் கற்றுக்கொள்ளுகிருேமோ அந்த அளவுக்கு நன்மைதான். அப்படி அதிகப்படியான பாஷைகளைக் கற்றுக்கொண்டால் பொதுஜனங்களுக்கும் லாபம் உண்டு, மற்றவர்களுக்கும் லாபம் உண்டு. ஆகவே மற்ற பாஷைகளைக் கற்றுக்கொள்வதற்கு வெறுப்புக்காட்டுவதற்கு அர்த்தமே இல்லை. அப்படிக் காட்டுவதும் நியாயம் அல்ல. இனிமேலாவது அப்படி காட்டுகிறவர்கள் காட்ட மாட்டார்கள் என்று நினைக்கிறேன். ஆகவே தேசீய மொழியாகிய ஹிந்தியைக் கற்றுக்கொள்ள வேண்டியது அவசியமாக ஆகிறது. மாகாண ரீதியில் பார்த்தாலும் அது அவசியமாக இருக்கிறது. நமது தாய்மொழி மூலமாக குழந்தைகளுக்கு படிப்புக்கற்றுகொடுக்க வேண்டியது அவசியமாக இருக்கிறது. அப்பொழுதுதான் அவர்களுக்கு படிப்பு நன்ருக

10th August 1960] [Sri C. R. Ramaswami]

வரும். ஆகவே இது விஷயத்தில் அனுவசியமாக விருப்பு வெறுப்பை உண்டாக்க வேண்டியதில்லை. அனுவசியமாக சண்டை போட வேண்டியதில்லை. அனுவசியமாக சண்டையைக் கிளப்பினால் நாட்டிற்குக் கெடுதலே தவிர வேறு ஒரு பிரயோசனமும் இல்லை. நாட்டிலுள்ள ஒரு பகுதி, அதாவது திராவிட முன்னேற்றக் கழகம் கட்சியைச் சேர்ந்தவர்கள், இதை நன்றாக உணர்ந்து இதைப்பற்றி தீவிரமாக ஆலோசிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். மொழிப் பிரச்னை யில் அனுவசியமாக சண்டையைக் கிளப்பிக்கொண்டிருக்க வேண்டாம் என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன். சாதாரணமாக சண்டை போடுவதற்கு இப்படிப்பட்ட ஒரு ஆயுதம் கிடைத்தது என்று அதை வைத்துக்கொண்டு சண்டை போட வேண்டாம் என்று அவர்களை நான் கேட்டுக்கொள்ளுகிறேன். அது மிகவும் தவறான காரியம். இப்படிச் சண்டைபோட்டால் அவர் களுடைய அரசியல் வளர்ச்சிக்கு அது ஒரு முட்டுக்கட்டையாகத் தான் இருக்கும் என்பதையும் அவர்களுக்கு நான் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக கவர்னர் அவர்கள் தன்னுடைய உரையில் மூன்றாவது விஷயமாக சொல்லியிருப்பது விலைவாசி உயர்வைப் பற்றி. அதைப்பற்றி மத்திய அரசாங்கம் நடவடிக்கை எடுக்க வேண்டியதாக இருக்கிறது. அதற்கு அவர்களுடைய கையில் தான் எல்லா விதமான ஆயுதங்களும் இருக்கின்றன. ரிசர்வ் பாங்க் மூலமாக அவர்கள் எல்லாவற்றையும் கண்ட்ரோல் செய்ய முடியும் எல்லா துறைகளிலும் அவர்கள் "மொனுபலி கண்ட் ரோல்" செய்ய முடியும். அதற்கு வேண்டிய அதிகாரங்கள் அவர்களுடைய கையில் இருக்கின்றன. அதை ஏன் அவர்கள் செய்யவில்லை என்று நாம் அவர்களை கேட்க வேண்டும். அவர்கள் ஏதாவது நடவடிக்கை எடுத்திருந்தாலும் அப்படி எடுத்துக்கொண்டிருக்கக்கூடிய நடவடிக்கை போதாது என்று நாம் அவர்களுக்கு எடுத்துச்சொல்ல வேண்டும். சென்ற ஐந்து வருஷ காலமாக பண வீக்கம் அதிகமாகிக்கொண்டு வருகிறது. ஆனால் பண அதிகரிப்புக்குத் தகுந்த அளவு உற்பத்தி பெருகவில்லை. அதற்குக் காரணம் என்ன என்பதை ஆராய்ந்து பார்க்க வேண்டும். நமக்கு வேண்டிய அத்தியாவசிய பண்டங் களின் விலை உயர்வால் தான் எல்லா பண்டங்களின் விலையும் உயர்ந்திருக்கிறது. ஆகவே அதைக் குறைக்க வேண்டி நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும். சில கொள்கைகளை அனுசரித்து வருகிறார்கள். அதைக் கொஞ்சம் தளர்த்த வேண்டும். அதைச் சரிக்கட்டுவதற்கு நமது அரசாங்கமும் மத்திய அரசாங்கமும் விதி செய்து கொண்டு வருகிறார்கள். ஆனால் இப்பொழுதுள்ள ஏற்றுமதி இறக்குமதிக் கொள்கையை கொஞ்சம் விரிவு படுத்தினால் விலைவாசிகள் கொஞ்சம் குறையலாம். உணவு தானியங்கள் மற்றும் சில முக்கியமான பொருள்களுக்கு அதிகப்படியான வசதிகள் செய்து கொடுத்தால் "ப்ரைஸ் ஸ்டபிலைசேஷன்" மூலம் விலை குறைவதற்கு வழி ஏற்படும். இப்பொழுது அரசாங்கமே கொள்முதல் செய்கிறார்கள். அதை வியாபாரிகளுக்கு விட்டு விடவேண்டும். அரசாங்கம் கொள்முதல் செய்வதில் அதிகப்படியான பணம்

[Sri C. R. Ramaswami] [10th August 1960

கொடுத்து விலைக்கு வாங்க வேண்டியதாக இருக்கிறது. ஆகவே தானிய கொள்முதலை ப்ரைவேட் வியாபாரிகளுக்கு விட்டுவிட வேண்டும். அப்படிக் கொடுத்தால் அவர்கள் அஸ்ஸாமிலிருந்தோ, அல்லது இந்தோ சீனாவிலிருந்தோ, அல்லது பர்மாவிலிருந்தோ, அரிசி முதலியவைகளைக்கொண்டு வருவதற்கு முற்படுவார்கள். அந்த அளவுக்கு ப்ரைஸ் கண்ட்ரோல் ஆகும். ப்ரைஸ் "ஸ்டபிலைஸ்" ஆகும். இதை அரசாங்கம் கவனிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். "லிபரலைசேஷன் ஆப் இம்ப்போர்ட் பாலிஸி" என்ற முறையில் நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும். அதன் பிறகு உள்நாட்டு விலை ஓரளவு குறையும். நாட்டின் நிலைமை கொஞ்சம் சீர்அடையும் என்பதைச் சொல்லிக்கொண்டு அவகாசம் குறைவாக இருப்பதால் என் உரையை இத்துடன் முடித்துக் கொள்ளுகிறேன்.

* Sri V. CHINNIAH: கனம் தலைவர் அவர்களே, கவர்னர் பெருமான் உரையின்மீது ஒரு சில வார்த்தைகளைப் பேச விரும்புகிறேன். மத்திய அரசாங்க ஊழியர்கள் வேலை நிறுத்தம் செய்ததைப் பற்றி மிகவும் வருத்தப்பட்டாலுங்கூட அகில இந்தியாவிலுள்ள வாலிப மாணவ மாணவிகள் அதில் பங்கெடுத்துக்கொள்ளாமல் உற்சாகத்துடன் வேலை நிறுத்தம் செய்ததை முறியடிக்க முன் வந்ததற்கு அவர்களை நான் பாராட்டுகிறேன். மத்திய சர்க்கார் ஊழியர்களுடைய சம்பளம் ஒரு உச்ச நிலைக்கு ஏறிக்கொண்டிருக்கிறது. மேலும் அவர்களுக்கு சம்பளம் அதிகமாகக் கொடுக்க வேண்டும் என்று அவர்களைத் தூண்டிக்கொண்டிருக்கும் சங்கத் தலைவர்கள் மீதும் கடும் நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று நான் கேட்டுக் கொள்ளுகிறேன்.

அது போல் சென்னை ராஜ்யத்திலுள்ள என்.ஜி.ஓ.-க்களுக்கு போதுமான சம்பளம் கொடுக்கப்படாமல் இருந்திருக்கிறது. இப்பொழுது அவர்களுக்கு கூடுமானவரையில் "பே கமிஷன்" ரிபோர்ட் பிரகாரம் ஏதோ உயர்த்திக்கொடுத்திருக்கிறார்கள். அதை நான் வரவேற்கிறேன். அப்படி வரவேற்பதுடன் அவர்களுக்கு மத்திய சர்க்கார் ஊழியர்களுக்குக் கொடுக்கக் கூடிய சம்பள அளவு கொடுக்கப்பட வேண்டும் என்று பணிவன்புடன் கேட்டுக் கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, மொழிப்பிரச்னையைப்பற்றி இங்கே பல நண்பர்கள் பல கருத்துக்களைத் தெரிவித்தார்கள். ஹிந்தி மொழி நமது மாகாணத்திற்கு மிகவும் அவசியமாக இருந்தபோதிலும் கூட மற்ற வகுப்பினரைப் போல் தாழ்த்தப்பட்டவர்கள் ஹிந்தியைக் கற்றுக்கொள்வதற்கு மிகவும் கஷ்டமாக இருக்கிறது. தாழ்த்தப்பட்டவர்களால் தமிழையே கற்றுக்கொள்ள முடியாமல் கீழ்த் தட்டில் இருக்கும் போது அவர்களால் எப்படி ஹிந்தியைக் கற்றுக்கொள்ள முடியும் என்பதைப் பார்கக வேண்டும். தமிழே தெரியாத நிலைமையில் அவர்கள் மிகவும் பிற்போக்காக இருக்கும்போது அவர்களால் முற்போக்கான நிலைமைக்கு வரமுடியாமல் இருக்கும்போது அவர்களால் எப்படி ஹிந்தியைக் கற்றுக்கொள்ள முடியும். இப்பொழுதுதான்

10th August 1960] [Sri V. Chinniah]

அவர்கள் மனிதர்களாக வாழ முன் வருகிறார்கள். இந்த நிலைமையில் அவர்களை ஹிந்தி கற்றுக்கொள்ள வேண்டும் என்று சொன்னால் அவர்களை மனிதர்களாக வாழ வைக்க முடியவே முடியாது. மற்றவர்களுக்கு அது சௌகர்யமாக இருக்கலாம். அவர்களிடம் ஹிந்தியை புகுத்தினால் அவர்களால் முன்னுக்கு வரவே முடியாது. அவர்களுக்கு அரசாங்கம் எவ்வளவு நன்மை செய்தாலும் இதனால் அவர்களால் முன்னுக்கு வரமுடியாது. ஆகவே இன்னும் பத்து வருஷ காலத்திற்கு தாழ்த்தப் பட்டவர்கள் ஹிந்தி கற்றுக்கொள்ள வேண்டிய அவசியம் இல்லை என்ற விதிவிலக்கு அளிக்க வேண்டும். அப்படி அளித்தால்தான் நலமாக இருக்கும்.

மேலும், இப்பொழுது நமது மாகாணத்தில் விலைவாசிகள் உச்சவரம்பை எட்டி இருக்கிறது. அதற்குக் காரணம் உண்மை யிலேயே கள்ள நோட்டுக்கள் அச்சடிப்பதுதான். பத்து அல்லது பதினெட்டு ரூபாய்க்கு விற்ற நெல் மூட்டைகள் எல்லாம் இப்பொழுது இருபத்தி எட்டு ரூபாய்க்கு விற்கப்படு கின்றன. அதற்குக் காரணம் கள்ள நோட்டுக்களைக்கொடுத்து மூட்டை வாங்கி வைத்துக்கொண்டு பல நாட்கள் கழித்து விற்கிறார்கள். அப்பொழுது என்னைப்போன்றவர்களால் ஏழை எளியவர்களால் அதிகப்படியாக பணத்தைக் கொடுத்து வாங்க முடியவில்லை. கள்ள நோட்டுக்களைக் கொடுத்து ஆயிரக் கணக்கான மூட்டைகளை வாங்கி வைத்துக்கொண்டு பின்னால் அதிகப்படியான விலைக்கு விற்கிறார்கள். அப்பொழுதுதான் 28 ரூபாய் கொடுத்து வாங்க வேண்டியதாக இருக்கிறது. அந்த சமயத்தில் ஏழை எளியவர்கள் வாங்க முடியாமல் தவித்துக் கொண்டிருக்கிறார்கள். ஆகவே கள்ள நோட்டு அச்சடித்து வெளியிடுகிறவர்கள் மீது கடுமையான நடவடிக்கை எடுத்துக் கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அவர்களை தண்டிப்பதோடு அவர்களுடைய சொத்துக்களையும் அரசாங்கம் கைப்பற்ற வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். மீண்டும் என்னுடைய புதுக்கோட்டை தொகுதியைப் பற்றி கனம் அருணசல தேவர் அவர்கள் நல்லமுறையில் எடுத்துச் சொன்னார்கள். மூன்று ஆண்டுகாலமாக பஞ்சத்தினால் விளைச்சல் இல்லாமல் போய்விட்டது. அங்கே காட்டாறுகள் பல ஓடுகின்றன. ஓடி சமுத்திரத்தில் போய் வீணாக விழுகின்ற நீரை சிறுசிறு அணைக்கட்டுகள் மூலம் தேக்கி வைக்க வழிவகை செய்ய வேண்டும். அவற்றுக்குக் குறைந்த செலவுதான் ஆகும். இதைச் செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அங்கே உள்ள விவசாயிகள்—அந்த புதுக்கோட்டை பிரதேசத்தைவிட்டு தஞ்சாவூர் ஜில்லாவுக்குப்போய் பிழைக்கவேண்டிய நிலைமை இருக்கிறது. ஆகவே உடனடியாக இவர்கள் இப்படிப் போகாமல் இருப்பதற்காக அந்தப் பிரதேசத்தில் பஞ்சநிவாரண வேலைகளை ஏற்படுத்தவேண்டுமென்று மிகவும் தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன் : மேலும் இப்போது மின்சார வசதி மிக அதிகமாகப் பெருகி வருகிறது. ஆனால் பம்பு செட்டு ஓடினாலும் இல்லாவிட்டாலும் மினிமம் சார்ஜ் கட்டவேண்டுமென்ற நிர்ப் பந்தம் இருப்பதைத் தளர்த்தவேண்டும். மேலும் அடிக்கடி என்.ஜி.ஓ.-க்கள் ஒரு இடத்தில் இருந்து இன்னொரு இடத்திற்கு

[Sri V. Chinniah] [10th August 1960

மாற்றப்படுவதால் அவர்களுக்கு அங்கங்கே வீட்டு வசதிகள் செய்து கொடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொண்டு என்னுடைய வார்த்தையை முடித்துக் கொள்கிறேன்.

* SRI D. S. AUTHIMOOLAM: தலைவர் அவர்களே, கவர்னருடைய உரையில் முதல் அத்தியாயமாக மத்திய அரசாங்க ஊழியர்களுடைய வேலை நிறுத்தத்தைப்பற்றியும், அதை ரொம்பவும் சாமர்த்தியமாக சமாளித்ததுபற்றியும் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் இன்னொரு விஷயம் ஏன் சொல்லப் படவில்லை என்று நான் ஆச்சரியப்படுகிறேன். ஏனென்றால் அகில இந்தியாவில் உள்ள பதினைந்து ராஜ்யங்களில் முக்கியமாக இந்த சென்னை ராஜ்யத்தில்தான் தேசீயக் கொடியை எரிப்பது வழக்கமாக வருஷாவருஷம் ஒரு தடவை நடந்து வருகிறது. தேசீயக் கொடியை பெரியார் எரிக்கப்போகிறார் எரிக்கப் போகிறார் என்று விளம்பரம் செய்கின்றது. பெரியார் அரெஸ்டு செய்யப்படுவார் என்று சொல்வது உடனே அவர்கள் போனில் பேசிக்கொள்வார்களோ என்னமோ தெரியாது. பெரியாரை முதல்நாள் கைது செய்து மறுநாள் ஜெனரல் ஆஸ்பத்திரிக்கு அழைத்து வரப்படுவார். அப்புறம் அவருக்கு இங்கே ஆரஞ்சுப் பழம் என்ன, பாதாம் ஹல்வா என்ன என்று உபசாரம். இது மகா கேவலம். சர்க்கார் இப்படி நடத்துவதற்குக் காரணம் அவர் மூலமாக சில வோட்டுக்களைப் பெறுவதற்காகத்தான். வோட்டு, வோட்டு என்று இப்படி மகாகேவலமாக நடந்து கொண்டால் இந்தத் தேசம் அழிந்து நாசமாகிவிடும். இந்தத் தேசம் பண்பில் சிறந்த தேசம். அந்தப் பண்பை பாதுகாப் பதற்கு நல்ல அரசாங்கம் வேண்டும். தேசீயக் கொடி என்பது மக்களின் உயிருக்கு மேலான ஒரு சமாசாரம். அதை வருஷத் திற்கு ஒருதரம் எரிக்கிறேன் என்று சொன்னால் அம்மாதிரி எரிக்கக்கூடிய நபர்களை—தேசீயக் கொடியை எரித்தார்கள் என்றால் அதற்குப் பின்பு சரியானபடி நடவடிக்கை எடுத்து வருஷக்கணக்காக உள்ளே தள்ள வேண்டும். அவர்கள் வருஷத் திற்கு ஒரு தடவை இப்படி கொடி எரிப்பு நடத்தட்டும். அதனால் அவர்களுக்குக் கொஞ்சம் விளம்பரம் வரட்டும். அந்த விளம் பரம்தானே அவர் மூலமாக நமக்கு பின்னால் சில வோட்டுக்களை வாங்கித் தரும் என்று எண்ணினால் இது மிகமிக வெட்கமானது என்று சொல்ல விரும்புகிறேன். ஆகவே, இப்போது சர்க்கார் எதை எடுத்தாலும் ஓட்டுப் பெறுகிற கண்ணோட்டத்தோடு நடந்து வருவதானது இந்த ராஜ்யத்திற்கு அவ்வளவு நல்லது அல்ல என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

அதற்கடுத்தபடியாக, முக்கியமாக அகவிலையைப் பற்றியது. எல்லாப் பொருள்களின் விலையும் விஷம்போல ஏறிக்கொண் டிருக்கிறது. இப்படி அகவிலை ஏறுவதற்குக் காரணம் என்ன? பெரிய பெரிய திட்டங்களை எல்லாம் போடுகிறோம் என்றால் உங்களை யார் இவ்வளவு பெரிய திட்டங்களை எல்லாம் போடச் சொன்னார்கள்? உங்களுக்கு இந்த அதிகாரத்தை யார் கொடுத்தது? மக்கள் கொடுத்தார்கள் என்று உடனே சொல் வீர்கள். இது மிகவும் பின் தங்கிய நாடு என்று சொல்லிக் கொண்டு அதைப் பதினைந்து வருஷங்களில் ஒரேயடியாக முன்னுக்குக் கொண்டுவரப்போகிறோம் என்று திட்டங்களை

10th August 1960] [Sri D. S. Authimoolam]

எல்லாம் வெகுவேகமாகப் போட்டு கடைசியில் இன்றைக்கு எதைப்பார்த்தாலும் ப்ளாக்மார்க்கெட்டாக ஆக்கிவிட்டீர்கள். அரிசி விலை ஏறிவிட்டது. ஜீனி விலை ஏறிவிட்டது. ஒரு வீசை ஜீனி என்ன விலை என்றால்—நான் அடிக்கடி வாங்கி பழக்கம் இல்லை—(ஒரே சிரிப்பு) இப்படி விலை இருந்தால் ஏழை ஜனங்கள் என்ன செய்வார்கள்? ஒரு ஏழை மகன் படிக்கவேண்டுமென்றால் ஒரு குயர் பேப்பர் என்ன விலை உயர்ந்து கிடக்கிறது? புத்தகங்கள் எல்லாம் என்ன விலையாகிறது? ஆகவே இதற்கெல்லாம் காரணம்—விளையாட்டாகச் சிரித்துப் பிரயோஜனம் இல்லை. இப்போது நான் சொல்வதற்கு ஒரு உதாரணம் சொல்கிறேன். பழைய காலத்தில் மஞ்சள் பெட்டிக்கு வோட்டு என்றால் போதும். காங்கிரஸ்காரர் யார் நின்றாலும் தேர்தலில் "அன் அப்போஸ்டாக" வெற்றிபெற்று வருவார். ஆனால் இன்றுள்ள நிலைமை வேறு. முதல் மந்திரி அவர்கள் திக்விஜயம் செய்து புஷ்பஹாரங்களாக வாங்கிச் சூட்டிக்கொண்டு வரலாம். மற்றபடி தேர்தல் காலத்தில் வந்தால் நிலைமை என்ன? சமீபத்தில் அருப்புக்கோட்டை தேர்தல் நடந்தது. அங்கே சுயேச்சையாக நின்ற அபேட்சகரைத் தோற்கடிக்க என்ன என்ன பாடுபட்டார்கள். வரவுசெலவு லட்சக்கணக்காக இருந்திருக்கும். காங்கிரஸ் அமைச்சர்கள் குடும்பத்தோடு சென்றார்கள். "நாம் கன்னடிகர் அல்லவா? இந்திய சர்க்காரில்—திரு. ராமசாமி அவர்களுக்கு தம் சாதி பற்றி தானே மந்திரி பதவி கொடுத்திருக்கிறார்கள்"—இப்படி என்ன என்னவோ முறையில் சொல்லியும் பார்த்தார் காசை செலவழித்தும் பார்த்தார்கள். கடைசியில் பிச்சுக்கொண்டுபோய்விட்டது. நிலைமை முன்மாதிரி இல்லை. எதிர்க்கட்சிக்காரன் பத்தாயிரம் செலவழிக்கிறான் என்றால் காங்கிரஸ்காரனும் பத்தாயிரம் செலவழித்து தோற்றும் போகலாம். அல்லது ஒரு நூறு அல்லது இருநூறு வோட்டு வித்தியாசத்தில் ஜயிக்கலாம். ஆகவே மக்களுடைய அபிமானத்தை கொஞ்சம், கொஞ்சமாக இழந்து வருவதோடு பணத்தால் தடுமாறி வோட்டுப்பெற்று உலவி வருகிறார்கள். நீங்கள் பரம்பரையாக இருப்பதை, அமைச்சர்களாக இருந்து நிர்வாகம் செய்து வருவதை நான் ஆட்சேபிக்கவில்லை. ஆனால் நீங்கள் நல்லவிதமான அரசாட்சி நடத்த வேண்டும். இன்றைய தினம் ஒரேயடியாக விலைவாசிகள் ஏறிக்கொண்டே போகின்றன. இந்த ராஜ்ய சர்க்கார்கள் அந்த விலையைக் கட்டுப்பாடு செய்ய தக்க நடவடிக்கை எடுத்துக் கொள்ளவேண்டும். ஆனால் இன்றுள்ள நிலைமையில் இவர்கள் அப்படிச் செய்கிறார்களா?

அபிவிருத்தித் திட்டங்கள் என்று போடப்பட்டவைகள் தான் என்ன ஆகிறது? ஸ்தல ஸ்தாபனத் திட்டத்தின்கீழ் பல்லாயிரக் கணக்கான மைல் ரோடுகள் போடப்பட்டன. ஆனால் இன்று அவை பராமரிக்கப்படாமல் வீணாகிக் கிடக்கின்றன. ஜில்லா போர்டு ரோடுகள் ஆஸ்பத்திரிகள் எல்லாம் சீரழிந்து கிடக்கின்றன. இப்பொழுது புதிய பஞ்சாயத்து யூனியன் பிரிசிடன்ட் வந்துவிட்டார்கள்.

THE HON. SRI C. SUBRAMANIAM: பழய டிஸ்ட்ரிக்ட் போர்ட் பிரிசிடென்ட் இருந்த காலத்திலே மாத்திரம் என்ன நடந்தது?

[10th August 1960

SRI D. S. AUTHIMOOLAM: அந்தக் காலத்தில் ஜஸ்டிஸ் பார்ட்டி ஆள் இருந்தபோது ஜில்லாபோர்டுகள் நன்ருக இயங்கி வந்தன. தஞ்சாவூரில் திரு. நாடிமுத்துப்பிள்ளை பிரிசிடென்டாக இருந்தபோது அங்கே 60 லட்சம் ரூபாய் இருந்தது. அதோடு கூட அப்போது டிஸ்ட்ரிக்ட் போர்ட்டில் ரயில்வே லைன்கூட இருந்தது. ஆனல் 1958-ம் ஆண்டிலே பஞ்சாயத்து யூனியன் சட்டம் வந்து, Scrap Iron ஸ்க்ராப் ஐரனைத் தள்ளுவதுபோல் டிஸ்ட்ரிக்ட் போர்ட்டைத் தள்ளிவிட்டார்கள். ஆகையால் நான் சொல்வது என்னவென்ருல் பழையபடி டிஸ்ட்ரிக்ட் போர்ட்டை ரிவைவ் (Revive) செய்தால் நலமாக இருக்கும். இப்போது பஞ்சாயத்து மாற்றம் ஏற்படுவதனல் சர்க்காருக்கு 3, 4 கோடி அதிகமான செலவு ஏற்படுகிறது. இப்படியெல்லாம் செலவு செய்கிருர்களேயொழிய ஒரு கிராம அதிகாரிக்கு 5 ரூபாய் சம்பளம் அதிகமாக கொடுக்கவேண்டுமென்ருல் யோசனை பண்ணிக்கொண்டிருப்பதாகச் சொல்லுகிருர்கள். ஆகவே நம் நாட்டின் அந்தஸ்த்து உயரவேண்டுமென்ருல், ஒரு நல்ல சூழ்நிலை ஏற்படுத்தவேண்டும். விலைவாசிகளைக் கட்டுப்படுத்துவதற்கு திட்டங்களைத் தீட்டவேண்டும். டில்லிக்குப்போய் காரியங்களை சமாளிப்பதற்கு முன்னல் நம்மை நாமே தயார் செய்து கொண்டு ராஜ்யம் ஆளவேண்டுமே தவிர ஓட்டு வாங்கவேண்டுமென்ற நோக்கத்தோடும், ஒரு கட்சியை பலப்படுத்தவேண்டுமென்ற நோக்கத்தோடும் ஒரு காரியத்தை செய்யாமல் மக்களுக்கு எவ்வளவு தூரம் நன்மை செய்ய முடியுமோ, அவ்வளவு தூரம் கண்திறந்து பார்த்து வேலை செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். எனக்கு பேசுவதற்கு இந்தச் சந்தர்ப்பத்தைக் கொடுத்ததற்காக என் நன்றியைத் தெரிவித்துக்கொண்டு என் வார்த்தைகளை முடித்துக்கொள்ளுகிறேன்.

* SRI P. M. MUNUSAMI GOUNDER: கனம் தலைவர் அவர்களே, கவர்னர் பெருமான் அவர்கள் உரையின் பேரில் வாழ்த்துக்கள் தெரிவித்து, அவர்கள் பேசிய விஷயங்களின் கருத்துக்களில் சிலவற்றை நான் குறிப்பிட விரும்புகிறேன். முக்கியமாக கவர்னர் பெருமான் அவர்களுடைய உரை சர்க்காருடைய கொள்கை என்ன, சர்க்கார் எந்த எந்த முறையிலே வேலை செய்கிருர்கள் என்ற முறையில் அமைந்திருக்கிறது. ஆனல் பல பேர்களுக்குத் தவருன கருத்துக்கள் இருந்த போதிலும், இந்த உரையில் பொதுப்படையான நல்ல அம்சங்கள் இருக்கின்றன. இது மிகவும் வரவேற்கத்தக்கது. முக்கியமாக நம் நாட்டில் சில மாதங்களுக்குள் நடந்த விஷயங்களில், குறிப்பாக மத்திய சர்க்கார் ஊழியர் வேலைநிறுத்தத்தைப் பற்றியும், ஆந்திர மாநிலத்திலிருந்து சில பகுதிகள் சென்னை மாநிலத்திற்கு வந்தது பற்றியும், தொழிற்சாலைகள் ஏற்படுத்துவது பற்றியும், மின்சாரத்தில் எந்தெந்த வகையில் இன்னும் சலுகைகள் தரப்படுகின்றன என்று பல அம்சங்கள் இதில் அமைந்திருப்பதால் கவர்னர் பெருமான் அவர்களுடைய உரையை நாம் பாராட்டவேண்டும். ஆனல் சில அங்கத்தினர்கள் ஓட்டுவாங்கும் முறையிலே இந்தப் பிரசங்கம் அமைந்திருக்கிறது என்று சொல்வது சரி அல்ல என்று கூற விரும்புகிறேன். இது மிகவும் வருந்தத்தக்க விஷயம். நாம்

10th August 1960] [Sri P. M. Munusami Gounder]

திட்டங்கள் போடாமல் எந்த வேலையும் செய்ய முடியாது. எந்த சிறிய காரியத்தைச் செய்யவேண்டுமானாலும் திட்டம் போட்டுத்தான் செய்யவேண்டும். ஆனால் இதில் திட்டம் போட்டு சதி செய்திருக்கிறார்கள் என்று சொல்லுவது சரி அல்ல. இதில் சதி ஒன்றும் நடக்கவில்லை. ஆகையால் சர்க்கார் தீட்டி யுள்ள திட்டங்களை நன்றாக சிந்தித்துப்பார்த்து இது ஓட்டு வாங்குவதற்காகவா அல்லது நல்ல காரியங்களை செய்வதற் காகவா என்று எதிர்க்கட்சியினர் பார்க்கவேண்டும்.

தவிர மத்திய சர்க்கார் வேலைநிறுத்தத்தைப்பற்றி கவர்னர் உரையில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இதைப்பற்றி காங்கிரஸ் கட்சியிலிருந்தும், எதிர்க்கட்சியில் இருந்தும் அபிப்பிராயங்கள் கூறப்பட்டன. எதிர்க்கட்சியினர்கூட மத்திய சர்க்கார் ஊழியர் வேலை நிறுத்தத்தைக் கண்டித்து பேசியிருக்கிறார்கள். இதனால் பொதுமக்களின் அபிப்பிராயம் எந்தவிதத்தில் இருக்கிறது என்பதைத் தெரிந்துகொள்ளலாம். தொழிற்சங்கங்கள்தான் இந்த வேலை நிறுத்தத்தைத் தூண்டிவிட்டார்கள் என்று குறிப் பிடப்பட்டது. உண்மை என்னவென்றால் நம் நாட்டில் மிகவும் அத்தியாவசியமான திட்டங்களை சர்க்கார் அமுல் நடத்தி பொதுமக்கள் பொருளாதாரத்துறையில் உயர்வதை தடுப்பதற் காக, நாட்டிலே ஒரு குழப்பத்தை உண்டாக்குவதுதான் அவர் களுடைய நோக்கம் என்று கூறவேண்டும். இந்த ஒரேநோக்கத் துடன்தான் எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் சர்க்கார் பேரிலே குறைசொல்லிக் கொண்டிருக்கிறார்கள். இது மிகவும் வருந்தத் தக்க விஷயம். சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் விஷயத்தில் மட்டுமல்ல, தொழிற்சாலையில் வேலைச்செய்யும் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்வதற்குக்கூட இம்மாதிரி வேலை நிறுத் தத்தைத் தூண்டி விடுகிறார்கள். ஏதாவது ஒரு தனிப்பட்ட தொழிலை எடுத்துக்கொண்டால் அந்தத் தொழிலில் ஈடுபட் டிருக்கும் தொழிலாளிகளைக் கொண்டு சங்கங்கள் அமைத்துக் கொள்ளுகிறார்கள். உதாரணமாக மோட்டார் தொழிற் சாலையை எடுத்துக்கொண்டால் 5 பஸ்களை வைத்துக்கொண்டு நடத்தினாலும் அங்கு வேலைநிறுத்தம் செய்ய இந்தத் தொழிற் சங்கத்தலைவர்கள் தூண்டி விடுகிறார்கள். இந்த சங்கத்தின் முக்கிய நோக்கம் என்னவென்றால் அவர்கள் சந்தா வசூலிப்பது என்ற ஒரே நோக்கத்தோடு இருக்கிறார்களே தவிர தொழில்கள் வளரவேண்டுமென்ற அக்கரை அவர்களுக்குக் கிடையாது. இம்மாதிரியான ஒரு நிலைமை இருந்தால் நம் நாட்டில் தொழிற் சாலைகள் எவ்வாறு அமைய முடியும்? ஆகையால் மத்திய சர்க்கார் ஊழியர்கள் மட்டும் அல்ல, மற்ற துறையில் வேலை செய்கின்றவர்கள் விஷயத்திலும் வேலை நிறுத்தம் செய்வதற்கு அனுமதி கொடுக்கக்கூடாது. இதற்காக சட்டத்தை திருத்த வேண்டுமானாலும் திருத்துவதற்கு சர்க்கார் ஆராயவேண்டும்.

அடுத்தபடியாக, சென்னை ராஜ்யத்துடன் திருத்தணி தாலூகா இப்போது சேர்ந்திருப்பது மிகவும் வரவேற்கத்தக்க விஷயம். அங்கிருந்த மக்கள் இந்த திருத்தணியும் இன்னும் மற்ற பகுதிகளும் நம் ராஜ்யத்தில் சேருமா அல்லது ஆந்திரா ராஜ்யத்துடன் இருக்குமா என்ற நிச்சயமற்ற நிலையில் அவதிப்

[Sri P. M. Munusami Gounder] [10th August 1960

பட்டுக்கொண்டிருந்தார்கள். அப்பகுதியில் திட்டங்களை நிறைவேற்றுவதில் சர்க்கார் முதலிடம் கொடுத்து பல வேலைகள் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

தவிர, கிருஷ்ணகிரியில் உள்ள வேப்பனபள்ளி பிர்க்காவில் மூன்று கிராமங்கள் ஆந்திராவுக்குப் போய் சேர்ந்துவிட்டன. அங்குள்ள மக்கள் மிகவும் பரிதபிக்க கூடிய நிலையில் இருக்கிறார்கள். இது மிகவும் வருந்தத்தக்க விஷயம். இன்னும் இந்த கிராமங்களில் முன்னேற்றத்திற்கு ஏற்ப வேலைகள் நடைபெறாமல் வேலை கிடைக்காமல், அவர்களெல்லாம் நம்முடைய பகுதிக்குக் குடியேறிக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் சவுகரியத்தைக் குறித்து அங்கு தொடர்ந்து இருக்கபிரியப்படாமல் நம் பகுதிக்கு குடியேறுகிறார்கள்.

அடுத்தபடியாக, மொழிப் பிரச்னையை எடுத்துக்கொண்டால் பல கட்சிகள் இந்த மொழிப் பிரச்னையில் குழப்பத்தை உண்டாக்க முயற்சி செய்துவருகின்றனர். குறிப்பாக எதிர்க்கட்சியில்
11-30 a.m. ஒரு கட்சி இந்த மொழிப் பிரச்னையை சரியான முறையில் புரிந்துக்கொள்ளாமல் ஹிந்தி கட்டாய மொழி என்று தவறான வழியில் மக்களுக்கு தப்பு அபிப்பிராயத்தை போதித்து வருகின்றார்கள். இம்மாதிரி தெரிந்தும் தெரியாததுமாக நடந்துக்கொண்டால் மிகவும் வருந்தத்தக்க விஷயம். நாம் பல பல பாஷைகள் அவசியம் கற்றுக்கொள்ளவேண்டும். அப்போதுதான் நாம் முன்னேறமுடியும். ஆகையால் இந்த மொழிப்பிரச்னையை நல்ல முறையில் ஆராய்தல் வேண்டும். நாம் பல பாஷைகள் கற்றால்தான் நாம் பலவிடங்களுக்குப் போகும்போது அங்குள்ள மக்கள் பேசுவதைத் தெரிந்து கொள்ளவும் அதோடு கூட தொழில்கள், வியாபாரம் போன்றவைகளுக்கும் சௌகரியமாக யிருக்கும். அப்பொழுதுதான் நாம் நல்ல முறையில் நன்கு வாழ முடியும். சில மாதங்களுக்கு முன்பு நான் டெல்லி போன்றவிடங்களுக்கு சென்றிருந்தபோது, இந்தி தெரியாததால் பலவித கஷ்டங்களை அனுபவிக்க நேரிட்டது. எங்கு சென்றாலும் இந்தியில் பேசுகிறார்கள். அங்கிருந்து இங்கு வருகிறவர்கள் ஆங்கிலத்தில் பேசி சமாளித்துக் கொள்கிறார்கள். ஆனால் அப்படிச் செய்ய நம்மால் அங்கு முடியவில்லை. நமது மாகாணம் மத்திய சர்க்காரின்கீழ் இருக்கும்போது நாம் எவ்விதத்திலும் இந்தியைக் கற்றேயாக வேண்டும். ஒரு நண்பர் கூட குறிப்பிட்டார்கள், பத்து ஆண்டுகளுக்குப் பிறகு, இப்பொழுது யார் யார் இந்தியை எதிர்க்கிறார்களோ யார் யார் இந்தி வேண்டாமென்று சொல்கிறார்களோ அவர்கள் இந்தி கற்று நல்லபடி இருப்பார்கள், ஆனால் அவர்கள் வேண்டாமென்று சொல்வதைக் கேட்டு இந்தி படிக்காது இருப்பவர்கள் பின்னால் கஷ்டப்படுவார்கள் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். ஆகவே, மாணவர்களை தவறான பாதையில் இழுத்துச் செல்ல வேண்டாம் என்று கூறிக்கொண்டு இந்தி மட்டுமல்ல பல பாஷைகள் நாம் கற்றுத் தெரிந்து கொள்ளவேண்டும். (மணியடிக்கப்பட்டது.)

அடுத்தபடியாக, தொழிற்சாலைகள் விஷயமாக, பரவலான முறையில் ஆங்காங்கு தொழிற்சாலைகள் அமைக்கப் படவேண்டுமென்று கூறியிருப்பது வரவேற்கத்தக்கது. சேலத்தில் காகித

10th August 1960] [Sri P. M. Munusami Gounder]

தொழிற்சாலை, அலுமினியத் தொழிற்சாலை, இரும்புத் தொழிற் சாலை மூன்றும் நிறுவப் போவதாக குறிப்பிடப் பட்டிருக்கிறது. இது, வரவேற்கத்தக்கது. ஆங்காங்கு தொழிற்சாலைகளை பரவ லாக ஏற்படுத்தப் படவேண்டுமென்று சொல்லிக்கொண்டு, ஜெர்மன் நிபுணர்கள் வந்து இரும்பு எங்கெங்கு இருக்கிறது என்று பார்க்கும்போது சேலத்தில் உயர்ந்த தர இரும்பு இருப்ப தாகக் கண்டு பிடித்திருக்கிறார்கள். ஹரூர் தாலுகாவில் தீர்த்த மலையில் நல்ல இரும்பு கிடைக்கும், நல்ல உயர்ந்த ரக இரும்பு இருக்கிறது என்று அவர்கள் தெரிவித்திருக்கிறார்கள். ஆகவே, சேலம் ஜில்லாவில், ஒரு இரும்பு உருக்கு தொழிற்சாலையோடு ஹரூர் தாலுகாவில் ஒரு இரும்பு உருக்குத் தொழிற்சாலையை ஏற்படுத்தவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். தீர்த்தமலை யில் நல்ல இரும்பு கிடைக்கிறது, நல்ல வசதிகள் இருக்கின்றன, அது பிற்போக்கான இடம், அங்கு காடுகள் நிறைய இருக் கின்றன. கனம் ராமையா அவர்கள் அங்கு வந்து நேரில் எல்லா யிடங்களையும் பார்வையிட்டார்கள் பத்து தினங்களுக்கு முன்பு. இவ்வளவு பிற்போக்கான இடம் கூட இருக்கிறதா என்ற நிலையை அவர்கள் அறிந்து கொண்டார்கள். ஆக, இந்த இடத்திற்கு உயர்ந்த ஸ்தானம் கொடுத்து தீர்த்தமலையில் ஒரு இரும்பு உருக்குத் தொழிற்சாலை ஏற்படுத்தவேண்டுமென்று கேட்டுக் கொண்டு என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

* SRI R. SUBRAMANIAM: சபைத் தலைவர் அவர்களே, கவர்னர் பெருமான் அவர்களது உரைக்கு லாஸர் உடையார் அவர்கள் கொண்டு வந்திருக்கும் நன்றி தெரிவிக்கும் தீர்மானத்தை ஆதரித்து நான் ஒரு சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். கவர்னர் பெருமான் அவர்கள் பருவ மழை பற்றி சொல்லும்போது, "பருவ மழைக்காலம் இன்னும் முடிந்து போகவில்லை. இன்று ஆகவே, மேற்குத் தொடர்ச்சி மலைகளில் நல்ல மழை பெய்து நமது ஆறுகளில் நீர்ப் பெருக் கெடுத்தோட வேண்டும் என்று நாம் இறைவனைப் பிரார்த்திப் போமாக" என்று கூறியிருக்கிறார்கள். அவ்வேண்டுகோளுக்கு இணங்கி இறைவன் அருளால் நல்ல மழை இப்பொழுது பெய்து மேட்டூர் தேக்கத்தில் நேற்று வரையில் 95 அடி நிரம்பியிருக் கிறது. இனியும் கொஞ்சம் அதிகமாகும் என்று நினைக்கிறேன். பத்து தினங்களுக்கு முன்பாக நான் பேப்பரில் பார்த்தது, தேக்கத்தில் தண்ணீர் குறைவாகயிருப்பதால் ஆகஸ்ட் 15-ம் தேதி முதல் "டேர்ன் ஸிஸ்டம்" கொண்டு வரப்படுமென்று சர்க்கார் அறிவித்திருந்தது. எப்பொழுதுமே இந்த முறை ஸிஸ்டம் அக்டோபர் முதல் வாரத்தில்தான் கொண்டு வரப்படும். ஆகவே இப்பொழுது நிலைமை சீர்திருந்தி மேட்டூர் தேக்கத்தில் தண்ணீர் அதிகமாகியிருப்பதால் உடனடியாக இந்த டேர்ன் ஸிஸ்டம் ரத்து செய்யப்படுமென்று சர்க்கார் அறிவிக்க வேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன். ஏனெனில், ஆகஸ்ட் 15-ம் தேதி டேர்ன் ஸிஸ்டம் வந்தால் நடவு பாதிக்கப்படும். நட்டு ஒரு மாத கால அளவில்தான் பயிர்களுக்கு தண்ணீர் நிரப்பப்படும். ஆகவே, இந்த டேர்ன் ஸிஸ்டம் உடனடியாக ரத்துச் செய்யப் படுமென்று சர்க்கார் அறிவிக்க வேண்டும்.

[Sri R. Subramaniam] [10th August 1960

அடுத்தபடியாக, விலைவாசி உயர்வு பற்றி சொல்லும்போது அநேக அங்கத்தினர்கள் உணவு தான்ய விலை பற்றித்தான் குறிப்பிடுகிறார்களே தவிர உணவுப் பொருள் உற்பத்தி செய்வதற்கு ஆதாரமாக இருக்கக் கூடிய பொருள்களின் விலை பற்றி அவர்கள் சொல்வது கிடையாது. உணவுதான்ய விலையைக் கட்டுப்படுத்த வேண்டியது அவசியந்தான். ஆனால் அதேமுறையில் உணவு உற்பத்திக்கு சாதகமாக இருக்கக் கூடிய மற்ற பொருள்களின் விலையையும் கட்டுப்படுத்த வேண்டுமென்பதே என் அவா, என் வேண்டுகோள். சாதாரணமாக, கிராமங்களை எடுத்துக் கொண்டால் பெரியதனக்காரர்கள் மட்டுமல்ல, சிறு விவசாயிகள் கூலி வேலை செய்பவர்கள் கூட தான்யமாகத்தான் பெற்றுக் கொள்கிறார்கள். ஆக, உணவு விலையைக் கட்டுப்படுத்தினால் பெரிய பணக்காரர்கள் மட்டும் பாதிக்கப்படுபவர்கள் அல்ல, சிறிய விவசாயிகள், கூலி வேலை செய்பவர்கள் ஆக கிராமங்களில் உள்ள எல்லா மக்களும் பாதிக்கப்படுவார்கள். ஆகவே, நிதானமாக யோசித்துப்பார்த்து மற்ற பொருள்களின் விலையையும் கட்டுப்படுத்தவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். உணவுப் பொருள்களின் விலையைக் கட்டுப்படுத்த வேண்டாமென்று நான் சொல்லவில்லை. கட்டுப்படுத்தவேண்டும். ஆனால் அதேபோல் மற்ற பொருள்களின் விலைபற்றியும் சற்று நிதானமாக சிந்தித்துப் பார்த்து அவைகளின் விலைகளையும் கட்டுப்படுத்துவதற்கு வேண்டிய தீவிர நடவடிக்கைகள் எடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அடுத்தபடியாக, தஞ்சாவூர் ஜில்லாவில் இப்பொழுது தீவிர சாகுபடித் திட்டம் ஆரம்பமாகி நல்லமுறையில் வேலை நடந்து வருகிறது. அங்குள்ள கலெக்டர் அவர்களும் அவர் கீழ் உள்ள அதிகாரிகளும் மிக அக்கரை எடுத்துக்கொண்டு இதை வெற்றிகரமாக்குவதற்கு தங்களால் இயன்ற அளவிற்கு வேலைகள் செய்து வருகிறார்கள். அதிகாரிகளை பொறுத்தவரையில் நாம் அவர்களைத் தாக்கிப் பேசினால் அவர்களின் நிலைபற்றி எடுத்துச்சொல்ல பொதுக் கூட்டங்களோ அல்லது சட்ட மன்றமோ இப்படி அவர்களுக்கு எதுவும் கிடையாது.

(Mr. Speaker in the Chair.)

ஆகவே அவர்களைப் பற்றி சொல்லும்போது நிதானமாக யோசித்துப் பார்த்து சொல்லவேண்டும். ஆனால் இப்பொழுது காங்கிரஸ் இயக்கத்தின் மீது வெறுப்புற்ற ஒரு சிலர் கொடுத்த தகவலை வைத்துக்கொண்டு மிகப் பொறுப்புள்ள தினசரிப் பத்திரிகையும், வாரப் பத்திரிகையும் தஞ்சாவூர் ஜில்லாக் கலெக்டரைப் பற்றியும் அவர் கீழ் வேலை செய்யக் கூடியவர்களைப் பற்றியும் மிகவும் குறைவாக எழுதியிருப்பது மிகவும் வருந்தத் தக்க விஷயமாகும். உண்மையைச் சற்று ஆராயவேண்டும். ஜூன் 15-ம் தேதி மேட்டூர் அணை திறக்கப்பட்டது. தஞ்சாவூருக்கு தண்ணீர் வரும்போது 20-ம் தேதி வந்து சேர்ந்தது. தஞ்சாவூர் கடைக்கோடிக்கு 25-ம் தேதி வாக்கில் தண்ணீர் போய்ச் சேர்ந்தது. புழுதி நாற்று போட்டு நடவு ஆரம்பித்தால் ஜூன் 25-ம் தேதிக்கு முன் நடவு நட்டிருக்க முடியாது. நிலைமை இப்படியிருக்க, நடவு நட்ட ஒரு மாதத்திற்கு அப்புறந்தான் சல்பேட் தேவை. ஜூலை 1-ம் தேதிக்கு முன்பாக இது

10th August 1960] [Sri R. Subramaniam]

மாதிரி கிளர்ச்சி ஏற்பட்டு, நல்லமுறையில் அங்கு ரசாயன உரம் கிடைக்கவில்லே, என்று பத்திரிகைகளில் எழுதியிருப்பதைப் பார்த்து வருந்துகிறேன. வாரப் பத்திரிகை, கல்கியில எழுதி யிருக்கிறுர்கள். அவர்களுக்கு இதைப்பற்றிக் கூட கவலேயில்லே. கல்கி பத்திரிகையை எடுத்துக்கொண்டால் அதை சுதந்திராக் கட்சியின் வாரத் தாள் என்றே சொல்ல முடியும். அவர்கள், ஒன்றில் எழுதியிருக்கிறுர்கள், கலெக்டர் அவர்கள், முதன் மந்திரி யவர்களின் சுற்றுப்பிரயாணத்தை வெற்றிகரமாக்க முனைந் திருந்ததால் இம்மாதிரி வேலேயில் அவர்கள் ஈடுபடவில்லே என்று தாக்கி எழுதியிருக்கிறுர்கள். இது மிகவும் தவருன கருத்தாகும். ஏனெனில், முதன்மந்திரியவர்கள் தஞ்சாவூர் ஜில்லாவில் 19-ம் நாள் சுற்றுப்பிரயாணம் செய்தார்கள். முதன்மந்திரியவர்கள், தஞ்சாவூர் கலெக்டரிடம் வந்தவுடன் " நீங்கள் என்னேடு வர வேண்டாம், உங்கள் வேலேயைக் கவனியுங்கள் " என்று சொல்லி விட்டார்கள். முதன் மந்திரி அவர்கள் வந்த அன்று பார்த் தார்கள், பின்னர் அவர்கள் திரும்பிப்போகும்போது பார்த்தார், நடுவில் ஒரு தடவை முதன் மந்திரியவர்களேச் சந்தித்து இருக் கிறுர்கள். ஆக, கலெக்டர் அவர்கள் முதன் மந்திரி அவர் களுடன் கூடப் போகவில்லே. அதற்காக நேரத்தை செல விடவும் இல்லே. ஆகவே, அவர்கள் அவர்களது வேலேயை நன்கு கவனித்து வந்திருக்கிறுர்கள். இவ்வளவு கூச்சலும் எத ஞல் எழுப்பப்பட்டது என்பதற்கு மற்றும் ஒன்று சொல்ல விரும்புகிறேன். சென்ற ஆண்டில் இந்த ரசாயன உரம் தனிப் பட்டவர்களுக்கு விற்பனேக்கு கொடுக்கப்பட்டது. ஆனுல் இந்த ஆண்டிலிருந்து தனிப்பட்டவர்களுக்கு விற்பனேக்கு கொடுக்கக் கூடாது, ரசாயன உரத்தை சொஸைட்டிகள் மூலம் கொடுப்பதற்கு ஏற்பாடு செய்திருக்கிறுர்கள். ஆகவே, அதனுல் அதிருப்தி அடைந்த சிலர் இம்மாதிரி தாறுமாருக தகவல் கொடுத்து இவ்வளவு தூரம் தாக்கி எழுத முற்பட்டிருப்பது வருந்தத்தக்க செயலாகும். இது பொதுவாக ராஜ்யப் பிரச்னே யாக இல்லாவிடினும் தஞ்சாவூரைப் பொறுத்த மட்டில் இது ஒரு பெரிய பிரச்னேயாக இருந்து வருகிறது. இதுபற்றி கவர்னர் அவர்கள் அவர்களது உரையில் தெரியப்படுத்தாதிருந்த போதிலும் அமைச்சர் அவர்கள் பதில் சொல்லும்போது இது பற்றி சற்று விளக்கமாக சொல்லும்படி தாழ்மையோடு கேட்டுக் கொள்கிறேன்.

அதற்கடுத்தபடியாக, தொழிற்சாலேகள் அமைப்பதைப்பற்றி சொல்லியிருப்பதைப் பாக்கும்போது பரவலாக ஏற்படுத்த வேண்டும் என்று சொல்லியிருப்பதை நான் வரவேற்கிறேன். ராஜ்யத்திற்கு ராஜ்யம் தொழில்கள் எல்லாம் பரவலாக இருக்க வேண்டும் என்ற கருத்து பொதுவாக இருந்து வந்த போதிலும் கூட இந்த ராஜ்யத்தைப் பொறுத்த வரையில், தொழில்களே ஏற்படுக்கும்போது தஞ்சாவூர் ஜில்லாவைப் பொறுத்தவரையில் அங்கு நெல் அதிகமாக விளேகிறது என்ற காரணத்திஞல் அதை விட்டு விடுகின்றுர்கள். ஆனுல் அங்கு பெரிய தொழிற்சாலே ஆரம்பிக்கலாம் என்பது என்னுடைய அவா. ஒன்று வேதா ரண்யத்தின் பக்கத்தின் 150 சதுர மைல் அளவுக்கு இயற்கை யாகவே உப்பு கிடைக்கிறது. அதிலிருந்து காஸ்டிக் சோடா

[Sri R. Subramaniam] [10th August 1960

போன்றவை தயாரிக்க முடியும். இதற்காக ஒரு பாக்டரி ஏற்படுத்தலாம். அதைப்பற்றி நான் அடிக்கடி நமது நிதி அமைச்சர் அவர்களிடத்திலும், தொழில் அமைச்சர் அவர்களிடத்திலும் கூறியிருக்கிறேன். இதன் மூலம் பல உபரி பொருட்கள், ஜிப்ஸம், க்ளோரின் போன்றவைகள் தயாரிக்கலாம் என்று சொல்லப்படுகிறது. ஆகவே இம்மாதிரியான ஒரு பாக்டரியை ஏற்படுத்த முடியுமா என்பதைப்பற்றி ஆராய வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அதற்கடுத்தபடியாக, தஞ்சாவூர் ஜில்லாவைப் பொறுத்த வரையில், அங்கு வைக்கோல், மூங்கில், கரும்பு சக்கை அதிகமான அளவில் கிடைக்கின்றன, அதைக்கொண்டு பேப்பர் கார்ட் போர்ட் தயாரிக்கலாம் என்று தெரிகிறது. ஆகவே இதற்கான ஒரு பாக்டரியை அங்கு ஏற்படுத்த முடியுமா என்பதைப்பற்றியும் அதி தீவிரமாக ஆலோசனை செய்து பார்க்கும்படி கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக, நம்முடைய ராஜ்யத்தில் பெரிய நீர்ப் பாசனத் திட்டங்கள் எல்லாம் முடிந்து விட்டது. இப்போது பரம்பிக்குளத் திட்டம், ஆரணியாறுத்திட்டம் இவைகள் எல்லாம் சீக்கிரத்திலேயே நடைபெறும் என்று எதிர்பார்க்கலாம். ஆனல் அதே சமயத்தில் நம்முடைய மாநிலத்தைப் பொறுத்தவரையில் 33,000 குளங்கள் 22 லட்சம் ஏக்கர்களுக்கு நீர்பாசன வசதி செய்து கொடுக்கிறது. இந்தக் குளங்களை எல்லாம் சரியான முறையில் மராமத்து செய்ய வேண்டுமென அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன். தஞ்சாவூர் ஜில்லாவைப் பொறுத்த வரையில் 2,000 குளங்கள் இருக்கின்றன. அங்கிருக்கின்ற 50 ஆயிரம் ஏக்கர்களுக்கு இந்தக் குளங்கள் மூலமாகத்தான் நீர்பாசன வசதி செய்யப்படுகிறது. இந்தக் குளங்களை எல்லாம் சரியான முறையில் மராமத்து செய்ய வேண்டும். எனவே ராஜ்யத்தில் குளங்கள் மராமத்துக்காக மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 25 கோடி ரூபாய் ஒதுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, மொழிப் பிரச்னையைப்பற்றி ஒரு சில வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன். இதைப்பற்றி இங்கு அதிகமாக பேசப்பட்டது. இதில் என்னுடைய கருதது என்ன வென்ருல் மொழிப்பிரச்னை என்பது எல்லோருக்கும் பொதுவான ஒரு பிரச்னையாகும். இந்தப் பிரச்னை ஒரு கட்சிக்கு மட்டுந்தான் சொந்தமானது என்று நினைப்பது தவருன கருத்தாகும். ஆகவே மொழிப்பிரச்னை தங்களுடைய கட்சிப்பிரச்னையாக வைத்துக் கொண்டு வாதாடுவது அவ்வளவு நல்லதல்ல. இந்தப் பிரச்னையை வைத்துக்கொண்டு வாதாடுகிற கட்சியை எடுத்துக் கொண்டால் அவர்கள் ஏன் அதை மட்டும் எடுத்துவைத்துக் கொண்டு வாதாடுகிருர்கள் என்ருல் அவர்களுக்கு சொல்வதற்கு இப்போது எதுவும் இல்லை. அதனுல்தான் இந்த இந்தி பிரச்னையை எடுத்துக்கொண்டார்கள். எதையாவது அரசாங்கம் சொன்னுல் அதை எதிர்த்து ஏதாவது சொல்ல வேண்டும் என்பதைத்தான் நோக்கமாக கொண்டிருக்கிருர்கள்.

10th August 1960] [Sri R. Subramaniam]

இரண்டாவது திட்டத்திற்கு 151 கோடி என்றிருந்தால் அது போதாது இன்னும் அதிகம் இருக்கவேண்டும் என்று சொல்லு வார்கள். இப்போது 300 கோடி ரூபாய்க்கு திட்டமிடப்பட் டிருக்கிறது என்று சொன்னல் அது போதாது குறைந்தது 1,000 கோடி ரூபாய்க்காவது திட்டங்கள் இருக்கவேண்டும் என்று சொல்வார்கள். அதே சமயத்தில் நாம் ஏதாவது ஒரு திட்டத்திற்கு அதிகமான ரூபாய் வேண்டும் என்று கேட்டால் அதைக் குறைக்கவேண்டும் என்று சொல்வார்கள். உச்சவரம்பு விதிப்பதில் 30 ஏக்கர் என்று நிர்ணயித்தால் அதைக் குறைக்க வேண்டும் என்று சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். ஏதாவது சர்க்கார் சொல்லுவதையே மாற்றிச்சொல்லிக் கொண்டிருக்க வேண்டும் என்ற எண்ணமே தவிர வேறு எதுவுமில்லை. இது அவ்வளவு நல்லதல்ல. நமது நிதி அமைச்சர் அவர்களும், முதல் மந்திரி அவர்களும், 1965-க்குப் பின்னலும் இந்தியும், இங்கிலீஷும் அரசாங்க பாஷையாக இருக்கவேண்டும் என்று நல்ல முறையில் மத்திய அரசாங்கத்தோடு வாதாடி அவர்களை ஒப்புக்கொள்ளச் செய்திருக்கிறார்கள். இதைப்பற்றி நேருஜி அவர்களும் செப்டம்பர் 4-ம் தேதி உரை நிகழ்த்தியிருக்கிறார்கள். இவ்வளவு இருந்தும் அவர்கள் என்ன சொல்லுகிறார்கள் என்றால், நமது அமைச்சர்களின் கையாலாகாத்தனத்தின் காரணமாகத் தான் இவ்விதம் வந்து விட்டது என்று சொல்லிக்கொண்டிருக் கிறார்கள். நான் கேட்கிறேன், 1947-ம் வருஷத்தில் சுதந்திரம் வந்த காலத்தில் 1 லட்சம் கிலோ வாட்டாக இருந்த மின்சாரம் இப்போது 5,72,000 கிலோவாட்டாகப் போகிறது என்று சொன்னல், இது நமது அமைச்சர்களின் கையாலாகத்தனமா என்று கேட்கிறேன். அதற்கு அடுத்ததாக, கல்வியை எடுத்துக் கொண்டால் எழுதப்படிக்கத் தெரிந்தவர்கள் 10 சதமானமாக இருந்தது, இப்போது 40 சதமானமாக உயர்ந்திருப்பது கையாலாகாத்தனமா என்று கேட்கிறேன். அடுத்தபடியாக 152 கோடி ரூபாய்க்கு இருந்த நமது இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தை 181 கோடி ரூபாய் என்ற அளவில் உயர்த்தியது கையாலாகாத்தனமா என்று கேட்க விரும்புகிறேன். இதை நான் ஏன் சொல்லுகிறேன் என்றால், ஏதாவது சர்க்காருக்கு எதிராக சொல்லிக்கொண்டிருக்க வேண்டும் என்று சொல்லு வதற்காகத்தான் இதைச் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். வெளியிலும் இதே தான் பேசிக்கொண்டிருக்கிறார்கள், இங்கே யும் அதைத்தான் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். ஆகவே இந்த மொழிப்பிரச்னை என்பது ஒரு கட்சிக்கு மட்டும் சொந்த மான பிரச்னை அல்ல, எல்லா மக்களுடைய பிரச்னைதான் என்பதை சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அத்துடன் கூட நேருஜி அவர்கள் பார்லிமெண்டில் பேசியபோது இந்தி தெரியாத ராஜ்ய மக்களில், சென்னை ராஜ்யத்திலுள்ள மக்கள் தான் அதிகமாக இந்தியைக் கற்றிருக்கிறார்கள் என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். அப்படியாயின் இவ்வளவு படித் தவர்கள் யார்? ஏற்கனவே ஓரளவுக்கு வாழ்க்கையில் நல்ல வசதியில் இருப்பவர்களின் குழந்தைகள்தான் இந்தியை கற்றுக் கொள்ள முடியும். ஆனால் நாட்டிலுள்ள பாமரர்கள் இவர் களுடைய சொல்லைக் கேட்டு இந்தியை கற்றுக்கொள்வதில்லை.

[Sri R. Subramaniam] [10th August 1960

நாளைக்கு இந்தி இந்த நாட்டில் வந்தால் நல்ல வசதியுள்ளவர்கள் எல்லாம் தங்களை தயார் செய்து வைத்துக்கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கு அப்போது எந்தவிதமான கஷ்டமும் ஏற்படாது. இந்தியை கற்காதவர்களுக்குத்தான் கஷ்டங்கள் ஏற்படும். ஆகவே நாளைக்கு ஏதாவது மாறுதல்கள் ஏற்பட்டால் அதனால் பாதிக்கப்படுபவர்கள் இந்த நாட்டிலுள்ள பாமரர்களே. (மணியடிக்கப்பட்டது).

• SRI M. KARUNANITHI: சட்டமன்றத் தலைவர் அவர்களே, மேன்மை தங்கிய கவர்னர் அவர்களுடைய உரையைப்பற்றி என்னுடைய கருத்துக்களை சொல்லுகின்ற நிலையில் நான் இங்கு நின்று கொண்டிருக்கின்றேன். கவர்னர் அவர்களுடைய உரை இங்குள்ள ஆளும் கட்சி உறுப்பினர்களால் நன்றி நோக்குடன் பாராட்டப்பட்டது என்றாலும் எதிர்க்கட்சிகளால் போற்றுகின்ற அளவில் இந்த உரையில் இந்த நாட்டு மக்களுக்குத் தேவைப்படுகின்ற பல பல திட்டங்கள் இல்லை என்பதை சுட்டிக்காட்டவும், இந்த உரையில் போதுமான அளவு திருப்தி இல்லை என்பதை எடுத்துக் காட்டவும் நாங்கள் கடமைப்பட்டிருக்கிறோம் என்ற முறையில் இங்கு எடுத்துச் சொல்லப்படுகின்ற கருத்துக்களை எடுத்துக் கொள்ள வேண்டுமே தவிர கவர்னர் அவர்களுடைய உரையை வேண்டுமென்றே புறக்கணித்து மறுத்துப் பேச வேண்டும் என்பதல்ல எங்கள் நோக்கம் என்பதை அமைச்சர் பெரு மக்களுக்குத் தெரிவித்துக்கொள்கிறேன். நாங்கள் சொல்லு கின்ற கருத்துக்களில் இருக்கின்ற நல்லெண்ணத்தை ஏற்றுக் கொள்ள வேண்டுமென்றும் கேட்டுக்கொள்கிறேன். கவர்னர் அவர்களுடைய உரையில் அண்மையில் நடைபெற்ற மத்திய சர்க்கார் ஊழியர்களுடைய வேலைநிறுத்தத்தைக் குறிப்பிட்டு அந்த வேலைநிறுத்தம் பொது மக்களுடைய ஆதரவாலும் போலீசாருடைய நல்ல நடவடிக்கைகளினாலும் எந்த அளவுக்கு சமாளிக்கப்பட்டது என்பதை எடுத்துக் கூறியிருக்கிறார்கள். இங்கு பேசிய கனம் உறுப்பினர்களில் சிலர் இந்த வேலை நிறுத்தத்தைத் தோற்கடிக்கின்ற அளவுக்கு பொதுமக்கள் தாங்களாகவே ஊழியர்களாக இருந்துக்கொண்டு அதை சமாளித்தார்கள் என்பதைப் பெருமையோடு குறிப்பிட்டார்கள். நான் இந்த நேரத்தில் குறிப்பிட விரும்புவது வேலை நிறுத் தத்தைச் சமாளிப்பதற்காக நியமிக்கப்பட்டவர்கள் நிரந்தர மாகவே அந்தந்த வேலைகளில் ஒரு வேளை நியமிக்கப்பட்டிருந் தால் நிச்சயமாக கொஞ்ச நாட்களில் இப்போது வேலைநிறுத்தம் செய்தவர்கள் என்ன கோரிக்கைகளை எல்லாம் கேட் டார்களோ அதைவிடக் கூடுதலாக சில கோரிக்கைகளை ஏன் கேட்கமாட்டார்கள் என்பதைச் சிந்தித்துப் பார்க்கவேண்டும். கோரிக்கை அளவில், தேவை அளவில் அவர்களுடைய போராட்ட முறை அல்லது அவர்களுடைய வேலைநிறுத்த முறை எப்படியிருந்தாலும் அவர்களுடைய கோரிக்கையின் அடிப்படை கொள்கை என்ன என்பதைச் சற்று ஆராய்ந்து பார்த்து அதற்கான நடவடிக்கை எடுக்க சர்க்கார் தவறி விட்டது என்பதை நாம் இந்த நேரத்தில் நினைவுபடுத்திக்

10th August 1960] [Sri M. Karunanithi]

கொள்ள வேண்டியது அவசியமாகும். அதைச் செய்யத் தவறி விட்டோம் என்று உள்ளத்தில் தெரிந்திருந்த போதிலும் இனிமேலாவது வேலைநிறுத்தத்தில் ஈடுபட்ட ஊழியர்களை பழி வாங்குகின்ற முறையைச் செய்துகொண்டு வராமல், அவர்களுடைய குழந்தைகள், குட்டிகள் அவர்களுடைய ஏழை குடும்பங்கள் நல்லமுறையில் மறுமலர்ச்சியடைந்து வாழக் கூடிய வகையில், அவர்கள் மீது எந்த விதமான நடவடிக்கையும் எடுக்காமல் இருக்க வேண்டும் என்பதை இந்த அவையில் குறிப்பிட விரும்புகிறேன்.

மொழிப்பிரச்னையைப்பற்றி கவர்னர் அவர்கள் தம்முடைய உரையில் குறிப்பிடும்பொழுது நேரு அவர்களுடைய வாக்குறுதியும், ஜனாதிபதியினுடைய உத்தரவும் ஒன்றாக இருக்கிறது என்று சூசகமாக குறிப்பிட்டு மொழிப்பிரச்னை தொல்லை குறைந்து விட்டது என்று குறிப்பிட்டிருக்கிறார். இதற்குப் பதிலாக இந்த வாசகம் எப்படி இருந்திருக்கவேண்டும் என்று நான் கருதுகிறேன் என்றால் "1959-ம் ஆண்டு செப்டம்பர் 4-ம் நாள் நமது பிரதம மந்திரி பேசிய பேச்சும், அரசியல் அமைப்பின் 344-வது பிரிவும் ஒன்றுக்கொன்று முரணாயிருந்ததினால், நிலைமையை விளக்குகின்ற முறையில் மீண்டும் குடியரசுத் தலைவர், தலைமை அமைச்சர் நேரு, உள் நாட்டு அமைச்சர் பந்த் இவர்கள் அறிக்கைகளை தந்து உறுதி மொழிகள் அளிப்பதற்குக் காரணமாயிருந்த திராவிட முன்னேற்றக்கழகத்தை பாராட்டுகிறேன்" என்று இப்படி கவர்னர் அவர்களுடைய உரை இருந்திருக்குமானால், அதைப்பார்த்து நான் சந்தோஷப்படுவேன். வேலைநிறுத்தத்தை சமாளித்ததாகக் கூறப்படும் பொது மக்களைப் பாராட்டுவதற்கு கவர்னர் அவர்களுடைய உரையில் எப்படி இடம் கிடைத்ததோ, அதேபோன்று மொழித் தொல்லை நீங்கியதற்குக் காரணமாயிருந்த எதிர்க்கட்சியினரை பாராட்டியிருந்தால் உள்ளபடியே நாங்கள் பெருமைப்பட்டிருப்போம். ஆனால் நேரு அவர்கள் தந்த உறுதி மொழியும், மத்திய அரசவையிலிருந்து வந்த உறுதிமொழியும் போதுமானதுதானா இதை வைத்துக்கொண்டு வெற்றி முரசு தட்டுவது சரிதானா என்று கேட்டால்—கனம் சபாநாயகர் மூலமாக நான் இந்தச் சபைக்குக் கூறிக்கொள்கிறேன்—இத்தகைய உறுதிமொழி வேண்டுமென்று திராவிட முன்னேற்றக் கழகம் கேட்டதற்குக் காரணமே, நாட்டிலே கொலை நடந்தால் கொலையைச் சமாளிக்க—கொலையைத் தடுக்க—ஒரு சட்டம் வேண்டுமென்று சொல்லக்கூடிய முறையில் தான் நாங்களும் உறுதிமொழி கேட்டோம். சட்டம் வந்த காரணத்தினால் கொலை தடுக்கப் பட்டு விடுமா என்று கேட்கிறார்கள். நடக்கக் கூடும்—இல்லை என்று மறுக்கவில்லை. அதற்காக சட்டமே வரக் கூடாது, கொலை நடந்தால் பார்த்துக்கொள்ளலாம் என்று இருக்க முடியாது. இந்த முறையில் சிலர் நிதி அமைச்சர் அவர்களைக் கூட குற்றம் சாட்டி இந்த அவையில் பேசியதைக் கேட்டேன். கொலையைத் தடுக்கும் அளவுக்கு முதற்படியாக சட்டம் வந்தது போல இந்த உறுதிமொழி வந்திருக்கிறது. இதைத் தான் எங்கள் வெற்றி என்று எண்ணுகிறோம்—பெருமித

மடைந்திருக்கிறோம். "நிச்சயமாக நாட்டில் நடக்கின்ற தமிழ் கொலை தடுக்கப்பட்டு விட்டதா" என்று கேட்டால், "அல்ல" என்று இந்த நேரத்தில் எடுத்துக்காட்ட விரும்பு கிறேன். இங்கே பேசிய திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்த நண்பர்கள் பேசும்போது, நமது மாநிலத்திலுள்ள தாணுக்காரர்களுக்குப் பயிற்சி கொடுப்பதிலும், அற நிலைய நிர்வாகங்களிலும் எந்த அளவுக்கு இந்தி திணிக்கப்படுக்கிறது—பயன்படுத்தப்படுகிறது—என்று குறிப்பிட்டுள்ளார்கள். நான் மிக மிக வருத்தத்தோடு இதைச் சொல்ல விரும்புகிறேன். உறுதிமொழி கொடுத்துவிட்டு, டில்லியிலிருந்து வந்து தமிழகத்து மண்ணிலே உலவும் நேரத்தில், நாளைய தினம் நடைபெறவிருக்கின்ற சுதந்திர விழாவினையொட்டி ஜனாதிபதி அவர்களின் சார்பில் வந்துள்ள அழைப்பில் ஒரு புறத்தில் பார்த்தால் ஆங்கிலத்திலும், மற்றொரு புறத்தில் பார்த்தால் இந்தியிலும் அச்சிடப்பட்டு அழைப்பு அனுப்பப்பட்டிருக்கின்றது. (அழைப்பிதழைக் காட்டி) இந்த அழைப்பு ஆங்கிலத்திலும் தமிழிலும் இருந்தால் போதாதா? அந்தச் சட்ட மன்றத்திலுள்ள உறுப்பினர்களில் பலர் கேள்வி நேரத்தில் முதற் கேள்விக்குக் கொடுக்கப்படும் பதிலை ஆங்கிலத்தில் தராதீர்கள், தமிழில் தந்தால் தான் எங்களால் துணைக் கேள்விகள் கேட்க முடியும் என்று சொல்லக் கூடியவர்கள் இருக்கிறார்கள் என்று இத்தகைய சட்ட மன்ற உறுப்பினர்கள் இதை யாரிடத்திலாவது கொண்டு போய்க் காட்டி, இது என்ன என்று கேட்கும் அவல நிலை இருக்குமானால், ஜனாதிபதியின் உறுதிமொழியை இந்த மன்றமோ, அல்லது இந்த அமைச்சரவையோ எப்படி காப்பாற்றப் போகிறது? எனவே இதனை சுதந்திரத் திருவிழாவிற்கு வரவேற்பதற்காக காகிதத்தில் தரப்பட்ட அட்டை என்று கருதாமல், நமது மான உணர்ச்சியை உறிஞ்சுகிற அட்டையாக இதனை நான் கருதுகிறேன். உள்ளபடியே மொழிப் பிரச்னையில் தீர்வு காணவேண்டுமென்றால் அரசியல் சட்டத்திலே மொழிபற்றிய பிரிவுக்கு திருத்தம் செய்தாக வேண்டும். அரசியல் சட்டம் திருத்தப்படும் வரையில் எங்கள் போராட்டம் ஓயாது, ஓயாது. மறைமுகமாக இந்தியைத் திணிப்பதை திராவிட முன்னேற்றக் கழகம் கவனித்துக் கொண்டு வருகிறது. இந்த வெற்றியில் திளைத்து விடாமல் இந்தி ஆதிக்கத்தை முழு மூச்சோடு எதிர்த்தே நிற்போம் என்று அமைச்சர்களுக்கு நான் தாழ்மையுடன் தெரிவித்துக்கொள்ள விரும்பு கிறேன்.

கவர்னர் உரையில் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் பற்றி குறிப்பிட்டு விட்டு இதைப் பற்றி அங்கத்தினர்கள் தங்கள் கருத்துக்களைத் தெரிவித்தால் பாராட்டத் தக்கதாக இருக்கும் என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். கருத்துக்களைக் கூறத் தயார் தான். தரப்பட்ட கருத்துக்கள், இந்த மன்றத்திலே எங்களால் எடுத்துச் சொல்லப்பட்ட கருத்துக்கள், சிறப்புக் குழுக்களை அமைத்து எங்கள் தலைவர் அவர்கள் அழைக்கப்பட்டு பேசும் போது அவர்களால் தரப்பட்ட கருத்துக்கள் உள்ளபடியே மரியாதையோடு, மகிழ்வோடு ஒப்புக்கொள்ளப்படுகிறதா?—இல்லை. கமிட்டிகளில் பேசப்படுவது, கமிட்டிகளில் தெரிவிக்கப்

10th August 1960] [Sri M. Karunanithi]

படும் கருத்துக்கள் அம்பலத்திற்கு வரக் கூடாது என்பது மரபு, மாண்பு. இத்தகைய மரபையும் மாண்பையும் மீறி, நமது கண்ணியம் மிகுந்த, நேர்மை கொண்ட நிதி அமைச்சர் அவர்கள், செங்கற்பட்டு மாவட்டத்தில் நடந்த ஒரு கூட்டத்தில் அறிஞர் அண்ணு அவர்கள் திட்டக் குழுவில் தந்த யோசனையைப் பற்றி கூறி, அதையடுத்து ஒரு பண்டாரக் கதையைச் சொல்லி, அண்ணுதுரை ஒரு பண்டாரம் என்ற முறையில் . . .

THE HON. SRI C. SUBRAMANIAM: உங்கள் பத்திரிகையில் தான் முதலில் "அண்ணு 1,000 கோடி கேட்டார்" என்று கொட்டை எழுத்தில் போட்டுக் கொண்டீர்கள். முதலில் அம்பலத்திற்குக் கொண்டு வந்தது யார் என்று கேட்டால் கனம் அண்ணுதுரை அவர்கள் தான் அதை அம்பலத்திற்குக் கொண்டுவந்தார்கள்.

SRI C. N. ANNADURAI: எல்லாப் பத்திரிகைகளிலும் இதைப் பற்றி வந்த அளவுக்குத்தான் எங்கள் பத்திரிகையிலும் வந்தது. நான் குறிப்பிட்ட விஷயங்களைப் பற்றி வேறு ஒன்றும் அதிகமாக எங்கள் பத்திரிகையில் வந்துவிடவில்லை.

THE HON. SRI C. SUBRAMANIAM: பத்திரிகை குறிப்புக் கொடுத்ததுகூட நாங்கள் அல்ல—தாங்கள் தான்.

ஸ்ரீ. ஸி. என். அண்ணுதுரை எழுந்தார்—

MR. SPEAKER: கனம் அங்கத்தினர் அண்ணுதுரை அவர்களும் கனம் அமைச்சர் அவர்களும் இம்மாதிரி ஒருவர் மாறி ஒருவர் பேசிக்கொண்டிருந்தால் கனம் அங்கத்தினர் கருணுநிதி அவர்களின் நிலை என்ன ஆவது ?

SRI M. KARUNANITHI: இப்போது மட்டுமல்ல பல ஆண்டுகளாகவே திராவிட முன்னேற்றக் கழகம், வடநாட்டுக் காரர்களால் தென்னகம் வஞ்சிக்கப்படவில்லை என்று நீங்கள் நிரூபிக்க வேண்டுமானுல், நாட்டுக்குத் தேவையான வேலைகள் 200 கோடியில், 300 கோடியில் நிறைவேருது, அயிரம் அல்லது இரண்டாயிரம் கோடிக்குத் திட்டம் தீட்டி நிறைவேற்ற வேண்டுமென்று சொல்லி வருகிறது. திட்டங்களைப் பற்றிப் பேசுவதற்காகக் கூடிய குழுவில் அண்ணு அவர்கள் தெரிவித்த திட்டங்கள் நையாண்டி செய்யக் கூடிய திட்டங்கள்தாஞ என்று யோசித்துப் பார்க்க வேண்டும். அண்ணு அவர்கள் என்னென்ன கூறியிருக்கிருர்கள் ? பணக்காரர்களிடமிருக்கக் கூடிய பணத்தை பல வழிகளில் பெறவேண்டுமென்று கேட்டுக் கொண்டார்; கவனிக்கப்படாமல் இருக்கக் கூடிய தரிசு நிலங்களை உடனடியாகக் கவனித்து தானியங்கள் விளைவிக்க ஏற்பாடு செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொண்டார்; சூரிய வெளிச்சத்திலிருந்து மின்சாரம் உற்பத்தி செய்யவேண்டுமென்று சொல்லியிருக்கிருர்; நாட்டின் முன்னேற்றத் திட்டங்களில் ராணுவத்தைப் பயன்படுத்த வேண்டுமென்று சொன்னுர்; அணு சக்தி உலை கட்டியாக வேண்டுமென்று கூறியிருக்கிருர்;

[Sri M. Karunanithi] [10th August 1960

கைத்தறித் துணியை எல்லா நாடுகளுக்கும் ஏற்றுமதி செய்ய வேண்டுமென்றார். புதிய, புதிய தொழிற்சாலைகளையெல்லாம் ஆரம்பிக்க நடவடிக்கைகள் எடுக்க வேண்டுமென்றார்; சேலத்தில் உருக்குத் தொழிற்சாலையும், அலுமினியத் தொழிற்சாலையும் அமைக்கப்பட வேண்டுமென்று சொன்னார்; முந்திரியிலிருந்து பிளாஸ்டிக் தயாரிக்க வேண்டுமென்று கூறினார்; காப்பி, டீ, ரப்பர் தோட்டங்களை தேசீயமயமாக்கி வருவாயை அதிகரித்துக் கொள்ள வேண்டுமென்றார்; நீலகிரியில் ஒரு பால் பண்ணை அமைக்க வேண்டுமென்று சொன்னார்; தூத்துக்குடியிலிருந்து சென்னைக்கு இரட்டை ரயில் பாதை போட வேண்டுமென்று கூறினார்; தூத்துக்குடி துறைமுக அபிவிருத்தித் திட்டம் நிறைவேற்றப்பட வேண்டுமென்று சொன்னார்; சேது சமுத்திரம் திட்டம் உடனடியாக நிறைவேற்றப்பட வேண்டுமென்று கேட்டுக் கொண்டார்; மாங்கனீஸ் தாதுவை ஏற்றுமதி செய்வதை நிறுத்தி அதை இங்கேயே பயன்படுத்த வேண்டு மென்று கூறினார். ஆக, இத்தகைய உயர்ந்த திட்டங்களை அண்ணா அவர்கள் எடுத்துச் சொன்னார். ஆனால் அவர் பண்டாரம் என்று பழிக்கப்பட்டார். அவராவது பழிக்கக் கூடிய அளவுக்கு திட்டம் தந்தார் என்றால், அடுத்த திங்களே லோகநாதன் கமிட்டியார் கேட்டிருக்கிறார்கள் ஆயிரம் கோடி அல்ல—இரண்டாயிரம் கோடி. ஆயிரம் கோடி ரூபாய் கேட்டதற்கே பண்டாரம் என்று சொன்னபோது, 2,000 கோடி ரூபாய் கேட்ட அவரை நல்ல வேளையாக இரட்டைப் பண்டாரம் என்று அமைச்சர் சொல்லவில்லை—தப்பித்துக் கொண்டார். இன்றை நிலையில் இந்தத் திட்டங்களைப் பற்றி ஆளுங் கட்சி உறுப்பினர்கள் வெளியிலே போய் என்ன சொல்லுவார்களோ என்றுகூட நாங்கள் அஞ்சுகிறோம். இப்படிப்பட்ட மாமன்றத்தில் பேசியதை வைத்துக்கொண்டு வெளியிலே போய் ஆளுங் கட்சிக்காரர்கள் "அண்ணா கசாப்புக் கடை வைக்கச் சொல்லுகிறார்" என்றும், "கருணாநிதி கடல் பாசியில் அல்வா கிண்டச் சொல்கிறார்" என்றும் நையாண்டி செய்வார்கள் என்று சபா நாயகர் மூலமாக இந்த அமைச்ச ரவைக்கு நான் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். 1971-க்குள் நமது வாழ்க்கைத் தரம் உயர, 230 ரூபாய் நபர் வருமானம் இருக்கக் கூடியது 325 ரூபாய் அளவுக்கு அதிகரிக்க, 20 லட்சம் பேர்களுக்கு வேலை வாய்ப்பு கொடுக்க 2,000 கோடி ரூபாய் வேண்டும் என்று டாக்டர் லோகநாதன் குழு சிபாரிசு செய்திருக்கிறது. ஒரு பழமொழி—சட்டியில் இருந்தால் தானே அகப்பையில் வரும் என்று—சொல்வார்கள். சபாநாயகர் மூலமாக நான் இதைத் தெரிவித்துக் கொள்கிறேன், மத்திய சர்க்கார் சட்டியில் 10,000 கோடி ரூபாய் இருக்கிறது. அதிலே உங்கள் அகப்பையில் 1,000 கோடி வரட்டும். 10,000 கோடியில் ஒன்றும் அகப்பையில் வரவில்லை என்றால் உங்கள் அகப்பையில் காம்பு இருக்கிறது, ஆனால் கொட்டாங்கச்சி இல்லை என்று ஆகிறது—உங்களுக்கு அதிகாரம் இல்லை என்று பொருள் படுகிறது. நீங்கள் அதிகாரம் பெறுங்கள். நீங்கள் நல்லவர்கள் தான்—வல்லவர்கள் அல்ல வட நாட்டோடு பேசி சண்டை போட்டுப் பெறுவதில் என்று நான் வருத்தத்தோடு கூறிக்

10th August 1960] [Sri M. Karunanithi]

கொள்ளுகிறேன். தூத்துக்குடி துறைமுகத்தைப் பற்றி நேற்று இங்கே பேசப்பட்டது. அமைச்சர் அவர்கள் உறுதிமொழி அளித்திருக்கிறார்கள். தூத்துக்குடி பக்கம் போகும் போது தானே இது ஞாபகம் வருகிறது. டில்லிக்குப் போகும்போது நினைவு வரவேண்டாமா ? தூத்துக்குடிக்குப் போகும்போது அங்குள்ள மக்களுக்கு ஆசை காட்டிவிட்டு டில்லிக்குப் போகும் போது மறந்துவிடுவானேன்? அமைச்சர் அவர்கள் உறுதி மொழியை நிச்சயமாகக் காப்பாற்ற வேண்டும், நேரு அவர்களுடைய உறுதிமொழியைப் போல, பந்த் அவர்களுடைய உறுதிமொழியைப் போல, கனம் சுப்பிரமணியம் அவர்களும் அங்கு இருந்து உறுதிமொழி அளிக்கத் தகுதி படைத்தவர் என்ற காரணத்தினால் இந்த உறுதிமொழியைக் காப்பாற்ற வேண்டுமென்று கேட்டுக்கொண்டு, இறுதியாக கனம் அங்கத்தினர் திரு. ப. உ. சண்முகம் அவர்கள் கூறியது போல நாட்டுக்கு தமிழ் நாடு என்று பெயர் வைக்கவில்லை, உதகையி லுள்ள ஒரு வீட்டுக்கு தமிழகம் என்று கனம் சுப்பிரமணியம் அவர்கள், நாட்டுக்கு வைக்க வேண்டிய பெயரை ஒரு வீட்டுக்கு வைத்திருக்கிறார். தமிழ் நாடு என்று பெயர் வைப்பதற்காக சங்கரலிங்கனாரின் பிணம் வீழ்ந்தது. உங்களுக்கு ஒரு எழுத்துக்கு ஒரு பிணம் விதம் வேண்டுமென்று சொன்னால தயாராக இருக்கிறோம் 5 பிணங்கள் தருவதற்கு. எழுத்துக்கு எத்தனை பிணம் வேண்டுமானாலும் தரத் தயாராக இருக்கிறோம், தமிழ் நாடு என்று பெயரிட வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

ஜனாதிபதி அவர்கள் தானாக தனது சம்பளத்தைக் குறைத்துக் கொண்டு வழிகாட்டியாக இருக்கிறார். அந்த முறையைப் பின் பற்றி, கவர்னர் அவர்களும் தான் குறைத்துக்கொண்ட சம்பளக் கணக்கை நம்மிடம் தெரிவிப்பார்—தெரிவிக்க வேண்டும் என்று கூறிக் கொண்டு முடித்துக் கொள்கிறேன், வணக்கம்.

Sri P. G. Karuthiruman: சபாநாயகர் அவர்களே, கவர்னர் பெருமான் அவர்கள் உரையில் இதுவரை கண்டிராத, கேட்டிராத அளவுக்கு நாட்டிலே எவ்வளவு தூரம் அபிவிருத்தி ஏற்பட்டிருக்கிறது என்பதைச் சாங்கோபாங்கமாகக் குறிப்பிடப் பட்டிருக்கிறது. ஒரு நாட்டினுடைய சுபிட்சம் எங்கே 12-00 noon.
இருக்கிறது என்றால், சட்ட சபையிலோ, பட்டினங்களிலோ, இருக்கும்படியான தார் ரோடுகளிலோ, மெர்க்குறி விளக்கு களிலோ இல்லை. கிராமத்தில் இருக்கும்படியான ஏழை விவசாயிகளுடைய வயல்களில் இருக்கும் தானிய மணியைப் பொறுத்துத்தான் நாட்டின் சுபிட்சம் இருக்கிறது. அதற்கு ஏற்ப இன்றைய தினம் திட்டங்கள் வகுக்கப்பட்டிருக்கின்றன. அதற்கு ஏற்ப கவர்னர் பெருமானுடைய உரை அமைந்திருக் கிறதா என்றால், நிச்சயமாக அவ்வாறு அமைந்திருக்கிறது என்பது அதைக் கவனித்துப் பார்த்தால் தெரியும். ஒரு நாட்டின் முன்னேற்றம் வயல்களிலே நாற்றை நடுகிற பெண்மணிகளின் வளையில் அசைவிலேதான் இருக்கிறதேயொழிய, செகரிடேரியட் உத்தியோகஸ்தர்கள் கையிலோ அல்லது அவர்கள் கையில்

உள்ள பேனு முனையிலோ இல்லை. உழைப்பின் தரம் குறையு மானால் நாட்டிலே சுபிட்சம் இருக்காது என்பதை எல்லோரும் உணர வேண்டும். எதிர்க் கட்சிக் காரர்கள் இந்த நாட்டிலே அபிவிருத்தி ஒன்றும் இல்லை என்று 13 வருட காலமாக சுதந்திரம் பெற்ற பின் ஒரு முன்னேற்றமும் இல்லை என்று சொல்லிவருகிறார்கள். இந்த நாட்டிலே ஐந்தாண்டுத் திட்டங் களின் மூலமாக நிறைவேற்றப்பட்டு வருகிற திட்டங்களைப் பார்த்து ரஷ்ய தேசத்துத் தலைவர்கள் எல்லாம் கூடப் போற்றும்படியான நிலை இருக்கும் போது, "இதை விட ஒரு சிறந்த திட்டத்தை உருவாக்க முடியாது" என்று சர்வதேச தலைவர்கள் எல்லாம் போற்றிப் புகழ்ந்திருக்கும்போது இவர்களுடைய சர்டிபிகேட்டைப் பற்றி நாம் கவலைப்பட வேண்டிய அவசியமேயில்லை.

எதிர்க்கட்சி உறுப்பினர் பேசியபோது "எங்களால்தான் இந்தித் திணிப்பு பற்றிய ஜனாதிபதி அறிக்கையால் இந்தி பேசாத மக்கள் பாதிக்கப்பட மாட்டார்கள்" என்று உறுதி மொழி கிடைத்திருக்கிறது என்று சொன்னார். அவர்களுடைய சரணாகதி படலத்தைப் பற்றி நாம் ஒன்றும் சொல்ல வேண்டிய அவசியமே இல்லை. எல்லாம் வெளிப் பேச்சே தவிர வேறு ஒன்றுமில்லை. அப்போது "நான்சென்ஸ் நேரு" என்று சொன்னவர்கள் இப்போது "ஜனநாயக வாதி நேரு" என்று சொல்லுகிறார்கள். இதைவிட ஒரு சரணாகதி எப்படி இருக்க முடியும்?

SRI M. KARUNANITHI: "ஆன் எ பாயிண்ட் ஆப் ஆர்டர்". "நான்சென்ஸ் நேரு" என்று நாங்கள் சொல்ல வில்லை. அவர்தான் இந்த நாட்டவரைப் பார்த்து "நான்சென்ஸ்" என்று சொன்னார்.

SRI P. G. KARUTHIRUMAN: இந்த சட்டசபையில் சொல்லவில்லை.

SRI C. N. ANNADURAI: "நான்சென்ஸ்" என்று சொன்ன நேருவுக்குத்தான் கறுப்புக் கொடி காட்டப்பட்டது.

THE HON. SRI C. SUBRAMANIAM: நேரு அவர்கள் நான்சென்ஸ் என்று சொன்னது தி.மு.காவைப்பற்றி. அது சரி என்று . . .

SRI P. G. KARUTHIRUMAN: நேரு அவர்களுடைய கடிதத்தைப் பரிசீலித்த பிறகு ஜனாதிபதி அவர்களுக்குக் கறுப்புக்கொடி காட்டப்போவதில்லை என்று முடிவு செய்தார்கள். ஜனாதிபதி அவர்கள் நம்முடைய வாக்குகளை யெல்லாம் பெற்றுத்தான் பதவிக்கு வந்திருக்கிறார்கள். அவர் எல்லா ஜனங்களுடைய வாக்குகளையும் பெற்றவர். நமது ஜனாதிபதி அந்நியர், தமிழ் நாட்டுக்கு சம்பந்தம் இல்லாதவர் என்று சொல்லுகிறவர்கள் அவர்களுடைய அறியாமையைத் தான் வெளிப்படுத்திக் கொள்ளுகிறார்கள்.

10th August 1960] [Sri P. G. Karuthiruman]

அடுத்தபடியாக, " நாங்கள் கொடுத்த திட்டத்தைத்தான் சர்க்கார் செய்து வருகிறது " என்று சொல்லுகிறார்கள். " ஆங்கிலேயர்களுக்கு நாங்கள் அனுசரணையாக இருந்த காரணத்தால்தான் அந்த நாட்டுக்கு சுதந்திரம் கிடைத்தது " என்று இவர்கள் சொல்லுவார்கள். இப்படி அவர்கள் சொன்னாலும் நாம் ஆச்சிரியப்படத் தேவையில்லை. இதைப் பற்றிப் பொது மக்கள் தீர்மானம் செய்து கொள்ளுவார்கள்.

இன்றைக்கு நம்முடைய நாட்டின் முன்னேற்றத்தைக் கருதி பல திட்டங்களைப் போடுகிறோம். நாம் வகுக்கும் திட்டங்கள் எல்லாம் திட்டவட்டமான பொருளாதார அடிப்படையில் இருக்கவேண்டும். இதற்காகத்தான் நமது நாட்டில் உற்பத்தி செய்யப்படும் உணவுப் பண்டங்களின் விலை நிலையானதாக இருக்க வேண்டும் என்று கூறுகிறோம். நிரந்தரமான ஒரு விலை இருந்தாலொழிய, திட்ட வட்டமான விலை இருந்தா லொழிய திட்டங்கள் சரியானபடி நிறைவேற்ற முடியாது. நெய்வேலித் திட்டத்திற்கு 70 கோடி மதிப்புப் போட்டிருந்தோம். இப்போது அது 96 கோடியாக ஆகியிருக் கிறது. விலைவாசி ஏற ஏற திட்டங்களின் மதிப்பும் அதிகரிக்கத் தான் செய்யும். 20 வருடங்களுக்கு முன்பு உற்பத்தி செலவு ஒரு ஏக்கர் நன்செய் நிலத்திற்கு 30 ரூபாய் என்றால் இன்றைய தினம் ரூ. 300 ஆகிறது. இப்போது நான்கு அணு கூலி வாங்கிக்கொண்டு 8 மணி நேரம் வேலை செய்து வந்த விவசாயத் தொழிலாளர்கள் இன்று தொழிற்சங்கம் வைத்துக்கொண்டு ஒரு ரூபாய் கூலி வாங்கி 4 மணி நேரம் வேலை செய்யக்கூடிய ஒரு அவல நிலை வளர்ந்து கொண்டிருக்கிறது. நாலு அணுவுக்கு நாள் பூராவும் வேலை செய்து வந்த நிலை மாறி இன்றைய தினம் ஒரு ரூபாய் கூலி வாங்கிக் கொண்டு 4 மணி நேரம் கூட வேலை சரிவர செய்வதில்லை. விவசாய உற்பத்திச் செலவு அதிகமாகிவிட்டது. மாற்றுக்கட்சிக்காரர்கள் இத்தகைய தேசீய விரோதமான முறையில் நடந்து கொள்கிறார்கள்.

SRI C. N. ANNADURAI: விவசாயிகளுக்குக் கூலி வேண்டுமென்று கேட்பது தேசீய விரோதமான காரியம் என்று கனம் அங்கத்தினர் சொல்லுகிறார். விவசாயத் தொழிலாளர் களுக்குக் குறைந்த பட்சக் கூலி கிடைக்க வழி செய்து கொடுப் பதற்காக சட்ட பூர்வமான நடவடிக்கைகள் எல்லாம் எடுத்துக் கொண்டு இருக்கும்போது இதைத் தேசிய விரோதமானது என்று அங்கத்தினர் எந்தக் கருத்தில் சொல்கிறார் ?

SRI P. G. KARUTHIRUMAN: அவர்களுக்கு நல்ல முறையில் கூலி கொடுக்க வேண்டியதுதான், ஒரு ரூபாய் அல்லது $1\frac{1}{2}$ ரூபாய் கூடக் கொடுக்க வேண்டியதுதான். இந்த அளவுக்கு அவர்களுக்குக் கூலி கொடுக்கும்போது அரிசிவிலை ஏன் 10 அணுவாக இல்லையென்று கேட்டால் என்ன அர்த்தம் ? மத்திய சர்க்கார் ஊழியர்கள் ஸ்டிரைக் செய்தார்கள். இன்றைய தினம் ஒரு நடுத்தர மிராசுதாருக்கு, 5 ஏக்கர் உள்ள ஒரு மிராசுதாருக்கு ஒரு ஆண்டுக்கு கிடைக்கக்கூடிய

[Sri P. G. Karuthiruman] [10th August 1960

வருமானத்தைவிட மத்திய சர்க்காரில் நாலாந்தர ஊழியர் உத்தியோகத்தில் இருக்கக்கூடியவனுக்கு அதிக வருமானம் வருகிறது என்று நான் திட்டவட்டமாகச் சொல்ல முடியும். ஐந்து ஏக்கர் பூமி உள்ள விவசாயிகளுடைய நிலைமையைவிட இந்தச் சர்க்கார் ஊழியர்களின் நிலைமை நன்ருகவே இருக்கிறது. இவர்கள் சம்பளம் போதாது என்று ஸ்டிரைக் செய்கிருர்கள். சேம நல சர்க்கார் என்ருல் எல்லோருக்கும் சேர்ந்துதான் சேமநல சர்க்காரே தவிர, மத்திய சர்க்கார் ஊழியர்களுக்கோ, மாகாண சர்க்கார் ஊழியர்களுக்கோ மட்டுமல்ல. நாலடியாரில்

"தம்மின் மெலியாரை நோக்கித் தமதுடனும்
அம்மா பெரிது என்று அகமகிழ்க—தம்மின்
கற்ருேரை நோக்கிக் கருத்தழிக கற்ற எல்லாம்
என்றே இவர்க்கு நாம் என்று"

என்று சொல்லப்பட்டிருக்கிறது.

நம்மைவிடப் பொருளாதாரத்தில் கீழே இருப்பவர்களைப் பார்த்து நம்முடைய நிலை எவ்வளவோ மேலாக இருக்கிறதே என்று சந்தோஷப்பட வேண்டும். ஆனல் வேலை செய்வதில் ஒருவர் 4 பைல் போட்டால், நாம் 10 பைல் போடவேண்டு மென்ற முறையில் இருத்தல்வேண்டும். இந்த நிலைமையில் தேசீயப் பண்புடன், அரசாங்கத்துடன் ஒவ்வொருவரும் பாடு பட்டால்தான் நாம் சுபிட்சத்தை இந்த நாட்டிலே ஏற்படுத்த முடியும். இப்போது நடந்த வேலை நிறுத்தம் அரசியல் கட்சி ரீதியில் நடைப்பெற்றதே தவிர தேசீய முறையில் நடைபெற வில்லை. அந்தக் கட்சியின் போக்கில் பார்த்தால் கூடத் தெரியும். எங்களுக்கும் பொறுப்பு இருக்கிறது என்று கம்யூனிஸ்ட் கட்சி சொல்லலாம். ஆனல் அவர்களுடைய தேசீயம் நம்முடைய தேசீயமல்ல. அவர்களுடைய தேசீயம் அகில உலக சர்வ தேசீய தேசீயம். சைனக்காரன் லடாக்கிற்கு ஏன் வந்தான் என்று கேட்டால் வண்ணுத்திப் பூச்சி பிடிக்க வந்தான் என்று சொல்லுவார்கள். இன்னொரு தேசீயம் திராவிட தேசீயம். இவர்கள் திராவிட வீரம், திராவிடத் தன்மை என்றெல்லாம் பேசுவார்கள். இது எப்படியிருக்கிறது என்று சொல்ல வேண்டுமானல் ராவணனிடத்தில் அங்கதன் சொன்ன பதிலைத்தான் சொல்ல வேண்டும். "வீரத்தைப் பாராட்டுகின்றேன், ஆனல் காட்ட வேண்டிய சமயத்தில் விரத்தைக் காட்டாமல் இப்பொழுது காட்டுகின்ருயே" என்று அங்கதன் இராவணனை நோக்கிச் சொன்னன்.

"பருந்துணைப் பாட்டி யாக்கை படுத்தநாள், பகழி பாய
மருந்தினு மினிய மாமன் மடிந்தநாள் வனத்துள் வைகி
இருந்துழி வந்த தங்கை மூக்கும் இரு செவியும்
அரிந்தநாள் வந்தி லாதான் இனிச் செய்யு மாண்மை
யுண்டோ"

என்று அங்கதன் இராவணனைக் கேட்டான். தாடகை இறந்த போது இராவணன் தன் வீரத்தைக் காட்டவில்லை; தாய் மாமன் மாரீசன் இறந்தபோதும் தன் வீரத்தைக் காட்டவில்லை.

10th August 1960] [Sri P. G. Karuthiruman]

சூர்ப்பனகை தன் மூக்கும் காதும் இழந்த போதும் வீரத்தைக் காட்டவில்லை என்றான் அங்கதன். அதே போல் நான் கேட்கிறேன்—மக்களுடைய சுபீட்சத்திற்காக தேசியப் போராட்டம் நடத்தின காலத்தில் எங்கே சென்றிருந்தது உங்கள் வீரம்? அப்பொழுது காட்டாத வீரத்தை இப்பொழுது காட்ட என்ன யோக்கியதை இருக்கிறது? என்ன அருகதையிருக்கிறது? என்ன வீரம் இருக்கிறது என்று கேட்கின்றேன்.

"வடக்கே பக்ரா—நங்கல்; தெற்கே சர்க்கரைப் பொங்கல்" என்றால் அழகாகத்தான் இருக்கிறது. இவர்கள் இப்படியெல்லாம் சொன்னதால் இங்கே திட்டங்கள் போடப் பட்டதாகச் சொல்லுகிறார்கள். இவர்கள் சொன்னதால் அல்ல. எனக்கு ஒரு உதாரணம் ஞாபகத்திற்கு வருகிறது. வானம்பாடிக் குருவி கடற்கரையில் படுத்து, கால்களை வானத்தை நோக்கித் தூக்கிக்கொண்டு, வானத்தை விழுந்து விடாமல் நிறுத்திவிட்டதாக நினைத்துக்கொள்ளுமாம். அது மாதிரிதான் இருக்கிறது இவர்கள் சொல்வது. இவர்கள் சொல்லுகிற திட்டங்களைப் பார்த்துத்தான் நாங்கள் திட்டம் போடுகிறோமோ? நாங்கள் என்ன மக்களுடைய கஷ்டத்தை உணராதவர்களா? நாங்கள் போட்ட திட்டங்களைத்தான் இவர்கள் போட்டதாகச் சொல்லிக் கொள்ளுகிறார்கள்.

Sri C. N. ANNADURAI: எல்லாத் திட்டங்களையும் நீங்களே போட்டுக் கொள்ளுவதானால் எல்லாக் கட்சித் தலைவர்களையும் கூட்டி, திட்டங்களைப் பற்றி ஏன் ஆலோசனை செய்ய வேண்டும்?

Sri P. G. KARUTHIRUMAN: அப்படிக் கேட்பதுதான் ஜனநாயக முறை. வோட்டுப் போட்டு உங்களை அனுப்பி யிருப்பதால்தான் கேட்கிறோம். வோட்டுப் போட்டு அனுப்பவில்லை என்றால் நாங்கள் ஏன் கேட்கிறோம்? அது விதி. மக்கள் உங்களை அனுப்பிவைத்தார்கள். ஆகவே, ஜனநாயக விதியினால் நாங்கள் கேட்டுக் கொள்ளுகிறோம். மக்கள் உங்களை அனுப்பவில்லை என்றால் கேட்க வேண்டிய தில்லை.

Sri C. N. ANNADURAI: அமைச்சரவை அழைப்பு அனுப்பி நடைபெற்ற ஒரு குழுவைப் பற்றியும், அதிலே அங்கம் பெற்ற வர்களைப் பற்றியும், அதிலே எடுத்துச் சொல்லப்பட்ட திட்டங்கள் பற்றியும் கேவலமாகப் பேசுவதுதான் முறை என்றால் இனி எந்தக் குழுவிலுமே எங்களை அழைக்கவேண்டாம் என்று அமைச்சரவைக்கு நீங்கள் அறிவுரை சொல்லுங்கள்.

Sri P. G. KARUTHIRUMAN: சபாநாயகர் அவர்களே, தவறாகச் சொல்லவில்லை. எல்லோரையும் அழைக்கிறோம்.

Mr. SPEAKER: தவறாகச் சொல்லப்பட்டிருந்தால் நான் நிறுத்தியிருப்பேன்.

[10th August 1960

(மணியடிக்கப்பட்டது.)

SRI P. G. KARUTHIRUMAN: இன்னும் ஒரு நிமிடத்தில் முடித்துவிடுகிறேன்.

MR. SPEAKER: இன்னும் ஒரு நிமிடம்தான் பாக்கியிருக்கிறது.

SRI P. G. KARUTHIRUMAN: கவர்னர் பெருமான் உரையைப் பூரணமாக கவனித்தால் என்ன என்ன திட்டங்களெல்லாம் ஏற்கெனவே குறிப்பிட்டிருக்கின்றனவோ அவையெல்லாம் இருக்கின்றன. அவற்றுக்கெல்லாம் நிச்சயமாக ஆதரவு கொடுத்து, மக்களுடைய சுபிட்சத்திற்கும், தமிழ் நாட்டின் சுபிட்சத்திற்கும், தேசீய சுபிட்சத்திற்கும் வழி கோலுவார்கள் என்று எதிர்பார்த்து என்னுடைய சிற்றுரையை முடிக்கின்றேன்.

SRI C. N. ANNADURAI: ஆளும் கட்சியை சேர்ந்த அங்கத்தினர் ஒருவர் நேற்று முன் தினம் பேசினபோது, "மொழிப் பிரச்சினையிலே பிரதம மந்திரி நேருவும் குடியரசுத் தலைவரும், அப்படிப்பட்ட உறுதிமொழிகளையெல்லாம் திராவிட முன்னேற்றக் கழகத்தைப் பொருட்படுத்தி, அளித்திருக்கத் தேவையில்லை" என்று பேசினார்கள். இப்பொழுது கட்சிக் கொறடா பேசும்போது, "திட்டம் போடுவதற்கு அழைக்கவில்லை" என்றார்கள். இந்தக் கருத்தைப் பற்றி ஆளும் கட்சியிலேயே அபிப்பிராயபேதம் இருக்கிறதா என்று அறிந்து கொள்ள விரும்புகிறேன்.

MR. SPEAKER: அதிலே நான் ஒன்றும் சொல்ல முடியாது. உங்கள் வரையில் கேட்டுக்கொள்ளுங்கள். மந்திரி பதிலில் சொல்லுவார்கள்.

* SRIMATHI A. S. PONNAMMAL: மதிப்பிற்குரிய கனம் சபா நாயகர் அவர்களே, கவர்னர் பெருமான் அவர்களின் உரையிலுள்ள பல விஷயங்களையும் நான் முழு மனதோடு ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். இங்கே பேசிய பல அங்கத்தினர்கள், மத்திய சர்க்கார் ஊழியர்களின் வேலை நிறுத்தத்தைப் பற்றிப் பல கோணங்களில் பேசினார்கள். ஒரு சில கட்சிக்காரரர்கள் பேசும்போது, "விலைவாசி ஏறிவிட்டது, அவர்களுக்குள்ள உரிமையைக் கொடுங்கள் என்று தானே அவர்கள் கோரினார்கள்" என்று குறிப்பிட்டார்கள். நான் கேட்கின்றேன்—அந்த உரிமையில், விலைவாசி ஏறிவிட்டது என்பதற்காக வேலை நிறுத்தம் செய்வதற்கு முன்பாக நாட்டின் நிலைமையையும் அவர்கள் எண்ணிப் பார்க்க வேண்டும் அல்லவா? நாடு இன்றைக்கு எந்த நிலைமையில் இருக்கிறது? நம்முடைய பொறுப்பு என்ன என்பதையெல்லாம் நினைத்துப் பார்க்காமல், பொறுப்பற்ற தன்மையில் பேசுவார்களானால் அது மகிழ்ச்சிக்குரிய விஷயமல்ல என்று நான் வருத்தத்தோடு அவர்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறேன். காரணம், சைனாக்காரர்கள் 500 கெஜத்தில் நின்றுக்கொண்டிருக்கிறார்கள்.

10th August 1960] [Srimathi A. S. Ponnammal]

அந்த நிலேயில் நாட்டைக் காத்துக்கொண்டு ஆயிரமாயிரம் வீரர்கள் பனி என்றும் பாராமல், மழை என்றும் பாராமல், குளிர் என்றும் பாராமல், அங்கே இரவு பகலாகக் கண் விழித்து நின்றுக்கொண்டிருக்கிறுர்கள். அவர்களுக்கெல்லாம் உணவுத் தானியங்கள் போகக்கூடாது, உணவுத் தானியம் போகாமல் அவர்கள் பாழாகி, சைனுக்காரர்கள் நம்மை அடிமையாக்க வேண்டுமென்ற முறையில் பல அரசியல் கட்சித் தலேவர்கள் தூண்டிவிட்டு வேலே நிறுத்தம் செய்தார்கள் என்பதை நான் மக்களின் சார்பாக மிக மிக வன்மையாகக் கண்டிக்கின்றேன். இதை ஏன் சொல்லுகிறேன் என்றுல், மத்திய சர்க்கார் ஊழியர்கள் ஒரு வார காலம் வேலே நிறுத்தம் செய்ததன் காரணமாக மத்திய சர்க்காருக்கு 25 கோடி ரூபாய் வரையில் வீணுகச் செலவாகியிருக்கிறது. அந்தப் பணமெல்லாம் செலவாகாமல் இருந்தால் தூத்துக்குடித் துறைமுக அபிவிருத்தித் திட்டத்திற்குச் செலவிட்டிருக்கலாம். இருபத்தைந்து கோடி ரூபாய் வரையில் வீணுக்கிவிட்டு, தூத்துக்குடி துறைமுக அபிவிருத்தியைப்பற்றி பேசிக்கொண்டிருக்கிறேம். தூத்துக்குடி துறைமுகத் திட்டத்தை வெற்றிகரமாக முடித்துக்கொடுப்பார்கள் என்ற நம்பிக்கை எங்களுக்கு இருக்கிறது; எங்களுடைய தலேவர்களுக்கு இருக்கிறது. ஆனல், இடையில் வீணுக 25 கோடி ரூபாய் வரையில் இம்மாதிரி நஷ்டத்தை உண்டாக்காமலிருந்தால், தூத்துக்குடித் துறைமுகத்தை அபிவிருத்தி செய்யக்கூடிய அளவிலே சண்டைபோட முடியும். அதற்கெல்லாம் இடம் கொடுக்காமல் ஒரு கையால் தொட்டிலேயும் ஆட்டிக்கொண்டு, இன்னெரு கையால் குழந்தையையும் கிள்ளி அழ வைக்கிறுர்கள். அந்த அளவு நாட்டிலே கட்சிக்காரர்கள் செயல்படுவார்களானுல், அது நாட்டுக்கு நல்லதல்ல; எதிர்க்கட்சிகளுக்கும் நல்லதல்ல; வருங்காலத்திற்கும் நல்லதல்ல என்று நான் பணிவோடு கூறிக் கொள்ளுகிறேன்.

மொழிப் பிரச்னேயைக் குறித்து இரண்டொரு நாட்களில் விவாதிக்க இருக்கிறேம். இருந்தாலும்கூட, மொழியைப் பற்றி எல்லாக் கட்சிகளும் ஒத்துக்கொள்ளுகிறுர்கள். ஆனல், திராவிட முன்னேற்றக் கழகம் மட்டும், ஏதோ தமிழிலே பிறந்து, தமிழிலே வளர்ந்து, தாங்கள் தான் தமிழில் ஆர்வம் உடையவர்கள் போலப் பேசிக்கொண்டும், இந்தி கூடாது என்றும், இந்தி எதிர்ப்புத் தினம் கொண்டாட வேண்டும் என்றும், சொல்லிக்கொண்டு இருக்கும் போது, அவர்களுடைய தலேவர்களில் ஒருவர் தம்முடைய குழந்தையை டில்லியிலுள்ள தமிழ்ப் பள்ளிக்கூடத்தில் படிக்க வைக்காமல் ஹிந்தி பள்ளிக்கூடத்தில் படிக்க வைத்திருக்கிறுர்கள் என்றுல், தமிழ் நாட்டு மக்களே இவர்களா காக்கப் போகிறுர்கள்? தமிழ் நாட்டின் வருங்காலச் செல்வங்களே இவர்கள் எப்படிக் காப்பாற்றுவார்கள்? தமிழ் நாட்டுச் செல்வங்களேக் கெடுப்பதற்காகத் தான் இவர்கள் இப்படிச் சொல்கிறுர்கள் என்று தான் சொல்ல வேண்டும்.

[10th August 1960

SRI C. N. ANNADURAI: அவர்கள் சொன்ன கூற்றை அந்த நண்பர் என்னுடைய கட்சிக்காரரர் என்ற முறையில் நான் அறிந்திருப்பதால், நான் வன்மையாக மறுக்கிறேன்.

MR. SPEAKER: இந்தச் சபையில் இல்லாதவர்களைப் பற்றியோ அவர்களுடைய பந்துக்களைப் பற்றியோ இழிவாகப் பேசுவது சரியல்ல.

SRIMATHI A. S. PONNAMMAL: இழிவாகச் சொல்ல வில்லையே!

MR. SPEAKER: தமிழ்ப் பள்ளிக்கூடத்தில் படிக்க வைக்காமல் ஹிந்திப் பள்ளிக்கூடத்தில் படிக்கவைப்பதாகச் சொன்னது ஒரு வகையில் இழிவான பேச்சுதானே.

SRIMATHI A. S. PONNAMMAL: கனம் சபா நாயகர் அவர்களே, நான் இழிவாக யாரையும் கூறவேண்டுமென்று விரும்பவில்லை. ஆனால், தமிழைப்பற்றிப் பேசக்கூடியவர்கள் தமிழ்ப் பள்ளிக்கூடத்திற்கு அல்லவா பிள்ளைகளை அனுப்பி வைக்க வேண்டும்?

SRI C. N. ANNADURAI: அம்மையாருக்குக் கிடைத் திருக்கும் தகவல் தவறு என்று நான் சொல்லுகிறேன்.

MR. SPEAKER: இந்தச் சபையில் இல்லாதவர்களைப் பற்றிப் பேச வேண்டாம் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

SRIMATHI A. S. PONNAMMAL: நான் குறிப்பிட்டது பற்றி எனக்கு நன்ருகத் தெரியும். இருந்தாலுங்கூட, பின்னல் சொல்லிக்கொள்கிறேன். தற்போதைக்கு ஒத்துக்கொள்ளு கிறேன்.

இன்னென்று. ஆளும் கட்சியைச் சேர்ந்த அங்கத்தினர் ஒருவர் பேசும் போது "ஹிந்தியை ஹரிஜன மக்கள் படிக்க முடியாது" என்ருர்கள். அனேக டிபார்ட்மென்ட்களில் எத்தனையோ ஹரிஜன குடும்பங்களில் பிறந்தவர்கள் நல்ல பதவிகளில் இருந்து கொண்டு திறமையாகக் காரியங்கள் செய்து கொண்டு வருகிருர்கள். ஹரிஜன மக்களால் படிக்க முடியாது என்று சொல்வதை நான் எதிர்க்கிறேன். ஹிந்தி தேசிய மொழியாக வர வேண்டும் என்று எங்களுடைய கட்சியின் சார்பிலும் பொது மக்களின் சார்ப்பிலும் சொல்லி, அதை முழு மனதோடு வரவேற்கிறேன்.

SRI K. ANBAZHAGAN: இப்பொழுது பேசிய அங்கத்தினர் அவருடைய ஆளும் கட்சியின் சார்பில், இந்தியை தேசிய மொழியாக வரவேற்பதாகத் தெரிவிக்கிருர்கள். நிதி அமைச்சர் திரு. சுப்ரமணியம் அவர்கள், "இந்தியை ஒரு தேசீய மொழியாக வரவேற்கவில்லை" என்று தெரிவித்திருக்கிருர்கள். எது ஆளும் கட்சியினுடைய கொள்கை என்று அறிய விரும்பு கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: ஹிந்தியும் ஒரு தேசீய மொழிதான். அதைத்தான் அவர்கள் சொல்கிருர்கள்.

10th August 1960] [Sri C. Subramaniam]

இந்தியாவிலே இருக்கும் எல்லா மொழிகளும் தேசீய மொழிகள்; அதிலே ஹிந்தியும் ஒரு தேசீய மொழி. திராவிட முன்னேற்றக் கழகத்தின் அபிப்பிராயம் எப்படி இருக்கிறதோ அதைப் பற்றி நான் சொல்லவில்லை.

MR. SPEAKER: அடிக்கடி குறுக்கிட்டுப் பேசினால் எப்படித்தான் பேச்சை முடிக்கமுடியும்?

SRI A. GOVINDASAMY: கனம் அங்கத்தினர் திரு. மகாலிங்கம் அவர்கள் பேசியதற்கு நிதி அமைச்சர் அவர்கள் பதில் சொல்லும் நேரத்தில், "நிர்வாக மொழி" என்று சொல்லிவிட்டு, இங்கே மறுக்கிறார்.

THE HON. SRI C. SUBRAMANIAM: ஹிந்தியைத் தேசீய மொழியாக்க வேண்டும்" என்று திரு. மகாலிங்கம் அவர்கள் சொன்னதற்கு, "ஹிந்தி இப்போதே தேசீய மொழியாக இருக்கிறது; ஆக்க வேண்டியது நிர்வாக மொழியாக" என்று நான் திருத்தமாகச் சொன்னேன்.

MR. SPEAKER: ஒவ்வொரு அங்கத்தினர் சொன்னதற்கும் மந்திரி அவர்கள் பதில் சொல்லமுடியாது. பதில் சொல்ல வேண்டுமென்று கேட்பதும் சரியல்ல. அடிக்கடி குறுக்கே பேசினால், ஸ்ரீமதி பொன்னம்மாள் அவர்களுக்கு ஒதுக்கி வைத்த நேரம் கம்மியாகிவிடும். இன்னும் இரண்டு அங்கத்தினர்கள் கம்மியாகத்தான் பேசப் போகிறார்கள்.

SRIMATHI A. S. PONNAMMAL: அடுத்தபடியாக, நம்முடைய நாட்டில் விலைவாசி ஓரளவுக்கு ஏறியிருக்கிறது என்றாலுங்கூட, எங்களுடைய கட்சிக் கொறடா கூறியது போல, ஏழை விவசாயிகள் பகல் முழுதும் பாடுபட்டுக் கொண்டிருக்கிறார்கள். நாட்டில் 85 சதவிகிதமுள்ள மக்கள் விவசாயத்தில் ஈடுபட்டிருக்கிறார்களே, அவர்கள்தான் நாட்டின் முதுகெலும்பாக இருக்கிறார்கள் என்று நான் வலியுறுத்த விரும்புகிறேன். அப்பேர்ப்பட்டவர்கள் ஒரு ஏர் உழுவதற்காகக் கூப்பிடப்பட்டால், 2 ரூபாய்க்குப் பதில் ஐந்து ரூபாய் கொடுத்தாலும் ஏர் உழ வரமாட்டேன் என்கிறார்கள். இரண்டு ரூபாய்க்கு விற்றுக் கொண்டிருந்த மண்வெட்டி இப்பொழுது ஏழரை ரூபாய்க்குக்கூட கிடைப்பதில்லை. விலைவாசி ஏற்றத்தை குறைத்தாலுங்கூட, ஏழை பாட்டாளி மக்களாக நாட்டின் தலை விதியை நிர்ணயிக்கக் கூடியவர்களாக இருக்கிறார்களே, அவர்களுடைய நிலையை ஆராய்ந்து பார்த்து அவர்கள் வேலையைக் குறைத்து, இந்த சாமான்களின் விலையைக் குறைக்க வேண்டுமென்று விவசாயிகள் எதிர்பார்க்கிறார்கள். அப்படியில்லாமல், அரசாங்கத்தில், ரூ. 200, ரூ. 300 சம்பளம் வாங்கக் கூடியவர்களுக்குச் சலுகை காட்ட வேண்டுமென்று மாற்றுக் கட்சிக் காரர்கள் நினைத்தால், அதற்கு ஒருக்காலும் மக்கள் இடம் தரமாட்டார்கள் என்பதை அவர்களுக்கு நான் கூறிக்கொள்ள விரும்புகிறேன். இன்னொரு அங்கத்தினர்கூட கூறினார். "ஏன் இம்மாதிரி அதிகாரத்தை பஞ்சாயத்து

[Srimathi A. S. Ponnammal] [10th August 1960

யூனியன் கையிலே கொடுப்பது, அது மிகவும் பொருத்தமல்ல. தனிப்பட்டவர்கள் ஜில்லா நிர்வாகத்தை நடத்திக் கொண்டு வரும்பொழுது அது மிகவும் நல்ல முறையில் இருந்து கொண்டிருந்தது.'' என்று சொன்னார்கள். அவர்களுக்குக் கூறிக் கொள்ள விரும்புகிறேன். நாம் இருப்பது ஜனநாயக நாடு. அதிகாரத்தைப் பகிர்ந்து கொடுக்கும் நோக்கத்தோடு அரசியல் நடத்திக்கொண்டிருக்கின்றோம். கிராமத்திலுள்ள பஞ்சாயத்துக்களும், கிராமச் சபைகளுக்கும் அதிகாரத்தை பிரித்துக் கொடுத்தால்தான் அவர்கள் பல விஷயங்களை தெரிந்துகொள்ள முடியும். தாங்கள்தான் ஆளவேண்டும், ஒருவர் கையில்தான் ஆட்சி இருக்க வேண்டும் என்று கூறுபவர்கள் மக்கள் மத்தியில் செல்ல முடியாது என்று கூறிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

அடுத்தபடியாக, தொழில் துறை பரவலாக நாட்டில் தொழில்களை நிறுவப்போவதாக கவர்னர் பெருமான் உரையில் கூறப்பட்டிருப்பது குறித்து நான் மிகவும் சந்தோஷப்படு கிறேன். நாம் தொழில் துறையில் எவ்வளவோ காரியங்களைச் செய்த போதிலும், எவ்வளவோ திட்டங்களைப் போட்ட போதிலும், கிராமப்புறங்களிலும், தாலுகா மாவட்டங்களிலும் அநேக விதமான தொழில்களை நாம் ஆரம்பிக்க வேண்டும். உதாரணமாக என்னுடைய தொகுதி நிலக் கோட்டையில் ஐம்புதுரைக் கோட்டையில் மைகாவும்—காக்காய் பொன் என்று சொல்லுவார்கள்—கிளாஸ் செய்யக் கூடிய மண் கட்டியும் அங்கே கிடைக்கின்றன. யார் யாரோ அதை வெட்டி எடுத்துக் கொண்டு போகிறார்கள். அதையெல்லாம் ஆராய்ச்சி செய்து அந்தப் பகுதியிலே பிளாஸ்டிக் சாமான் செய்யக்கூடிய அளவுக்கு ஒரு தொழிலை ஏற்படுத்த வேண்டு மென்று கேட்டுக்கொள்ளுகிறேன். "ஆறு மாதம் விவசாய வேலை செய்து, மற்ற 6 மாதங்களுக்கு வேலையில்லாமல் திண்டாடுகின்ற அந்தப் பகுதி மக்களுக்கு வேலை வாய்ப்பு தருவ தாக இருக்கும் என்பதையும் அமைச்சர் அவர்களுக்கு தாழ்மை யோடு கூறிக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்து மின்சாரம். மின்சார விஷயத்தில் நாம் மற்ற மாகாணங்களைக் காட்டிலும் முன் நிலையில் நிற்கிறோம் என்று வைத்துக்கொண்டால்கூட, என்னுடைய தொகுதியில் பல இடங்களில் செக்யூரிடி டெபாஸிட் கட்டி, 6, 7, ஆண்டுகள் ஆகியும், மின்சாரம் விஸ்தரிக்கப்படவில்லை என்பதை அமைச்சர் அவர்களின் ஞாபகத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். இதைப் பரிசீலனை செய்து சம்பந்தப்பட்ட அதிகாரிகளிடம் கூறி விரைவிலே மின்சார விஸ்தரிப்பு கொடுக்க வேண்டுமென்று மிகவும் பணிவோடு கேட்டுக் கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, பாசன திட்டங்கள் என்று வரும்பொழுது, நாம் பெரிய பெரிய அணைகளைக் கட்டியிருந்த போதிலும், அநேக இடங்களில் சிறிய சிறிய நீர்ப் பாசன திட்டங்கள் இன்னும் விரைவிலே எடுத்துக் கொள்ளப்படவில்லை. ஒவ்வொரு தாலூக்காவாரியாக ஆராய்ந்து பார்த்து, ஒவ்வொரு

10th August 1960] [Srimathi A. S. Ponnammal]

தொகுதி வாரியாக ஆராய்ந்து பார்த்து சிறிய நீர்ப்பாசன திட்டங்களுக்கு முதல் இடம் கொடுக்கவேண்டுமென்று மிகவும் பணிவோடு கேட்டுக்கொள்கிறேன்.

கடைசியாக, குழந்தைகளுக்கு கட்டாயப் படிப்பை நான் மிகவும் வரவேற்கிறேன். கிராமப்புறங்களில் சரியானபடி பள்ளிகளுக்குச் செல்லாமல் இருக்கும் குழந்தைகளுக்குப் பகல் உணவு அளிப்பதோடுகூட வருஷத்திற்கு இரண்டு தடவை யாவது பின் தங்கியவகுப்பினர்களுக்கு, ஹரிஜன குழந்தைகளுக்கு நாம் துணிமணிகள் கொடுப்போமானல், கட்டாயம் அவர்கள் பள்ளிகளுக்கு வருவார்கள் என்பதை மிகவும் பணிவோடு, தெரிவித்துக் கொள்ளுகிறேன். ஆகவேதான், பொருளாதார நிலைமை நமக்கு சரியாக இல்லாவிட்டாலும், இம்மாதிரியான சிறிய விஷயங்களையும் பார்த்து கவனித்து சேர்த்து செய்வோமானல் ஏழைக் குழந்தைகளுக்கு நல்ல அறிவை ஊட்டியவர்களாவோம் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

சம்பளக் கமிஷன் அறிக்கை வந்ததும் அநேக ஆசிரியர்கள், ஆயிரக் கணக்கான ஆசிரியர்கள் அதை மிகவும் வரவேற்று அரசாங்கத்திற்கு நன்றி தெரிவித்துக் கொள்ள கூடிய நிலைமை இருக்கிறது. அதோடு, விவசாய மேஸ்திரிகள் நம்முடைய மாகாணத்தில் ஏறக்குறைய 1,200 பேர்கள் இருக்கிருர்கள். ஒரு பிளாக்குக்கு 2, 3 மேஸ்திரிகள் இருக்கிருர்கள். அவைகளில் ஒன்று, இரண்டு மேஸ்திரிகளை நீக்கிக்கொண்டிருக்கிருர்கள் என்று எங்களுக்குத் தகவல் கிடைத்திருக்கிறது. எனவே பல ஆண்டுகளாக பணிபுரிந்தவர்களை இப்பொழுது வேலையிலிருந்து நீக்கினல், அவர்கள் குழந்தை, குட்டிகளுடன் கஷ்டப்படுவார்கள். அவர்களை இந்த வேலையிலிருந்து நீக்கினல்கூட, அவர்களுக்கு வேறு ஏதாவது இலாகாவில், பாரெஸ்டு இலாகாவிலோ அல்லது மரம் நடும் விழா சம்பந்தமாக பி.டபிள்யூ.டி-யிலோ அவர்களுக்கு வேலை கொடுத்து அவர்களை ஆதரிக்கவேண்டும் என்று மிகவும் பணிவுடன் கேட்டுக்கொள்ளுகிறேன்.

கடைசியாக, உற்பத்தியைப் பெருக்க வேண்டும், விவசாயிகளுக்கு அதிகப்படியாக கடன் கொடுத்து உதவ வேண்டுமென்று திட்டம் போட்டு, அதன்படி செய்துக் கொண்டிருக்கிருேம். ஒரு சில ஏரியாக்களில், ஜமீன் ஏரியாக்களில் கடன் வாங்க முடியாமல் ஜனங்கள் கஷடப்படுகிருர்கள்.

(Deputy Speaker in the Chair).

அந்த ஏரியாக்களில் "புல் பினன்ஸ் ஸ்கீம்", முழுக் கடன் தொகை அளிப்புத் திட்டம் அமுலுக்குக் கொண்டுவந்து, கடன் வசதி செய்துக் கொடுத்தால், உற்பத்தியை பெருக்க முடியும் என்பதை நான் தெரிவித்துக் கொண்டு, கவர்னர் பெருமான் உரையை பாராட்டி, எனது சிற்றுரையை முடித்துக் கொள்ளுகிறேன்.

[10th August 1960

*SRI P. VEDAMANICKAM: கனம் சட்ட மன்ற உப தலைவர் அவர்களே, மேன்மை தங்கிய கவர்னர் பெருமான் உரையை ஆதரித்து சில வார்த்தைகள் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். மத்திய சர்க்கார் ஊழியர்களின் வேலை நிறுத்தத்தை பெரும்பாலும் பொது மக்கள் மிகவும் கண்டித்து பேசினார்கள் என்றால், குறிப்பாக எங்கள் நகரத்தில் அந்த வேலை நிறுத்தத்தின் போது நான் அடிக்கடி சென்று பார்த்தேன். பொது மக்களுக்கு அதனால் பல இன்னல்கள் ஏற்பட்டதால், அவர்கள் அதை மிகவும் கண்டித்தார்கள். இன்றைக்கு மத்திய சர்க்கார் ஊழியர்கள் மாகாண சர்க்கார் ஊழியர்களை விட நல்ல சம்பளம் பெறுகிறார்கள். அப்படியிருந்தும் மேலும் அவர்களுடைய சம்பளத்தை அதிகப்படுத்த வேண்டும் என்று கேட்டு. அவர்கள் 4, 5 நாட்களுக்கு வேலை நிறுத்தம் செய்தார்கள். பொதுமக்களுக்கு அதனால் பெரிய கஷ்டம் ஏற்பட்டது. அதனால்தான் அந்த வேலை நிறுத்தத்தை பொது மக்கள் ஆதரிக்கவில்லை என்று நான் தெரிவித்துக்கொள்ள ஆசைப்படுகிறேன். அத்துடன் பெரும்பாலான நமது மாகாண என்.ஜி.ஒக்கள் அதிக நாட்களாக தங்களுக்கு சம்பளம் போதாது வறுமையால் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறோம், சம்பள உயர்வு வேண்டும் என்று அரசாங்கத்தை கேட்டுக்கொண்டிருந்தார்கள். அதைப் பரிசீலனை செய்து கவனித்து இந்த ஆண்டிலே அவர்களுக்குச் செய்த உதவிக்கு அவர்கள் அரசாங்கத்திற்கு நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறார்கள். அது குறித்து நான் அரசாங்கத்தைப் பாராட்டுகிறேன். அதோடு எங்கள் மாவட்டத்தில் அரசாங்க ஊழியர்கள் சம்பள உயர்வை மிகவும் வரவேற்று நன்றி செலுத்தி பாராட்டியிருக்கிறார்கள் என்பதையும் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

அதோடு எங்கள் தாலுகாவிலே பென்னாடம் என்ற நகரத்தில் சர்க்கரை ஆலை ஒன்று ஆரம்பிக்க விண்ணப்பங்கள் வந்திருக்கின்றன. அரசாங்கம் கட்டாயம் அங்கே ஒரு சர்க்கரை ஆலை நிறுவப்படும் என்று வாக்குறுதி கொடுத்திருக்கிறார்கள். ஆனால் அங்கு இன்னும் வேலை ஆரம்பிக்கப்படவில்லை. சர்க்கரை ஆலை ஏற்படுத்துவதற்கு 5 விண்ணப்பங்கள் வந்திருப்பதாகச் சொல்லுகிறார்கள். பென்னாடத்தில் ஒரு ஆலை ஏற்படுவதற்கும் விண்ணப்பம் வந்திருக்கும் என்று நினைக்கிறேன். அரசாங்கம் இதைக் கவனித்து அங்குள்ள மக்களுடைய எண்ணத்தை பூர்த்தி செய்து அங்கு ஒரு ஆலையை நிறுவும்படி தாழ்மையுடன் கேட்டுக் கொள்ளுகிறேன். எங்கள் மாவட்டத்தில் ரிசர்வாயர் பாய்ச்சலினால் நல்ல கரும்பு விளைகிறது. அதனால் 1,000 தொழிலாளர்கள் பிழைக்க முடியும். அடுத்த திட்டத்திலாவது இதை உருவாக்கும்படி தாழ்மையுடன் கேட்டுக்கொள்ளுகிறேன்.

விவசாய இலாகாவில் வேலை செய்து வரும் பின்தங்கிய ஊழியர்கள் விவசாய மேஸ்திரிகள் நூற்றுக் கணக்கில் "ரிடெரென்ச்மெண்டு" செய்யப்படுகிறார்கள் என்று அவர்கள் குறை சொல்லுகிறார்கள். குறிப்பாக எங்கள் தாலுகாவில் 2, 3

10th August 1960] [Sri P. Vedamanickam]

ஊழியர்கள் வேலையிலிருந்து எடுக்கப்பட்டிருக்கிறார்கள். அதனால் அவர்கள் குடும்பமே பிழைக்க வழியில்லாமல் இருக்கிறது. உடனடியாக இவர்களுக்கு மற்ற டிபார்ட்மெண்டிலாவது வேலை கொடுத்து ஆதரிக்கவேண்டுமாறு கேட்டுக் கொள்ளுகிறேன்.

கவர்னர் அவர்களுடைய உரையில் ஹரிஜன மக்களைப்பற்றி யாதொரு விஷயமும் சொல்லப்படாவிட்டாலும், ஹரிஜன மக்களுக்கு குடியிருப்பு விஷயத்தைப் பற்றி எந்த மாவட்டத்திற்குச் சென்றாலும் குறையாக இருக்கிறது. அமைச்சரவையைப் பார்க்கும்போதெல்லாம் எந்த நேரமும் குறை கூறிக் கொண்டிருக்கிறார்கள். ஏனென்றால் அரசாங்கத்தினுடைய "பாலிஸி", உடனடியாக இந்தக் குறையைத் தீர்க்கக் கூடியதாக இல்லை. ஒரு ஹரிஜன சேரியை எடுத்துக்கொண்டால் குடியிருப்பு மனைப்பிரச்னை குறைந்தது 10 ஆண்டுகளாக தீராமல் இருக்கின்றன. எங்கள் மாவட்டத்தில் சிதம்பரம் தாலுக்காவில் இந்தக் குறை நீங்கிய பாடில்லை. ஒன்றிரண்டு தாசில்தார்கள் போட்டும்கூட சரிவர நடக்கவில்லை. இதற்குக் காரணம் இது சம்பந்தமான பேப்பர்கள் சென்னைக்கு வந்து செல்ல வேண்டியிருப்பதால் தாமதம் ஏற்படுகிறது என்று சொல்கிறார்கள். இது விஷயமாக அரசாங்கக் கொள்கையை மாற்றி இந்தக் குடியிருப்பு மனை விஷயத்தை ஜில்லா மட்டத்திலே முடிவு செய்ய அரசாங்கம் வேண்டிய முயற்சிகளை எடுத்துக் கொள்ள வேண்டும். குடியரசு நாட்டில் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு நாம் குடியிருப்பு மனை வசதியை உடனுக்குடன் செய்துகொடுக்காததுபற்றி நான் வருந்துகிறேன். அந்த விஷயத்திலே அரசாங்கம் மக்களுக்கு, தாழ்த்தப்பட்ட மக்களுக்கு உடனடியாக உதவி செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, மின்சார விஷயத்தில் நமது மாகாணம் மிகவும் வேகமாகச் சென்று கொண்டிருக்கிறது. அதிக நாட்களாக பின்தங்கிய பிரதேசமாக இருந்த எங்கள் மாவட்டத்தில் இப்பொழுது மின்சார விஸ்தரிப்பு நடந்துகொண்டிருக்கிறது. எங்கள் தாலுகாவிலே சில இடங்களில் மின்சார விஸ்தரிப்பு இன்னும் அதிகமாக ஏற்படவில்லை. திட்டக்குடி, சிறுபாக்கம், நல்லூர் ஆகிய இடங்களுக்கு மின்சாரத்தை விஸ்தரிக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

சென்ற ஆண்டில் 10, 15 கிராமங்கள் தீயால் எறிந்துவிட்டன. ஏறக்குறைய அரசாங்கம் 50,000 ரூபாய் நஷ்ட ஈடு கொடுத்தது. இந்தப் பகுதிகளில் வைக்கோலால் வேய்ந்த வீடுகள் அதிகம். அங்கே ஒரு Fire Servi e நிலையம் ஏற்படுத்த வேண்டுமென்று சொன்னபொழுது, அதை பஞ்சாயத்தால் நடத்த முடியாது என்று அரசாங்கம் சொன்னார்கள். இப்பொழுது பஞ்சாயத்து யூனியன் கவுன்சில்கள் ஏற்படப் போகின்றன. ஏறக்குறைய 4, 5 கவுன்சில்கள் ஏற்பட இருக்கின்றன இந்தப் பிராந்தியத்தில். ஆகவே, அங்கு ஒரு "பயர் ஸர்விஸ்" நிலையம் ஏற்படுத்தி அதை யூனியன் கவுன்சில் நடத்துமாறு கேட்டுக்கொள்ளுகிறேன். இதனால் வருஷத்திற்கு அரை

[Sri P. Vedamanickam] [10th August 1960

லட்ச ரூபாய்க்கு மேல் சர்க்காருக்கு பணம் விரயமாகிறது. ஆகவே, விருத்தாசலம் தாலூகாவில் ஒரு "பயர் ஸர்விஸ்" நிலையம் ஏற்படுத்தினுல் அது கள்ளக்குரிச்சிக்கும் உபயோகமாக இருக்கும் என்று சொல்லிக்கொண்டு, கவர்னர் பெருமான் அவர்களுடைய உரையை வரவேற்று, ஆதரித்து, என்னுடைய பேச்சை முடித்துக்கொள்ளுகிறேன்.

12-30 p.m.

* SRI G. G. GURUMURTHI: தலைவர் அவர்களே, கவர்னர் பெருமான் ஆற்றிய உரைக்கு நன்றி தெரிவிக்கும் பிரேரணையை ஆதரித்து, சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். கவர்னர் பேருரையில் அகில இந்திய ஆட்சி மொழி பற்றி திருப்தி கரமாகச் சொல்லியிருக்கிறார்கள். குறிப்பாக இந்த சட்டசபை யிலேயும், வெளியிலே சில அரசியல் கட்சிகளும் ஆட்சி மொழி யைப் பற்றியும், மற்ற மொழி பற்றியும் சர்ச்சை செய்து கொண்டிருக்கிறார்கள். ஆனால், கிராம மக்களும், பொது மக்களும், அகில இந்திய மொழியைப் பற்றியும் மற்றதைப் பற்றியும் ஈடுபடுவதில்லை. அவர்கள், பொறுப்பேற்றிருக்கும் அரசாங்கம் அதையெல்லாம் செம்மையாகச் செய்வார்கள் என்று சும்மா இருந்து விடுகிறார்கள்; விவரம் அதிகமாகத் தெரியாமலும் அப்படியிருந்து விடுகிறார்கள். தாலூகா தலைமை ஆபீசுகளிலிருந்து அவர்களுக்கு தமிழிலேயே உத்தரவுகள் வரும்போது, தமிழ் ஆட்சி மொழியாக இருப்பதின் பயனை அவர்கள் அடைகிறார்கள்.

ஆங்கிலம் வேரூன்றிய காலத்தில், எல்லோரும் பயன் படுத்திக் கொள்ளாமல் ஒரு சாரார் மாத்திரம் பயன் படுத்திக் கொண்டதினுல், அவர்களிடம் துவேஷமும், அதற்கு ஒரு கட்சி ஏற்படும் நிலைமையும் உண்டாயிற்று. அதே மாதிரி, ஹிந்தி யைப் பொருத்தவரை, அதை அகில இந்திய ஆட்சி மொழியாக ஏற்கக்கூடிய தகுதி ஏற்படும்வரை ஆங்கிலமும் தொடர்ந்து இருக்கும். ஆனுல் பல்லாண்டுகளுக்குப் பிறகு, ஆங்கிலம் வகிக்கும் இடத்தை ஹிந்தி ஏற்றுக்கொள்ளும் நிலை வரும் போது, அதைப் பயன் படுத்திக் கொள்ளும் மக்கள் ஒரு பகுதி மக்களாக மட்டும் இருப்பார்கள் என்றால், அப்பொழுதும் துவேஷமும் வெறுப்பும் ஏற்படும் நிலைமை ஏற்படும். அதை நாம் தவிர்க்க வேண்டும். எனவே ஆங்கிலத்திற்கு என்ன இடம் நமது மாகாணத்தில் கொடுக்கப்பட்டிருக்கிறதோ அதே மாதிரியான இடம் அதாவது கட்டாய பாடமாக ஹிந்தி வைக்கப்படவேண்டும்.

அடுத்தபடியாக விலைவாசி ஏற்றத்தைப்பற்றியும், கவர்னர் உரையில் தெரிவித்திருக்கிறார்கள். இந்த உயர்வினுல் விவசாயி களுக்கு அதிக நன்மை ஏற்படுகிறது என்ற தப்பான அபிப்பிராயம் ஒன்று இருக்கிறது. சிறிய விவசாயிகள் நிலைமை வேறு. பெரிய விவசாயிகளைப் பொருத்தவரை, அதிகக் கவலையில்லை. அவர்களுக்கு வேறு வழிகள் இருக்கின்றன, வேறு தொழில்கள் இருக்கின்றன. ஆனுல், சிறிய மத்தியதர விவசாயி இந்த விலை ஏற்றத்தால் பயன் அடைவதில்லை. விளைபொருள்களை எடுத்துக் கொண்டாலும், மற்ற விவசாய காரியங்களுக்கு தேவையான பொருள்களை எடுத்துக் கொண்டாலும், எல்லாவற்றையுமே அவன் உற்பத்தி செய்ய

10th August 1960] [Sri G. G. Gurumurthi]

முடிவதில்லே. ஆகவே, அத்தியாவசியமான பொருள்களே அவன் மற்றவர்களேப்போல்தான் அதிக விலே கொடுத்து வாங்க வேண்டியிருக்கிறது. நான் விவசாயச் செலவைப் பற்றி மட்டும் சொல்லவில்லே. மற்ற தேவைப் பொருள்கள், போக்குவரத்து, உடை, வைத்தியம் போன்ற பல இனங்களில் அவன் அதிகச் செலவே செய்ய வேண்டியிருப்பதால், அவன் பொருள்களுக்குக் கிடைக்கும் அதிக விலேக்கும், அவன் கொடுத்து வாங்கும் பொருள்களின் விலேக்கும் சரியாகப் போய் விடுகிறது. இந்த விலேவாசி அதிகமாக இருந்த பத்தாண்டுகளில் எந்த சிறிய விவசாயியும் தன் பணத்தை மிச்சப்படுத்திஞன் என்று சொல்லுவதற்கில்லே. இப்பொழுதும்கூட விளே பொருள்களின் விலே ஒரு ஆண்டில் அதிகமாக இருக்கிறது, மற்ற ஆண்டில் குறைந்து போகிறது. இப்பொழுது உயர்ந்த பட்ச விலே நிர்ணயிக்க வேண்டும் என்று சொல்லும்போது, குறைந்த பட்ச விலேயையும் நிர்ணயிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். அப்பொழுது தான் விவசாயி தன் தொழிலே நடத்த முடியும். (மணியடிக்கப்பட்டது.) ஒரு நிமிஷம், சார்.

இரண்டாவது திட்டம் நிறைவேறி, மூன்ருவது திட்டம் தீட்டும் நிலேயில் இருக்கிறேம். திட்டங்களே வகுக்கும் நேரத்தில், சிறு நீர்ப் பாசன திட்டங்களுக்கு அதிக கவனம் செலுத்தப்பட வேண்டும். ஆனுலும், சில வேலேகள் எடுக்கப் படாமல் இருக்கின்றன. சில ஊர்களில் மண் எடுத்தோம் என்கிருர்களே தவிர புதிதாக சில குளங்களே ஏற்படுத்துவது போன்ற திட்டங்கள் இல்லே. அரசாங்கத்தில் சாங்க்ஷன் செய்யும் போதும், ஒவ்வொரு சமயத்தில் ஒவ்வொரு விதமாகக் கணக்குப் பார்க்கிருர்கள். அரசாங்கத்தின் கொள்கை முரண் பாடுடையதாக இருக்கிறது. ஏக்கருக்கு இவ்வளவுதான் செலவு செய்யப்பட வேண்டுமென்ற நியதி ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. இந்த நியதியினுல் எந்த வேலேயும் எடுத்துக் கொள்ளப்படாமல் இருக்கின்றன. இந்த நியதி சாத்தியமற்றதாக இருக்கிறது.

கடைசியாக மின்சாரத் துறையில், அதிக முன்னேற்றம் கண்டிருக்கிறேம். அது போற்றத் தக்கது. கவர்னர் உரையில் அன்-கனெக்டெட் மினிமம் சார்சை தள்ளுபடி செய்யப் பட்டது பற்றி மகிழ்ச்சியடைகிறேன். கனம் மின்சார அமைச்சரவர்களேக் கேட்டுக் கொள்ளுகிறேன், மேட்டூர் வாய்க்கால், கீழ்பவானி வாய்க்கால் பிரதேசங்களில், விவசாயக் காரியங்களுக்கு மின்சார சப்ளே கொடுப்பதிலும் ப்ரையாரிடி கொடுப்பதில்லே . . .

DEPUTY SPEAKER: எலெக்ட்ரிசிடி பட்ஜெட் வரும் போது அதைப் பற்றியெல்லாம் பேசுங்கள்.

*SRI S. RAMAKRISHNA THEVAR: சபைத் தலேவர் அவர்களே, கவர்னர் உரையை ஆதரித்து சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இப்பொழுது நம் இராஜ்யத்தில், ஒவ்வொரு துறையிலும் முன்னேறி வரும் திட்டங்களேப் பற்றி கவர்னர் உரையில் கொடுத்திருக்கும் நம் திட்டங்கள் அத்தனேயும் ஒரு "பாக்கட் அகராதி" யாக அமைந்திருக்கிறது. அதைப்

[Sri S. Ramakrishna Thevar] [10th August 1960

புரிந்துகொண்டோ அல்லது புரிந்துகொள்ளாமலோ தவறான நோக்கத்தில் மதிப்பிறகுரிய பல அங்கத்தினர்கள் பேசுகிறார்கள். பொதுவாக எடுத்துக் கொண்டால், நம் பிராந்தியத்தில், மின்சாரம் மின் வேகத்தில் முன்னேறி வருகிறது; கூட்டுறவு ஸ்தாபனங்கள் வாயு வேகத்தில் வளர்ச்சி யடைகிறது; மராமத்து வேலைகள், பாசுபாதாஸ்திரம் போன்று பூமியைத் துளைத்துக் கொண்டே செல்கிறது ; சுகாதாரம் சுகுந்த வாசமாக இருக்கிறது; கல்வி கடைமடை திறந்தாற்போல் வெள்ளமாகப் பாய்கிறது. அந்த மாதிரி போய்க் கொண்டிருந்தாலும், குறை சொல்லிக் கொண்டிருப்பது சாதாரணமாக இருக்கிறது. கிராமங்களில் சொல்லுவார்கள் கட்டின வீட்டுக்கு லக்கினம் சொல்லுகிறான் என்று, அம்மாதிரித்தான் இருக்கிறது, இவ்வளவு ஆக்க வேலைகளையும் பார்த்துக் கொண்டும், குறை கூறிக் கொண்டிருப்பது. அவர்கள் கதி என்னவோ சேலத்தில் எந்த விதமான இரும்பைக் கண்டுபிடித்தார்கள் என்றால், அதில் 35 சதவிகிதம் என்றார்கள்; ஆனால் கீழ் ராமனாதபுரம், திருப்பத்தூர், சிவகங்கை பகுதியில் உள்ள இரும்பு பரீட்சை செய்து பார்த்ததில் 45 சதவிகிதம் இருப்பதாக சொல்கிறார்கள். இன்னும் கனி வளங்கள் எத்தனையோ இருக்கின்றன. திருவாடானை, தாலூகாவில் சமுத்திரக் கரைப் பக்கத்தில் எண்ணெய் வளம் இருக்கிறது என்று ஆராய்ச்சி நிபுணர்கள் சொல்கிறார்கள். நல்ல பலன் தரும் சூழ்நிலையிருக்கிறது. அது சம்பந்தமாக ஆராய்ச்சி வேலைகள் துரிதமாகச் செய்ய வேண்டும் என்று அபிப்பிராயப் படுகிறேன்.

இரண்டாவதாக, கவர்னர் உரையில் அப்பர் பெரியாறு திட்டத்தைப் பற்றி ஒன்றுமே இல்லை. அது ஒருக்கால் மறைந்திருக்குமோ என்று யோசித்து இந்தக் கோணல் எழுத்துக்களுக்கு மத்தியில் இருக்குமோ என்றுகூட யோசித்துப் பார்த்தேன், அப்படி ஒன்றும் இருப்பதாகக் காணோம். அந்தத் திட்டம் கொண்டு வந்து நிறைவேற்றினால் அதனால் திருப்பத்தூர், திருவாடானை தாலூகாக்கள் வளம் பெறும். அந்த பிராந்தியத்திற்கு அது ரொம்பவும் அவசியமாக இருக்கிறது. ஆகவே அதை உடனடியாக எடுத்து நிறைவேற்ற வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். இப்பொழுது நம் ராஜ்யத்தில் இருக்கிற கோணல்களைப் பார்த்தால் பத்மாசூரன் கதையில் ஞாபகம் வருகிறது. பத்மாசூரன் எப்படி தனக்கு வரத்தை வாங்கிக் கொண்டு அந்த வரததை எப்படி அவன் துஷ்பிரயோகம் செய்ய ஆரம்பித்தான். அவன் கதி என்ன ஆச்சு, அதே போல் இந்த ராஜ்யத்திலும் தவறு செய்பவர்கள் கதி என்ன ஆகிவிடும் என்பதில் சந்தேகம் கிடையாது. என்னுடைய பகுதியை எடுத்துக் கொண்டால் அங்கு முக்கியமான சில திட்டங்களை எடுத்து நிறைவேற்ற வேண்டியதாக இருக்கிறது. எங்கள் பகுதி பல விதத்திலும் முன்னேற்றமடைய வேண்டியதாக இருக்கிறது. சேது சமுத்திரம் திட்டம் வர வேண்டியதாக இருக்கிறது. சிறிய துறை முகத் திட்டங்கள் வளர வேண்டியதாக இருக்கிறது. சேது ரஸ்தா திட்டம் வர வேண்டியதாக இருக்கிறது. குளங் கோர்வை பூச்சை திட்டம் முடிவடைய வேண்டும். எங்கள் பகுதி

10th August 1960] [Sri S. Ramakrishna Thevar]

மிகுந்த வரண்ட பிரதேசம் அங்கு இப்படிப்பட்ட திட்டங்கள் எல்லாம் வந்து நிறைவேற்றப்பட்டால் எங்கள் பகுதி மக்களும் மற்ற பகுதி மக்களுடன் சேர்ந்து உலாவி வருவதற்கு இடம் ஏற்படும். ஆகவே, அவைகளையெல்லாம் பரிசீலனை செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். இவைகளை எடுத்து நிறைவேற்றுவதற்கு கூடிய விரைவில் மந்திரிகள் எவ்வளவு தூரம் சீக்கிரத்தில் நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டுமோ அவ்வவு சீக்கிரத்தில் எடுத்துக் கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். என் உரையை இத்துடன் முடித்துக்கொள்ளுகிறேன்.

* SRI P. K. MOOKIAH THEVAR: கனம் தலைவர் அவர்களே, நமது மேன்மை தங்கிய கவர்னர் பெருமானுடைய உரையில் குறிப்பிடத்தக்கது. நாட்டு மக்களிடத்தில் உயிர் பிரச்னையாக இருக்கிற விலைவாசியைப் பற்றி குறிப்பிட்டிருப்பது அதைப் பற்றி உரையில் குறிப்பிட்டிருந்தாலும் அதற்கு எடுத்துக் கொண்ட நிவாரணம் என்ன என்பதைப் பற்றி குறிப்பிடவில்லை. மக்களுக்கு ஏமாற்றத்தை அளிக்கும் வகையில் அது அமைந்திருக் கிறது. இப்பொழுது ஆளும் அரசாங்கத்திற்கு பதின்மூன்று வருஷம் அவகாசம் கொடுத்தும்கூட அவர்களுக்கு வேண்டிய அதிகாரம் கொடுத்தும் கூட விலைவாசிகளைக் கூட குறைக்க வேண்டிய நடவடிக்கைகளை அவர்கள் இன்னும் எடுத்துக் கொள்ளவில்லை. முதல் ஐந்தாண்டுத் திட்டத்திற்கு என்று 250 கோடி ரூபாயும் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திற்கு என்று ஐயாயிரம் கோடி ரூபாய் செலவு செய்திருந்தும் அவற்றில் 13 கோடி ரூபாய் மக்களிடத்தில் விளம்பரம் செய்வதற்கு என்று செலவு செய்யப்பட்டிருக்கிறது. அப்படியிருந்தும் விலைவாசி களைக் குறைக்க முடியவில்லை. அது ஒரு பெரிய பிரச்சனையாக இன்னும் இருந்து வருகிறது. அப்படி இருப்பது மிகவும் வருந்தக்கூடிய விஷயமாகத்தான் இருக்கிறது.

கவர்னர் அவர்கள் எட்டு மாதங்களுக்கு முன்னதாகத்தான் ஒரு உரையை நிகழ்த்தி இருக்கிறார். அதற்குள் புரட்சிகரமான மாறுதல் ஒன்றும் ஏற்படவில்லையே என்று எதிர்கட்சிக்காரர்கள் குறை கூறுகிறார்கள் என்று பல ஆளும் கட்சிக்காரர்கள் சொல்லலாம். ஆனால் புரட்சிகரமாக ஒன்றும் நடைபெறவில்லை என்றால் நாட்டில் புரட்சி ஏற்படத்தான் செய்யும் என்று சொல்ல வேண்டி வருகிறது. சுதந்திரம் அடைந்த பிறகு இப்படிப்பட்ட உரை அடிக்கடி நிகழ்ந்துகொண்டுதானிருக்கிறது. எந்த விதமான புரட்சிகரமான மாறுதல் ஏற்பட்டதாகத் தெரிய வில்லை. ஏராளமாக பணம் தான் செலவு செய்யப்பட்டிருக் கிறதே தவிர வேறு ஒன்றும் இல்லை. அதிகப்படியாக அரசாங்கம் கடன் தான் பட்டிருக்கிறது. அந்த நிலைமையைத்தான் கண்டிருக்கிறது. சுமார் 4,964 கோடி ரூபாய் கடன் வாங்கி இருப்பதாகத் தெரியவருகிறது. இவ்வளவு பெரிய தொகை செலவு செய்யப்பட்டிருந்தும் வேண்டிய புரட்சிகரமான மாறுதல் ஏற்பட்டதாகத் தெரியவில்லை. ஆனால் பல திட்டங்களை நிறை வேற்றுகிறோம் என்று சொல்லுகிறார்கள். அவைகளைக் கண்டு வெளி நாட்டிலிருந்து வந்து பார்க்கக்கூடியவர்கள் கண்டு

[Sri P. K. Mookiah Thevar] [10th August 1960

பாராட்டுகிறார்கள் என்றும் சொல்லுகிறார்கள். வெளிநாடுகளிலிருந்து வருகிறவர்களுக்கு நாம் வரவேற்பு அளித்து எல்லாவற்றையும் காண்பித்தால் அவற்றைக் கண்டு மரியாதைக்காக அவர்கள் புகழாமல் வேறு என்னதான் சொல்லுவார்கள். ஆகவே அவர்கள் புகழ்வதை வைத்துக் கொண்டு ஏதோ செய்து விட்டோம் என்று சொல்லிக் கொள்வதில் பிரயோசனம் இல்லை. ஆனால் இங்கே வாழ்கிற மக்கள் என்ன நினைக்கிறார்கள் என்பதைப் பார்க்க வேண்டும். இந்த விலைவாசி உயர்வினால் அவர்களால் எந்த திட்டத்தையும் கண்டு மகிழ முடியவில்லை. அவர்களுடைய வாழ்க்கைத்தரம் எந்த விதத்திலும் உயரவில்லை. விலைவாசியின் உயர்வால் நாட்டில் பட்டினிச் சாவுதான் அதிகமாகிக்கொண்டு வருகிறது. பிச்சை எடுப்பவர்களின் எண்ணிக்கைதான் அதிகமாகிக் கொண்டு வருகிறது. எங்கு பார்த்தாலும் தற்கொலை செய்துகொள்ளக்கூடிய நிலையை பத்திரிகையில் நாம் பார்க்கிறோம். ஐந்தாறு குழந்தைகளை வைத்துக் கொண்டிருக்கக்கூடிய குடும்பத் தலைவர்கள் அவைகளை வைத்துக் காப்பாற்ற முடியாமல் தற்கொலை செய்து கொள்வதையும், தான் எதற்காக தற்கொலை செய்து கொள்கிறேன் என்று எழுதி வைத்து விட்டு தற்கொலை செய்து கொள்வதையும் நாம் அடிக்கடி பார்க்கிறோம். அந்த நிலைமைக்குக் காரணம் என்ன? இந்த விலைவாசியின் உயர்வு தான் அதற்குக் காரணம். இந்த 13 வருஷ ஆட்சிக்குப் பின்னால் கூட அவர்களால் விலைவாசிகளைக் கட்டுப் படுத்த முடியவில்லையானால் அவர்களால் ஆட்சி செய்ய முடியவில்லை என்றுதான் சொல்ல வேண்டும். இதைப் பற்றி சொன்னால் சிலருக்குக் கோபம் வருகிறது. சாக்கடையில் தேக்கம் ஏற்பட்டால்தான் பூச்சி புழுக்கள் தானாகவே ஏற்படுகின்றன. அதனால் குற்றம் யாருடையது என்பதை கவனிக்க வேண்டும். அதனால் கோபம் வந்து பிரயோசனம் இல்லை. விலைவாசி அதிகரித்திருப்பதன் நிலைமை இந்த அரசாங்கத்திற்கு நன்றாகத் தெரியா விட்டாலும் மத்திய அரசாங்கத்திற்கு நன்றாகத் தெரிந்திருக்கிறது. இவர்கள் நடவடிக்கை எடுத்துக்கொள்ளாவிட்டாலும் மத்திய அரசாங்க உணவு மந்திரி நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிறார். கோடிக் கணக்கான ரூபாயைக் கடன் வாங்கியாவது அமெரிக்காவில் இருந்து தானியங்களை நிறைய வாங்கி வைத்திருக்கிறார். இவ்வளவு ஐந்தாண்டு திட்டங்கள் போட்டு நிறைவேற்றியும் இதுதானா பயன் என்று கேட்க விரும்புகிறேன். இவ்வளவு ரூபாய் செலவு செய்த பிறகும் வெளி நாட்டிலிருந்து தானியங்களை வாங்கி வரவேண்டிய அவசியம் என்ன? இப்படிப்பட்ட நிலைமையில் விலைவாசிகளை இன்னும் குறைக்க முடியவில்லை என்றால் அதற்கு முக்கிய காரணம் என்ன? அதற்குக் காரணம் அரசாங்கத்தின் பொருளாதாரக் கொள்கையில் ஏதோ கோளாறு இருப்பது தான் அதற்குக் காரணம். அடிக்கடி நோட்டுக்களை அச்சடிப்பதும், கடன் வாங்குவதும் ஊதாரித்தனமான செலவும் இன்ப்ளேஷனும் தான் இதற்குக் காரணம். இதையேதான் பல நிபுணர்களும் சொல்லுகிறார்கள். ஸ்டேட் ட்ரேடிங் ஸ்கீமும் இதற்கு ஒரு பரிகாரமாக காட்டப்பட்டது. அரசாங்கம் இப்பொழுது

10th August 1960] [Sri P. K. Mookiah Thevar]

வியாபாரத்தை எடுத்து நடத்துகிருர்கள். அவர்களே சிமெண்ட், சர்க்கரை முதலியவைகளை வியாபாரம் செய்கிருர்கள். அப்படி இருந்தும் ஏன் அவைகளுக்கு பற்ருக்குறை, அவைகளின் விலை உயர்வதற்குக் காரணம் என்ன? முதலாவது, இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டங்கள் போட்டும் விலை வாசிகளைக் குறைக்க முடியவில்லையென்ருல் மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் மக்களுக்கு என்ன நம்பிக்கை ஏற்படப் போகிறது.

பஞ்சாயத்துச் சட்டத்தை அமுலுக்குக் கொண்டு வரப் போகிருர்கள், அதன் மூலம் உற்பத்தியைப் பெருக்கப் போகிருர்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதன் மூலம் உற்பத்தியை பெருக்குவதற்கு வேண்டிய வசதிகளைச் செய்து கொடுக்கப்போவதாகவும் சொல்லப்படுகிறது. முதல் இரண்டு திட்டங்களைப் பார்க்கும் போதே மக்களுக்கு நம்பிக்கை இல்லை. விலைவாசிகளைக் கட்டுப் படுத்த முடிய வில்லை. அந்த நிலைமையில் மூன்ருவது திட்டத்தில் அவர்களுக்கு என்ன நம்பிக்கை இருக்கப்போகிறது. மூன்ருவது ஐந்தாண்டு திட்டத்திற்கு 1,200 கோடி ரூபாய் செலவு செய்யப் போவதாகச் சொல்லப்படுகிறது. அதற்கு வேண்டிய பணத்திற்கு இன்னும் அதிகப்படியான வரி போடப் போவதாகவும் சொல்லப் படுகிறது. சிறு சேமிப்பு, டெபிசிட் பைனன்சிங் முதலியவை களினல் விலைவாசிகள் அதிகரிப்பது போன்று இன்னும் அதிகமாக விலைவாசிகள் உயருவதற்கு இடம் ஏற்படுகிறது. அதனல் மக்கள் எவ்வளவோ கஷ்டப்படக்கூடிய நிலைமை ஏற்படப் போகிறது. அதனல் அவர்கள் இந்த மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தை எவ்வளவு தூரம் எதிர் பார்ப்பார்கள் என்பதை யோசித்துப் பார்க்க வேண்டும். இப்பொழுது அரசாங்கப் பொருளாதாரக் கொள்கையில் ஏதோ கோளாறு இருப்பதாகத் தெரிய வருகிறது. இன்னும் அதிகப்படியான கோளாறுகள் ஏற்படுவதற்கு இடம் ஏற்படுவதற்கு இருக்கிறது. அதனல் மக்களுடைய நம்பிக்கை இல்லாமல் போய்விடுகிறது. ஆகவேதான் திட்டங்களில் மக்களுக்கு நம்பிக்கை இல்லை என்பதை மந்திரிகள் தெரிந்து கொண்டுதான் அவர்கள் கிராம மக்களுடன் நேரடி தொடர்பு கொள்ள வேண்டும் என்பதற்காக கிராமம் கிராமமாக சுற்றுப் பிரயாணம் செய்ய ஆரம்பித்து விட்டார்கள். அவர்களுடைய மனதை மாற்ற வேண்டும் என்ற அடிப்படையில் அவர்கள் சுற்ற ஆரம்பித்து விட்டார்கள். ஆனல் அவர்களுக்குத் திட்டங்களால் உண்மையான பலன் கிடைக்கவில்லை. அப்படி கிடைத்திருந்தால் அவர்கள் தலைநகரமாகிய சென்னையிலேயே உட்கார்ந்து கொண்டு எல்லாவற்றையும் பார்த்துக் கொள்ளுவார்கள். ஆகவேதான் அவர்கள் கிராமங்களில் சுற்றக் கூடிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. எவ்வளவோ திறமையுள்ளவர்கள்தான் மந்திரிகளாக வந்திருக்கிருர்கள். அவர்கள் மந்திரிகளாக வந்து விட்டதனல் கிராமங்களில் பிரசாரம் செய்வதற்கு காங்கிரஸ் கட்சிக்கு ஆள்கள் இல்லாமல் போய்விட்டது. அதனல் இவர்களே சென்று பிரசாரம் செய்ய வேண்டியதாகப்

போய்விட்டது. அவர்கள் திறமைசாலிகளாக இருப்பதால்தான் இரண்டு வேலையும் செய்ய வேண்டியதாக இருக்கிறது. வேண்டுமானாலும் அவர்கள் மந்திரிப் பதவியை ராஜீனமா செய்துவிட்டாகிலும் கிராமங்களுக்குச் சென்று கட்சிப் பிரசாரம் செய்வதற்கு முற்படலாம் என்று சொல்லிக் கொள்ளுகிறேன். அதற்கு அவர்கள் தகுதியுள்ளவர்கள்தான். அப்படிச் செய்தால்தான் அவர்களுக்கு கிராம மக்களுடன் நேரடி தொடர்பு இருக்கும். திட்டம் தோற்றுப் போய் விட்டது என்பதற்காக அவர்கள் இந்த முறையைக் கையாண்டிருக்கிறார்கள். இவர்கள் இந்த விதமாகக் கிராமங்களுக்குச் சென்று கட்சிப் பிரசாரம் செய்வதால் அதிகப்படியான செலவாகிறது. பல உத்தியோகஸ்தர்கள் அவர்களுடன் செல்ல வேண்டியதாக இருக்கிறது. போலீஸ்காரர்கள் வரவேண்டியதாக இருக்கிறது. மந்திரிகள் வருகிறார்கள் என்றால் முதல் நாளே போலீஸ்காரர்கள் ஸ்டேஷனில் வேண்டிய ஏற்பாடுகளைச் செய்ய வேண்டியதாக இருக்கிறது. ரயில் வந்தவுடன் அவர்கள் காரேஜில் மந்திரி இருக்கிறாரோ, இல்லையோ அதைப் பார்த்து சலாம் போட வேண்டியதாக இருக்கிறது. இம்மாதிரி பல ஹிம்சைகள் உத்தியோகஸ்தர்களுக்கு இருக்கின்றன. இரண்டு ஆயிரம் ரூபாய் செலவில் கட்டப்பட்ட பள்ளிக்கூடத்தை திறந்து வைப்பதற்கு செலவு நாலு ஆயிரம் ரூபாய் ஆகிறது. இதையெல்லாம் தான் விலைவாசிகளின் உயர்வுக்குக் காரணம் என்று சொல்லலாம். இதனால்தான் டெபிசிட் பைனான்சிங் ஏற்படுகிறது.

THE HON. SRI P. KAKKAN: கனம் அங்கத்தினர் இப்பொழுதுதான் ஒரு பள்ளிக்கூடத்தை வந்து திறந்து வைக்க வேண்டும் என்று சொன்னதாகச் சொல்கிறார் கனம் அமைச்சர் ராமய்யா அவர்கள்.

SRI P. K. MOOKIAH THEVAR: நான் அழைக்கவில்லை. நாங்கள் என்ன சொன்னாலும் சில மக்கள் எடுத்துக் கொள்ள மாட்டேன் என்கிறார்கள். அதனால் ஜனங்களுடைய பிரதிநிதி என்ற முறையில் அவர்களை திருப்தி செய்ய மந்திரிகளை அழைக்க வேண்டியதாக இருக்கிறது. அவர்களே வந்து திட்டங்களைப் பற்றி நேரடியாகச் சொல்ல வேண்டும் என்பதற்காகத்தான் அப்படி அழைக்கிறோம். ஜனங்களுக்கு நம்பிக்கை வரவேண்டும் என்பதற்காகத்தான் அப்படி அழைக்கின்றோம். மக்கள் திட்டம் திட்டம் என்று பழக்கப்படுத்தப்பட்டிருக்கிறார்கள். எதற்கெடுத்தாலும் மந்திரிகளை எதிர்பார்க்க வைத்திருக்கிறீர்கள். மக்களுடைய மனதை திருப்ப வேறு வழி இல்லை. அதனால்தான் அவர்கள் வந்து ஆக வேண்டும் என்று நிர்ப்பந்தம் செய்ய வேண்டியதாக இருக்கிறது. இதற்கு உதாரணமாக திருவாழ்த்தான் கதை ஒன்றைச் சொல்ல விரும்புகிறேன். அதாவது திருவாழ்த்தான் குதிரை வளர்த்த கதை என்று சொல்லுவார்கள். திருவாழ்த்தான் குதிரை வளர்த்தான். ஒரு இடத்தில் அதனை அடைத்து வைத்து தீனி போடாமல் வைத்திருந்தான். பல நாள் அப்படி தீனி இல்லாமல் இருந்த அந்தக் குதிரை பாதுஷா எட்டிப் பார்த்தபோது அவருடைய தாடியை புல் என்று பிடித்து

இழுத்துக்கொண்டதாம் என்று கதை சொல்லுவார்கள். அப்படி இன்றைய தினம் விலைவாசிகள் எல்லாம் ஒரேயடியாக ஏறிப்போக, மக்கள் எல்லாம் பட்டினியால் திண்டாட விட்டு விட்டு இருக்கும் வேளையில் திட்டம் திட்டம் என்று பிரசாரம் செய்யும் போது மக்கள் அதை அப்படியே வேறு வழியில்லாமல் அது Plan mongers ஆக பிடித்து கொள்கிறார்கள் இன்று. ஆகவே அவர்களுடைய கருத்தைத்தான் நாங்கள் பிரதிபலிக்கிறோம், உங்களை அழைக்கிறோம் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

இன்னொன்று முக்கியமானது: ஆலயங்கள் புனிதத் தன்மை வாய்ந்தவை. அவைகள் இன்று வெறும் விளம்பர ஸ்தலமாக மாறிக்கொண்டு வருகின்றன என்பதை தெரிவிக்க விரும்புகிறேன். ஒரு சமயம் தமிழ் நாட்டுக் கோயில் ஒன்றைப் பாத்துவிட்டு மதிப்பிற்குரிய நேரு அவர்களே குறிப்பிட்டிருக்கிறார்கள். “இது கோவிலா அல்லது விளம்பரப் போர்டா” என்று கேட்டார்கள். காரணம் விளக்குகள் மூலம் இன்னும் சில மண்டபங்களில் தர்மத்தைச் செய்தவர்களுடைய பெயர்கள் எல்லாம் எழுதி விளம்பரப் படுத்தப்படுகின்றன. சில கவிதைகள் எழுதி அதைக் கல்வெட்டில் புதைத்து அதை எழுதியவர்கள், கல் உதவியவர், டிரஸ்டிகள் இப்படி எல்லோருடைய பெயர்களும் பொரிக்கப்பட்டு புதைக்கப்பட்டு வருவது மிகவும் இழிவானதாகும். இப்படி நம்முடைய ஆலயங்களில் செய்யப்படும் செய்கை நம்முடைய ஆலய புனிதத் தன்மைக்கும், தர்ம குணத்தைப் பாதிக்கின்ற அளவில் இருக்கக் கூடாது என்று இந்தச் சந்தர்ப்பத்தில் தெரிவித்துக் கொள்கிறேன்.

இன்னும் எங்கள் பகுதிக்கு ஸ்காலர்ஷிப் பணம் கொடுப்பது பற்றி நமது அமைச்சர்களிடத்தில் நேரில் சொன்னேன். அவர்கள் உடனே கவனித்து ஏற்பாடு செய்கிறார்கள். இப்படி எல்லோரும் கவனத்திற்கு வரும் விஷயங்களை கவனித்துச் செய்தாலுங்கூட எதிர்க்கட்சியில் இருக்கிறவர்கள் இன்னும் இருக்கப்பட்ட குறைகளை எடுத்துச் சொன்னால்தான் அவர்களால் நல்ல முறையில் பணி செய்ய முடியும் என்பதற்காக குறைகள் சொல்கிறோமே தவிர குறைகள் சொல்லவேண்டுமென்பதற்காக அல்ல. உடனடியாக இருக்கப்பட்ட பிரச்னைகளை எல்லாம் நன்கு கவனித்துச் செய்ய வேண்டுமென்பதற்காக நான் இவற்றையெல்லாம் தெரிவித்துக்கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

* Sri A. E. CHANDRASEKHARA NAYAGAR: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, மேன்மைதங்கிய கவர்னர் பெருமான் நிகழ்த்திய உரைக்கு நன்றி தெரிவித்து ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். நம்முடைய ராஜ்யத்தில் மின்சார விஸ்தரிப்பு, நீர்ப்பாசன வசதியைப் பெருக்குதல், மற்றும் பல தொழில்களை வளம்பெறச் செய்தல் ஆகியவற்றில் தக்க நடவடிக்கைகள் பலவற்றை சர்க்கார் எடுத்துக்கொண்டிருப்பதற்காகப் பாராட்டுகிறேன். பலவகையிலும் நம் ராஜ்யம் சிறந்த

[Sri A. E. Chandrasekhara Nayagar] [10th August 1960

முறையில் முன்னேறி வருகிறது. மேலும் நம் ராஜ்யத்தில் பல நல்ல தொழில் திட்டங்களை அமைத்து அபிவிருத்தி செய்வதற்கும் முயற்சி செய்து கொண்டிருப்பதைப் பாராட்டுகிறேன்.

அடுத்தபடியாக மொழி விஷயமாக ஒரு குழப்பமான நிலைமையை இப்போது நம் ராஜ்யத்தில் உண்டாக்கியிருக்கிறார்கள். அதைக் கண்டிப்பாக மாற்றியே தீரவேண்டும். இந்தியைக் கட்டாய பாடமாக ஆக்கித் தீரவேண்டுமேயொழிய இப்படி இரண்டுங்கெட்டான் நிலைமையில் வைத்துக் கொண்டிருக்கக் கூடாது. ஏதோ ஒரு சில கட்சிகள், பத்திரிகைகள் இதை எதிர்க்கின்றன என்ற காரணத்திற்காக நாம் திட்டவட்டமான ஒரு முடிவுக்கு வராமல் இருப்பது சரியல்ல என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக சமீபத்தில் நடந்த மத்திய சர்க்கார் ஊழியர்கள் ஸ்ட்ரைக் சம்பந்தமாக சர்க்கார் கடுமையாகவும், உறுதியாகவும் நடந்து கொண்டதற்காகப் பாராட்டுகிறேன். சர்க்கார் அப்படி நடந்துகொள்ளவில்லை என்றாலும் மக்கள் அப்படி நடந்து கொண்டிருப்பார்கள். பல விடங்களில் மக்களே வேலைநிறுத்த காலத்தில் முன்வந்து சர்க்கார் பணிகளைச் செய்திருக்கிறார்கள். ஆகவே இந்தமாதிரி தேசீயத்திற்கு விரோதமான செயல்களில் யார் இறங்கினாலும் அதை மக்கள் ஆதரிக்கமாட்டார்கள். மேலும் இனிமேல் அரசியல் கட்சிகள் இந்தச் தொழிற்சங்கங்களில் தலையிட்டு நிலைமையைக் குலைக்காமல் பார்த்துக்கொள்ளவேண்டியது மிகவும் அவசியம் என்று தெரிவித்துக்கொள்கிறேன். அரசியல் கட்சிகள் உள்ளே நுழைந்து அரசியல் நோக்கத்திற்காக ஊழியர்களை, தொழிலாளர்களைத் தவறாக இழுத்துக்கொண்டு போவது மிகவும் கண்டிக்கத்தக்கதாகும். சட்ட மூலம் இதை தடை செய்ய வேண்டும். ஆகவே இந்தமாதிரியாகச் செய்வது மிகவும் அனுகூலமாக இருக்கும் என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் முடிவடையும் தருவாயில் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் ஆரம்பிக்கும் கட்டத்தில் நாம் இருக்கிறோம். முதல் இரண்டு திட்டங்களினால் நமக்கு நிறைய அனுபவங்கள் ஏற்பட்டிருக்கின்றன. இப்போது முன்பு போட்ட திட்டங்கள் எல்லாம் கொஞ்சம் கொஞ்சமாகப் பலன் அளிக்கும் நிலையை எட்டியிருக்கிறது. ஆனால் ஒருவகையில் பின் தங்கியவர்கள், பிற்போக்கான பிரதேசத்தில் உள்ளவர்கள் பயன் அடைய முடியாத நிலைமை இருக்கிறது. ஆகவே நாம் போடுகிற மூன்றாவது திட்டமும் முன்னேற்றம் அடைந்தவர்களுக்கு முன்னேற்றம் அளிப்பதாக, முன்னேற்றம் அடைந்த பிரதேசம் முன்னேற்றம் அடையும்படியாகப் போட்டுவிடக் கூடாது. பின்தங்கிய பிரதேசம், பின் தங்கிய மக்கள் இவர்களுக்கு அனுகூலம் ஏற்படும் வகையில் திட்டமிடப்பட வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். சமுதாயத்தில் உள்ள ஏற்ற தாழ்வுகளை நீக்கக் கூடிய வகையில் திட்டம் அமைந்தால் தான் வெற்றியுடையதாக இருக்குமே

10th August 1960] [Sri A. E. Chandrasekhara Nayagar]

யொழிய இல்லாவிட்டால் பயன் இல்லை. மேலும் திட்டக் கமிஷன் முதல் ப்ளாக் வரையில் நிர்வாகத் தொடர்பு இருக்க வேண்டும். அப்போது தான் வட்டார வளர்ச்சியில் நல்ல முன்னேற்றம் காண முடியும். சாதாரணமாக இப்போது எல்லா பகுதியிலும் திட்டத்திற்கு ஆகும் பாதிச் செலவை அந்த வட்டாரத்தவர்களே கொடுக்கவேண்டும் என்று இருப்பது சரியல்ல. பிற்பட்ட வட்டாரங்களில் நிலைமையைக் கவனித்து அவர்களுடைய சராசரி வருமானம் தேசத்தின் சராசரி வருமானத்திற்கு குறைவாக இருந்தால் அவர்களுக்கு விதிவிலக்குக் கொடுத்தாகிலும் பல திட்டங்களை அங்கே நிறைவேற்றினால் தான் அந்தப் பிரதேசங்கள் வளர்ச்சி அடைய முடியும். இப்போது கிராமாந்திரங்களில் அநேகம் பேர்கள் வேலை இல்லாமல் திண்டாடுகிறார்கள். அவர்களுக்கு மூன்றாவது திட்டங்களில் வேலையும் கொடுத்து, உணவும் கொடுத்து திட்டங்களை வெற்றிகரமாக நிறைவேற்ற வேண்டும். குடும்பத் திட்டம் என்று சொல்கிறோம். குடும்பத்திலுள்ள அனைவரும் உணரவேண்டுமென்றால் ஒவ்வொரு வட்டார வளர்ச்சித் திட்டத்திற்கும் ஒரு திட்டம் தயார் செய்து அதை வெளியிட்டு ஒவ்வொருவரும் புரிந்து கொள்ளும்படிச் செய்தால் தான் மக்களை திட்டங்களின் பின்னால் கொண்டு செல்ல முடியும். திட்டங்களுக்காக பத்திரிகைகளை நாம் நல்லமுறையில் பயன் படுத்திக் கொள்ள வேண்டும். பத்திரிகைகள் இருந்தால்தான் திட்டங்கள் நல்லமுறையில் நிறைவேற முடியும். ஆகவே எல்லாப் பத்திரிகைகளும், திட்டத்திற்காக அவர்களுக்கு ஏதாவது ஒரு ஊதியம் ஏற்பாடு செய்து பத்திரிகைகளில் ஒரு பக்கம் அல்லது தினசரி இரண்டு "காலம்ஸ்" திட்டத்தைப் பற்றி வெளியிடவேண்டுமென்று விதியை சர்க்கார் ஏற்படுத்தினால் திட்டங்கள் நல்லமுறையில் வெற்றிபெற அவை மிக உதவியாகயிருக்கும். கிராம மக்களும் திட்டங்களைப் பற்றி புரிந்து கொள்ள வேண்டும் . எலிமெண்டரி ஸ்கூல்கள், கிராம அதிகாரிகள் இவர்கள் மூலம் திட்டங்களை எடுத்துச் சென்று பரப்ப அவர்களைப் பயன்படுத்திக் கொள்ளலாம். பின்னர், ஜில்லாக்களிடையே உள்ள ஏற்றத்தாழ்வுகள் மேல் போய்க் கொண்டேயிருக்கிறது. அதைத் தடுக்க முடியவில்லை. ஆக, ஜில்லாக்களிடையே ஏற்றத்தாழ்வுகளை உண்டாக்காமல் பாலன்ஸ்ட் முறையில், சம சந்தர்ப்பம் அளிக்கும் முறையில் நமது திட்டங்களும் செயலும் இருக்க வேண்டும். அப் பொழுதுதான் தேசத்திலுள்ள அனைவரும் பொருளாதார அபி விருத்தியடைய முடியும். அப்படியின்றி, ஒரு ஜில்லா உயர்ந்து, மற்றொரு ஜில்லா தாழ்ந்த நிலையில் இருக்கிறது என்றால், வளர்ச்சிக் குறைவாக உள்ள ஜில்லா எந்த முறையில் அமைந் திருக்கிறது என்று பார்த்து அதற்குத் தகுந்தாற்போல் அதை எந்த முறையில் அபிவிருத்தி செய்வது என்பதற்கு வேண்டிய வழி வகைகள் வகுக்க வேண்டும். கவர்னர் அவர்கள் உரையில், தொழில்கள் பரவலான முறையில் அமைய வேண்டுமென்று சொல்லியிருக்கிறார்கள். ஜில்லாக்களிடையே பரவலாக காரியங்கள் செய்யவேண்டுமென்று சொல்லியிருக்கிறார்கள். வட ஆற்காடு ஜில்லா எந்த விதமான வாய்ப்புமின்றி மிக வறண்ட

1 p.m.

ஜில்லாவாகயிருக்கிறது. ஒன்று குறிப்பாக தெரிவிக்க விரும்பு கிறேன். நீர்ப்பாசனத்திற்காக ஐந்து ஏக்கருக்கு ஒரு கிணறு வீதம் கண்டிப்பாக இருக்க வேண்டுமென்று ஒரு திட்டம் வகுக்க வேண்டும். அதை, சர்க்காரே எடுத்து மான்யம் கொடுத்து நிலக்காரனிடமிருந்து வசூல் செய்தாலும் பரவாயில்லை. தரை மட்டத்திற்கு கீழுள்ள ஜலம் வட ஆற்காடு ஜில்லாவில் அதிக மாகயிருக்கிறது. ஆனால் அதை பயன்படுத்திக் கொள்ளும் வாய்ப்புகள் வட ஆற்காடு ஜில்லாவில் இல்லை. அதை ஏற்படுத்திக் கொள்ள ஐந்து ஏக்கருக்கு ஒரு கிணறு கண்டிப்பாக இருக்கவேண்டுமென்று ஏற்படுத்தி, லிப்ட் இரிகேஷன் வசதி செய்து, காம்ப்ரிஹென்ஸீவ் ஸ்கீம் ஒன்றை பரீட்சார்த்தமாக தயார் செய்து அதை அமுலுக்கு கொண்டு வந்தால் விவசாயத்தில் தஞ்சாவூருக்கு அடுத்தபடியாகயிருக்கும் வட ஆற்காடு ஜில்லா சிறந்த முறையில் உணவு உற்பத்தியைப் பெருக்க உதவியாக இருக்கும். பின்னர் வருங்கால வளர்ச்சிக்கு கிருஷ்ணு, கோதாவரி ஆற்றுத் தண்ணீரினுல் வட ஆற்காடு செங்கற்பட்டு போன்றவிடங்கள் பயன் அடையச் செய்யும் படியான திட்டத்தையும் செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். (மணியடிக்கப்பட்டது.) மேலும் வட ஆற்காடு ஜில்லாவில் உள்ள காட்டு வளத்தையும் பெருக்கி அதையும் பயன்படுத்திக் கொள்வதற்கு வேண்டிய திட்டங்கள் வகுக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

Sri S. M. ANNAMALAI: சட்டமன்ற உப தலைவர் அவர்களே, இந்த மன்றத்தின் முன்னுல் மூன்று தினங்களாக நடைபெறக் கூடிய கவர்னர் அவர்கள் உரையின் மீது நானும் ஒரு சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். ஆளும் கட்சியைச் சார்ந்த கொறடா அவர்களும் ஏதோ திராவிட முன்னேற்றக் கழகத் தோழர்கள் சரணுகதியாகி விட்டார்கள், அவர்கள் வெற்றி விழா கொண்டாடுவதற்கு லாயக்கில்லை என்று கூட இந்த மன்றத்தில் பேசினுர்கள். ஆனுல் ஒன்றை நான் இந்த சட்டமன்றத்தில் எடுத்துக் கூற ஆசைப்படுகிறேன். திராவிட முன்னேற்றக்கழகம் கண்யமான முறையில் நடைபெறக் கூடிய ஒரு கட்சியாக இருப்பதால் பெரும் தலைவர்கள் என்று சொல்லக் கூடியவர்கள் உறுதிமொழி தந்த காரணத்தினுல் சென்னை மாநிலத்திற்கு வந்திருக்கக் கூடிய ஜனுதிபதி அவர்களுக்கு கறுப்புக் கொடி காட்டக் கூடிய நிகழ்ச்சியை நிறுத்தி விட்டோம். ஆனுல் இன்றுள்ள அமைச்சரவையும், அதே போல் ஆளும் கட்சியிலுள்ள சட்டமன்ற உறுப்பினர்களும் திராவிட முன்னேற்றக் கழகத்தினர் வேண்டுமானுல் கறுப்புக் கொடி காட்டிக் கொள்ளட்டும் என்று சொன்னுல் ஜனுதிபதி அவர்கள் 16-ம் தேதி வரையில் இங்கு இருக்கிறுர்கள், நாங்களும் அதைக் காட்ட தயாராயிருக்கிறோம் என்பதை இந்தச் சட்டமன்றத்தின் முன்னுல் எடுத்துச் சொல்ல ஆசைப் படுகிறேன். நாங்கள் வெற்றி விழா கொண்டாடினுேமா இல்லையா என்பது வேறு விஷயம். ஆனுல் சைனு உள்ளே புகுந்து, இந்திய ராணுவத்தினர் 17 பேர் இறந்து விட்டார்கள்

10th August 1960] [Sri S. M. Annamalai]

என்று சைனுக்காரன் சொல்லுகிருன், ஒன்பது பேர்கள் இறந்த தாக இவர்கள் கூறுகிருர்கள். இந்தப் புள்ளி விவரமே தெரியாது, அதில் வெற்றி பெற முடியாதிருக்கிறது இக்கட்சி. பாகிஸ்தான் நிலை இன்னும் முடிவு பெருமல் இருக்கிறது. போர்ச்சுகல்காரன் இந்நாட்டிலேயே சில பகுதியை இன்னும் வைத்துக் கொண்டிருக்கிருன், ஏறத்தாழ 13 ஆண்டுகளாகியும் கூட. இவற்றிற்கு வெற்றி விழா கொண்டாடாமல் இருக்கும் ஆளும் கட்சியைச் சார்ந்தவர்கள் எங்களைப் பார்த்து நீங்கள் வெற்றி விழாக் கொண்டாடாது சரணுகதி அடைந்து விட்டீர்களே என்று சொல்லுவது எவ்வளவு பொறுத்தமற்ற தாகும். மறுமுறை இங்கு சொல்கிறேன். ஆளும் கட்சியும், அமைச்சரவையும் வேண்டுமானுல் நீங்கள் கறுப்புக் கொடி காட்டுங்கள் என்று சொல்லுவார்களானுல் நாளைக்கே எங்கள் திராவிட முன்னேற்றக் கழகம் தன் செயல் குழுவைக் கூட்டி அதற்குண்டான முடிவை எடுத்து 16-ம் தேதி ஜனுதிபதி இம்மாநிலத்தை விட்டு வெளியே செல்வதற்கு முன்னர் கறுப்புக் கொடி காட்ட நாங்கள் தயாராயிருக்கிருேம் என்று இந்த சட்ட மன்றத்தின் முன்னுல் மீண்டும் எடுத்துச் சொல்ல விரும்பு கிறேன்.

கவர்னர் உரையைப் படித்துப் பார்க்கும் போது அவர்கள் சொல்லியிருக்கிருர்கள், எல்லா திட்டங்களும் நிறைவேறி விட்டன; இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 152 கோடி ரூபாய்க்கு செலவு செய்கிருேம் என்று சொல்லி 181 கோடிக்கு செலவழித்திருக்கிருேம், சில திட்டங்கள் வெற்றி கரமாக நடைபெற்றுவிட்டன. சில திட்டங்கள் அளவிற்கு மேல் நடைபெற்று விட்டன என்று சொல்லியிருக்கிருர்கள். விவசாயத்துறையை எடுத்துக் கொண்டால் இவர்கள் இரண்டாவது ஐந்தாண்டு திட்ட முடிவிற்குள் 12.79 லட்சம் டன் அளவு உணவு உற்பத்தியைப் பெருக்குவோம் என்று டார்ஜெட் கொடுத்தார்கள். அந்தத் திட்டம் நிறைவேறிற்ரு? அதற்கு கவர்னர் அவர்களே சொல்லுகிருர்கள், பத்து லட்சம் டன்தான் எங்களால் உற்பத்தி செய்ய முடிந்தது என்று உரையில் சொல்லியிருக்கிருர்கள். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் கீழ், 152 கோடிக்குப் பதிலாக 181 கோடி ரூபாய் செலவு செய்திருக்கிருேம் என்கிருர்கள். புள்ளிவிவரத்தில் வேண்டுமானுல் பணத்தில் இவ்வளவு காட்டலாமே தவிர, வேண்டுமானுல் இந்த மாநிலத்தில் கள்ள நோட்டு அச்சடிப்பது உள்பட 200 கோடிக்கு மேல் செலவு செய்திருந்தாலும் இரண்டாவது ஐந்தாண்டு திட்ட முடிவிற்குள் 12.73 லட்சம் டன் உணவு தான்யத்தை உற்பத்தி செய்வோம் என்று சொல்லிய இந்த சர்க்கார் திட்டமிட்டபடி உணவு தான்ய உற்பத்தியை செய்தார்களா என்ருல் கவர்னர் அவர்களே சொல்லுகிருர்கள் 10 லட்சம் டன்தான் முடிந்தது என்று. ஏன் இந்நிலை ஏற்பட்டது? விளாங்கு என்று சொல்வார்கள், அப்படி பாம்பு போல் ஒன்று உண்டு. பாம்பைக் கண்டால் அது தலையைக் காண்பிக்கும், அதே சமயத்தில் மீனைக் கண்டால் வாலைக் காண்பிக்கும். அப்படிப் பாம்பைக் கண்டால் தலை, மீனைக் கண்டால் வால் என்று காண்பிக்கும் விளாங்குக்

[Sri S. M. Annamalai] [10th August 1960

கொள்கையை இந்தச் சர்க்கார் வைத்துக் கொண்டிருக்கிறது. மிராசுதார்களைப் பார்த்து, உங்களுக்காக நல்ல கொள்கைகளை வைத்துக் கொண்டிருக்கிறோம், ஆகவே நீங்கள் பயப்படாதீர்கள். நாங்கள் நிலச் சீர்திருத்தச் சட்டம் கொண்டுவந்தாலும் உங்களை அது அதிகமாகப் பாதிக்காது என்று மிராசுதார்களைப் பார்த்து சொல்கிறீர்கள். அதே போல் ஏழை உழவர்கள், நிலச் சீர்திருத்தச் சட்டம் வருகிறது, ஆகவே நமக்கு அதனால் பலன் உண்டு என்று சர்க்காரை நம்பிக் கொண்டிருக்கும் நிலைமையில் இவர்களைப் பார்த்து உங்களுக்காக நிலச் சீர்திருத்தச் சட்டம் கொண்டு வந்திருக்கிறோம் என்று சொல்கிறீர்கள். பாம்பிற்கு தலையையும் மீனிற்கு வாலையும் காட்டும் விளாங்கைப் போல மிராசுதார்களைப் பார்த்து, நீங்கள் ஆறுதல் கொள்ளுங்கள் என்று சொல்லிவிட்டு, அதேபோல் உழவர்களைப் பார்த்தும் நீங்களும் ஆறுதல் கொள்ளுங்கள் உங்களுக்கு நன்மை செய்கிறோம் என்று சொல்லிக் கொண்டிருக்கிறது இந்த சர்க்கார். ஆக, இந்த சர்க்காருக்கு திட்டவட்டமான கொள்கை கிடையாது. நிலச் சீர்திருத்தச் சட்டத்தை எடுத்துக் கொண்டாலும் திட்டவட்டமான கொள்கை கிடையாது. பல சட்டங்கள் இந்த சட்ட மன்றத்தில் நிறைவேற்றப் பட்டிருக்கின்றன. நியாயவாரச் சட்டம், பண்ணையாள் பாதுகாப்புச் சட்டம், அதே போல் குத்தகை பயிரிடுவோர் பாதுகாப்புச் சட்டம் இது போன்ற பல சட்டங்கள் இந்த மன்றத்தில் நிறைவேற்றப் பட்டிருக்கின்றன. இந்தச் சட்டங்கள் உண்மையில் செயல்படுகிறதா என்றால் செயல்படவில்லை. குறிப்பாக, தஞ்சாவூர் மாவட்டத்தில் ஒரு சில விவசாயிகள், எங்களுக்கு சட்டப்படி கிடைக்க வேண்டியவை கிடைக்கவில்லை, எங்களுக்கு பாதுகாப்பு அளிக்க வேண்டுமென்று கேட்டால், உடனே எந்தப் போலீஸ் தோழர்களை பாராட்டுகிறீர்களோ அதே போலீஸை ஏவி அவர்களை அடக்க விடுகிறீர்கள்.

ஆகையினால் விவசாயிகளிடமிருந்து அதிகமான அளவுக்கு வாரம் வாங்கும் பகுதிகளில் போதுமான சட்டம் இருந்தும், உண்மையிலேயே அதனால் எந்த விதமான பலனும் இல்லாமல் இருந்து கொண்டிருக்கிறது. பிற மாவட்டங்களை எடுத்துக் கொண்டால் இம்மாதிரியான சட்டங்கள் இருக்கின்றதா என்று கேட்கக் கூடிய அளவில் நிலைமை இருந்து கொண்டிருக்கிறது. சமீபத்தில்கூட திட்ட கமிஷன் இந்த மாநிலத்தை கேட்டிருக்கிறார்கள், இது வரை நிறைவேற்றிய திட்டங்களில், முக்கியமாக நிலச் சீர்திருத்தச் சட்டம் எந்த அளவுக்கு இப்போது நிறைவேற்றப்பட்டிருக்கிறது என்கின்ற புள்ளிவிவரங்களை தரும்படியாகச் சர்க்காரைத் திட்டக் கமிஷன் கேட்டிருப்பதாக நாங்கள் அறிகிறோம். இந்த மாநில சர்க்கார் திட்டக் கமிஷனுக்கு புள்ளி விவரங்களை அறிவிக்கின்ற நேரத்தில் இந்த மாநிலத்தில் நடைபெறுகின்ற சட்டமானது எந்த முறையில் நடத்தப்படுகிறது என்கின்ற உண்மையான விவரங்களைக் கொடுக்க வேண்டும். அப்படிக் கொடுக்கின்ற பொழுது இதைப் பற்றி சரியான விதத்தில் விசாரணை செய்வதற்காக ஒரு கமிட்டியை நியமித்து, அல்லது ஒவ்வொரு பஞ்சாயத்துக் கவுன்சில் வாரியாக ஆங்காங்கு சிறு சிறு கமிட்டிகள் நியமித்து

10th August 1960] [Sri S. M. Annamalai]

போட்டிருக்கின்ற சட்டங்கள் எல்லாம் நல்ல முறையில் செயல் படுகின்றதா என்பதை ஆராய வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக, கைத்தறித்துணிகளைப் பொறுத்த வரையில் முன்பு கொடுத்த ரிபேட் இப்பொழுது குறைக்கப்பட்டிருக்கிறது. அதோடு பிற நாடுகளுக்கு ஏற்றுமதியாகிக் கொண்டிருந்த துணிகளின் அளவும் குறைந்துகொண்டு வருகின்றன. ஆகவே கைத்தறியாளர்களிடையே கஷ்டமான நிலைமை ஏற்பட்டிருக் கிறது. இதைப்பற்றி இரண்டொரு வார்த்தைகளாவது கவர்னர் அவர்களுடைய உரையில் குறிப்பிட்டிருப்பார்கள் என்று மிக ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். ஆனால் இதைப் பற்றி ஒரு வார்த்தை கூட அதில் இல்லை யென்பதை கூறி என் வார்த்தையை முடித்துக் கொள்ளு கிறேன்.

Sri P. G. KARUTHIRUMAN : பாயிண்ட் ஆப் இன்பர் மேஷன், கனம் உதவி சபாநாயகர் அவர்களே, முன்னால் பேசிய அங்கத்தினர் அவர்கள் பேசியது போல் சமீபத்தில் எங்களுடைய தூண்டுதலின் பேரில்தான் இந்தி எதிர்ப்புப் போராட்டம் கைவிடப்பட்டது, என்றும் அதாவது நேருஜியும் இந்த அமைச்சரவையும் கொடுத்த வாக்குறுதியின் பேரில்தான் கைவிடப்பட்டது என்றும், மக்களிடையே சொல்லி தப்பித்துக் கொள்ள வேண்டிய அவசியமில்லை. அவ்விதம் நாங்கள் யாரும் தூண்டவில்லை. ஆகவே இம்மாதிரியான விஷயங்களில் மட்டு மல்ல எப்போதுமே பெருந்தன்மையோடு நடந்துகொள்ள வேண்டும் என்று உங்கள் மூலமாக அவர்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

* Sri M. KANDASAMY PADAYACHI : சட்டமன்ற உப தலைவர் அவர்களே, நமது மேன்மை தங்கிய கவர்னர் பெருமான் அவர்கள் கொடுத்திருக்கின்ற அறிக்கையை வரவேற்று சில கருத்துக்களைச் சொல்ல ஆசைப்படுகிறேன். நமது அரசாங்கம் எவ்வளவோ திட்டங்கள் போட்டிருந்தும்கூட, நமது ஊழியர் களுடைய சம்பளங்கள் எவ்வளவோ அதிகப்படுத்தி கொடுத் திருந்தும் அவர்கள் வேலை நிறுத்தத்தில் இறங்க முன் வந்தார்கள். திட்டத்திலே எங்களுக்குப் போதிய ஊதியம் கிடைக்கவில்லை, அதிலும் சென்னை மாகாணத்தில் அதிகச் சம்பளம் கொடுத்திருக்கிறார்கள், அதைப் போன்று மத்திய சர்க்கார் ஊழியர்களுக்கும் கொடுக்க வேண்டும் என்ற முறையில் வேலை நிறுத்தத்தை ஆரம்பித்தார்கள், ஏதோ அரசாங்கம் நல்ல முறைகளை எல்லாம் கையாண்டதின் காரணமாக வேலை நிறுத்தத்தை கைவிட்டு விட்டார்கள். விலைவாசி அதிகமாய் இருக்கின்ற காரணத்தினால் எங்கள் ஊதியத்தையும் அதிகப் படுத்த வேண்டும் என்று அவர்கள் காரணம் சொன்னார்கள். உண்மையில் கவர்னர் பெருமான் அவர்கள் தங்களுடைய உரையில், பருவ மழை சரியாகப் பெய்யவில்லை என்றும், அதன் காரணமாக உணவு உற்பத்தி போதிய அளவுக்கு அதிகரிக்க வில்லை என்றும் கருத்து தெரிவித்திருக்கிறார்கள். உண்மையிலேயே மத்திய தர விவசாயிகளுக்கு பயிரிடுவதில் எத்தகைய லாபமும் இருக்கிறதாகத் தெரியவில்லை. அவர்களுக்கு

[Sri M. Kandaswami Padayachi] [10th August 1960

வேண்டிய வசதிகள் எல்லாம் கிடைக்கின்றதா என்பதையும் எதிர்க் கட்சி அன்பர்கள் பார்க்க வேண்டும். சமீபத்தில் பருவ மழை பெய்யாததின் காரணமாக பெரிய நீர்த் தேக்கங்களில் எல்லாம் மேட்டூர், பெரியாறு போன்ற நீர் தேக்கங்களில் எல்லாம் நீர் மட்டம் போதிய அளவுக்கு வரவில்லை என்பதை நாம் பார்க்கிறோம். இம்மாதிரி பருவ மழை சரியான சமயத்தில் பெய்யாத காரணத்தினால் ஏரி குளங்களில் எல்லாம் போதிய அளவு தண்ணீர் கிடைக்காத காரணத்தினால் காய்ந்த பூமிகளில் எல்லாம் மணிலா, கம்பு, எல்லாம் குறித்த காலத்தில் விளை வெடுக்க முடியாமல் போய்விட்டது. இவ்விதம் கஷ்டங்கள் எவ்வளவோ இருக்கின்றன. இங்கு கனம் அம்மையார் ஒருவர் குறிப்பிட்டது போல் ஓர் ஏருக்கு (கலப்பை) 4 ரூபாய் கொடுக்க வேண்டும். ஒரு தொழிலாளியை விவசாயத் தொழிலுக்கு அமர்த்த வேண்டுமானால் தினக்கூலி, 1½ ரூபாய் கொடுக்க வேண்டியிருக்கிறது. அதிலும் முன் காலம் போல் அல்ல, எல்லா இடங்களிலும் சங்கு (ஸைரன்) ஒலிக் கிறது. அதன் சப்தம் கேட்டவுடன் வேலையிலிருந்து போய்விடு வார்கள். அவர்களுடைய சம்பளங்கள் எல்லாம் உயர்ந்து கொண்டே இருக்கிறது. அதே போன்றுதான், கலப்பை, மண் வெட்டி போன்றவைகளுக்கும் விலைகள் எல்லாம் அதிகமான அளவில் கூடிக்கொண்டேயிருக்கிறது. முன்னால் இயற்கையாக தழை உரங்கள் எல்லாம் அதிகமான அளவில் கிடைத்துக் கொண்டிருந்தன. இப்போது காடுகள் எல்லாம் போய்விட்டன. இதன் காரணமாகவே போதிய அளவு தழை உரம் கிடைப் பதில்லை. இப்போது எல்லோருமே ரசாயன உரத்தைத்தான் எதிர்பார்த்துக் கொண்டு இருக்கவேண்டியிருக்கிறது. ஒரு மூட்டை நெல் 25 ரூபாய் என்றால் ஒரு மூட்டை உரத்திற்கு 30 ரூபாய் கொடுக்க வேண்டியிருக்கிறது. மேலும் பருவ மழை காலாகாலத்தில் பெய்யாவிட்டால் பயிர்கள் எல்லாம் நாசமாய் போய்விடுகிறது. இன்ஷூரன்ஸ் திட்டம் எதற்கெல்லாமோ இருக்கிறது. அப்படியானால் பயிர்களுக்கு மட்டும் ஏன் இந்தத் திட்டத்தைக் கொண்டுவரக் கூடாது என்று கேட்கிறேன். 2,000, 3,000 ரூபாய் செலவு செய்து பயிரிட்ட பிறகு, இம்மாதிரி நஷ்டங்கள் ஏற்பட்டு விட்டால் அரசாங்கம் அதற்கு ஏதாவது உதவி செய்தாக வேண்டும். சாதாரணமாக ஆரம்பத்தில் பயிரேற்றிவிட்ட உடனேயே அந்தந்த மணியக் காரரோ அல்லது கர்ணமோ அதற்கு வரி வசூலிப்பதற்கு மாதூல் எழுதிவிடுகிறார்கள். இதோடு அக்ரிகல்ச்சரல் இன்கம் டாக்ஸை பொறுத்தவரையில் ஏதோ 12½ ஏக்கர்களுக்கு மேல் இருந்தால்தான் போட வேண்டும் என்று சொல்லப் பட்டிருப்ப தாக தெரிகிறது. இவ்விதம் டாக்ஸ் போடுவதால் ஒன்றுமில்லை. ஆனால் அவர்களுக்கு வேண்டிய எல்லா வசதிகளையும் செய்து கொடுத்துவிட்டு இம்மாதிரி வரிகளைப் போட்டால், உண்மையில் அதை யாரும் ஆட்சேபிக்க மாட்டார்கள்.

அதோடு மட்டுமல்ல. நெய்வேலித் திட்டத்திலே 96 கோடி ரூபாயில் அதோடு சேர்த்து பல நல்ல திட்டங்களைச் செய்துக்கொண்டிருக்கிறார்கள் என்பது எல்லோருக்கும் தெரிந்த

10th August 1960] [Sri M. Kandaswami Padayachi]

விஷயம். கவர்னர் உரையிலே பல பகுதிகளில் தொழிற்சாலைகள் ஆரம்பிக்கப் போகிறோம் என்று சொல்லியிருக்கிறார்கள். எங்கள் பகுதியில் ஆங்கிலேயர் ஆட்சியில் ஒரு விமான நிலையம் கட்டப்பட்டு இப்போது அது ஒரு காடாக ஆகியிருக்கிறது. அந்த இடம் நெய்வேலிக்குச் சமீபத்தில் இருப்பதால், அங்கு நல்ல திட்டங்கள் வருவதால் அந்த விமான நிலையத்தில் தொழிற்சாலை திறந்தால் ரொம்பவும் வசதியாக இருக்கும் சேலம் ஜில்லாவிலே உருக்குத் தொழிற்சாலை வரப்போகிறது . எங்கள் பகுதியிலுள்ள விவசாய மக்களுக்கு உதவியாக எங்கள் பகுதியில் விவசாயக் கருவிகளை உற்பத்தி செய்யக்கூடிய அளவில் சேலம் ஜில்லா உருக்குத் தொழிற்சாலையின் கிளையையாவது ஏற்படுத்தலாம் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக மின்சாரத்தைப் பொறுத்த வரையில் நம்முடைய மாநிலம் முன் போக்கில் போய்க்கொண்டிருக்கிறது. பத்து ஆயிரம் கிராமங்களுக்கு மின்சாரம் கொடுத்திருக்கிறார்கள். எங்கள் பக்கத்தில் கிணற்று நீரை இறைத்துத்தான் பயிர் செய்ய வேண்டியிருக்கிறது. இதற்கு மின்சாரம் இருந்தால் நலமாக இருக்கும். பிளாக்கிலே கேட்டால் 100 சதவீதம் மின்சாரம் கொடுக்கவில்லை என்று சொல்லுகிறார்கள். அவர்கள் மொத்தத் தொகையையும் கொடுக்க சக்தியில்லாமல் இருக்கிறார்கள். வட்டார வளர்ச்சிப் பகுதியிலே மின்சாரத்தை விஸ்தரித்தால் விவசாய உற்பத்தி ஏற்படும்.

அடுத்தப்படியாக நமது மாநிலத்தில் பஞ்சாயத்து யூனியன்கள் வருகின்றன. இது வரவேற்கத்தக்கது. இதன் மூலம் மக்களாட்சியில் ஜனநாயக ரீதியில் நிறைவேற்றப்பட்டால் மக்களுக்கு வேண்டிய திட்டங்களை அநேகமாகச் செய்துகொள்ள முடியும். அதிலே கூட வட்டார வளர்ச்சியில் செய்து கொண்டுவரும் திட்டத்திலே முக்கியமாக 50 சதவீதம் கொடுக்க வசதியில்லாத இடங்களில் லோக்கலாக வாங்கிக் கொண்டோ அல்லது 25 சதவீதமாவது வாங்கிக்கொண்டோ கிணறு வெட்ட, ரோடு போட, பள்ளி வைக்க ஏற்பாடு செய்து நல்ல முறையில் பணியாற்ற வேண்டுமென்று கேட்டுக் கொண்டு எனது உரையை முடித்துக்கொள்கிறேன்.

DEPUTY SPEAKER : The House will now adjourn and meet again at 8-30 a.m. tomorrow.

The House then adjourned.

## IV.—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

1–25 p.m

### A. Statutory rules and orders.

93. *Notification issued with G.O. Ms. No.* 2215, *Revenue, dated* 11*th May* 1960, *under the Madras Hindu Religious and Charitable Endowments Act*, 1959 . [*Laid on the table of the House under section* 116 (3) *of the Madras Hindu Religious and Charitable Endowments Act*, 1959 (*Madras Act XXII of* 1959).]

[10th August 1960

94. *Notification issued with G.O. Ms. No.* 1081, *L.A., dated* 25*th June* 1960, *extending the term of office of the members of Santhiyur Panchayat (Thanjavur district) under section* 10 (1) *of the Madras Village Panchayats Act*, 1960. [*Laid on the table of the House under section* 10 (1) *of the Madras Village Panchayats Act*, 1950 (*Madras Act X of* 1950).]

95. *Notification issued with G.O. Ms. No.* 1076, *L.A., dated* 25*th June* 1960, *extending the term of office of members of Andamullipallam Panchayat (South Arcot district) under section* 10 (1) *of the Madras Village Panchayat Act*, 1950. [*Laid on the table of the House under section* 10 (1) *of the Madras Village Panchayat Act*, 1950 (*Madras Act X of* 1950).]

96. *Notification issued with G.O. Ms. No.* 1072, *L.A., dated* 25*th June* 1960, *extending the term of office of members of Veedividangan Panchayat (Thanjavoor district) under section* 10 (1) *of the Madras Village Panchayat Act*, 1950. [*Laid on the table of the House under section* 10 (1) *of the Madras Village Panchayat Act*, 1950 (*Madras Act X of* 1950).]

97. *Notification issued with G.O. Ms. No.* 1077, *L.A., dated* 25*th June* 1960, *extending the term of office of members of Minjur Panchayat (Chingleput district) under section* 10 (1) *of the Madras Village Panchayat Act*, 1950. [*Laid on the table of the House under section* 10 (1) *of the Madras Village Panchayat Act*, 1950 (*Madras Act X of* 1950).]

98. *Notification issued with G.O. Ms. No.* 1075, *L.A., dated* 25*th June* 1950, *extending the term of office of members of Andanapettai Panchayat (Thanjavur district) under section* 10 (1) *of the Madras Village Panchayats Act*, 1950. [*Laid on the table of the house under section* 10 (1) *of the Madras Village Panchayats Act*, 1950 (*Madras Act X of* 1950).]

99. *Notification issued with G.O. Ms. No.* 1079, *L.A., dated* 25*th June* 1960, *extending the term of office of the members of Tirumangalam and Santhavelur Panchayats (Chingleput district) under section* 10 (1) *of the Madras Village Panchayats Act*, 1950. [*Laid on the table of the House under section* 10 (1) *of the Madras Village Panchayats Act*, 1950 (*Madras Act X of* 1950).]

100. *Notification issued with G.O. Ms. No.* 1965, *Revenue, dated* 21*st April* 1960, *reducing from* 3 *per cent to* 1 *per cent with effect on and from* 1*st April* 1960, *the tax payable on the last purchasing in the State of Wattle bark including dying and tanning materials under section* 3 (2) *of the Madras General Sales Tax Act*, 1959. [*Laid on the table of the House under section* 53 (5) *of the Madras General Sales Tax Act*, 1959 (*Madras Act I of* 1959).]

10th August 1960]

101. *Notification issued with G.O. Ms. No. 1603, Home, dated 31st May 1960 regarding the revision of forms prescribed for refund under Madras Court Fees and Suits Valuation Act, 1955 and Civil Procedure Code. [Laid on the table of the House under section 82 (2) of the Madras Court Fees and Suits Valuation Act, 1955 (Madras Act XIV of 1955).]*

**B: Reports, Notifications and other papers.**

39. Amendment to rule 5 of the Madras Livestock Improvement Rules, 1942, issued in G.O. Ms. No. 1533, Food and Agriculture, dated 26th April 1960 under section 20 of the Madras Livestock Improvement Act, 1940 (Madras Act XV of 1940).



## APPENDIX.

[*Vide* answer to clauses (*a*) and (*b*) of starred question No. 68 asked by Sri T. S. Ramaswamy at the meeting of the Legislative. Assembly held on 10th August 1960, page 272 supra.]

### (*a*) *Maximum yields per acre in crop yield competitions held during the year* 1958–59.

| *Serial number and district* | *Paddy.* | *Cholam.* | *Potato.* | *Groundnut.* |
|---|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) | (5) |
| | LB. | LB. | LB. | LB. |
| 1 Chingleput .. .. .. | 7,625 | .. | .. | 1,900 |
| 2 North Arcot .. .. .. | 7,790 | .. | .. | 2,983 |
| 3 South Arcot .. .. .. | 7,255 | .. | .. | 1,800 |
| 4 Thanjavur .. .. .. | 8,105 | .. | .. | .. |
| 5 Tiruchirappalli .. .. | 7,810 | .. | .. | 1,990 |
| 6 Madurai .. .. .. | 7,990 | .. | .. | 3,575 |
| 7 Ramanathapuram .. .. | 6,850 | .. | .. | .. |
| 8 Tirunelveli .. .. .. | 8,300 | .. | .. | .. |
| 9 Kanyakumari .. .. .. | 7,500 | .. | .. | .. |
| 10 Salem .. .. .. | 7,995 | .. | .. | 2,919 |
| 11 Coimbatore .. .. .. | 7,090 | 6,040 | .. | 4,980 |
| 12 The Nilgiris .. .. .. | .. | .. | 14,800 | .. |

* Crop competitions for cumbu crops were not held in the year 1958–59.

### (*b*) *Maximum yields of crops per acre in State Seed Farms during* 1958–59.

| *Serial number and name of the State Seed Farm.* | *Paddy.* | *Cholam.* | *Potato.* | *Ground-nut.* |
|---|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) | (5) |
| | LB. | LB. | LB. | LB. |
| 1. *South Arcot district*— | | | | |
| Sethiathope .. .. .. | 1,816 | .. | .. | .. |
| Neyveli .. .. .. | 1,988 | .. | .. | .. |
| Vellapakkam .. .. .. | 2,446 | .. | .. | 263 |
| Vandayampattu .. .. | 2,848 | .. | .. | .. |
| Vadakkanandal .. .. | 2,717 | .. | .. | .. |
| Kakuppam .. .. .. | 2,407 | .. | .. | 297 |
| Vanur .. .. .. .. | 2,573 | .. | .. | .. |
| 2. *Thanjavur district*— | | | | |
| Kanchikudikadu .. .. | 2,301 | .. | .. | .. |
| Orathur .. .. .. | 2,572 | .. | .. | .. |
| Deevambalpattinam .. | 2,847 | .. | .. | .. |
| Namasivayapuram .. .. | 2,451 | .. | .. | .. |
| Nedumbalam .. .. .. | 2,898 | .. | .. | .. |
| Veppangulam .. .. | .. | .. | .. | 120 |
| Keeranthi .. .. .. | 2,257 | .. | .. | .. |
| Mahadanapuram .. .. | 2,217 | .. | .. | .. |
| Naganangalam .. .. | 2,148 | .. | .. | .. |
| Tirukadayur .. .. .. | 1,922 | .. | .. | .. |
| Kondathur .. .. .. | 1,890 | .. | .. | .. |
| Marudanallur .. .. .. | 1,596 | .. | .. | .. |
| Sakottai .. .. .. | 1,862 | .. | .. | .. |

10th August 1960]

### (b) *Maximum yields of crops per acre in State Seed Farms during* 1958—59—cont.

| *Serial number and name of the State Seed Farm.* | *Paddy.* | *Cholam.* | *Potato.* | *Ground-nut.* |
|---|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) | (5) |
| | LB. | LB. | LB. | LB. |
| 3. *Coimbatore district*— | | | | |
| Bhavani .. .. .. | 2,900 | .. | .. | .. |
| Sennakpalayam .. .. | 2,022 | 1,060 | .. | .. |
| Pungalur .. .. .. | .. | 383 | .. | .. |
| Kannampalayam .. .. | 1,608 | 1,951 | .. | .. |
| Sedimuthar .. .. .. | .. | 130 | .. | 491 |
| 4. *Nilgiris*— | | | | |
| Kuruthukuly .. .. .. | .. | .. | 2,829 | .. |
| Kakathope .. .. .. | .. | .. | 11,673 | .. |
| Thumanathy .. .. .. | .. | .. | 10,542 | .. |
| Killur .. .. .. | 1,147 | .. | 1,896 | .. |
| Colgrain .. .. .. | .. | .. | 8,021 | .. |
| 5. *Kanyakumari*— | | | | |
| Thirupathisaram .. .. | 2,088 | .. | .. | .. |
| 6. *Tiruchirappalli district*— | | | | |
| Manachanallur .. .. | 2,348 | .. | .. | .. |
| Marudur .. .. .. | 2,449 | .. | .. | .. |
| Vengaikurichi .. .. | 1,531 | 1,050 | .. | 755 |
| Thirukampuliyur .. .. | 1,387 | .. | .. | 120 |
| 7. *Chingleput division*— | | | | |
| Uthukottai .. .. .. | 1,527 | .. | .. | 796 |
| Modaiyur .. .. .. | 1,892 | .. | .. | 59 |
| Sirukaveripakkam .. .. | 578 | .. | .. | 484 |
| 8. *North Arcot district*— | | | | |
| Athiyandal .. .. .. | 3,043 | .. | .. | 994 |
| Marudadu .. .. .. | 2,877 | .. | .. | 1,260 |
| Kilnarma .. .. .. | 2,152 | .. | .. | .. |
| 9. *Madurai district*— | | | | |
| Kappalur .. .. .. | 3,294 | .. | .. | 392 |
| Iyalur .. .. .. | 1,686 | .. | .. | 771 |
| 10. *Tirunelveli district*— | | | | |
| Karaiyiruppu .. .. | 3,318 | .. | .. | .. |
| 11. *Ramanathapuram district*— | | | | |
| Pullur .. .. .. | 277 | .. | .. | .. |
| Devadanam .. .. .. | 2,666 | .. | .. | .. |
| 12. *Salem district*— | | | | |
| Nachiampatty .. .. | 1,914 | .. | .. | .. |
| Papparapatty .. .. | 3,112 | 356 | .. | .. |

